திருமங்கை மன்னர்
திருவாயமுதுதீர்த்த

# சிறிய திருமடல்-
# பெரிய திருமடல்

உரை:
கோக்கலை ஜேராஜன்

திருமங்கைமன்னர் திருவாய்மொழி

# சிறிய திருமடல் - பெரிய திருமடல்



உரை :

கோக்கலை ஜேராஜன்

மகராணி
W—146. அண்ணாநகர் மேற்கு
விரிவாக்கம்
சென்னை—600 101
தொ. பே. எண் 653963

திருமங்கை மன்னர் திருவாயமுதுதிர்த்த
சிறிய திருமடல்—பெரிய திருமடல்

THIRUMANGAI MANNAR
THIRUVAYAMUDHUDIRTHA
SIRIYA THIRUMADAL
PERIA THIRUMADAL

பக்கங்கள் : xxxx + 176 = 216

படிமங்கள் : 1000

முதல் பதிப்பு : 1992



அச்சிட்டோர் : கவிக்குயில் அச்சகம்,
47, நல்லதம்பி தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை—600 005,

வெளியீடு : மகராணி,
W—146, அண்ணா நகர்,
மேற்கு விரிவாக்கம்,
சென்னை—600 101.
தொ. பே. எண். 653963

விலை : ரூ. 30-00





## வாழிய மங்கையர்கோன்

"கலந்த திருக்கார்த்திகையில் கார்த்திகை வந்தோன் வாழியே
காசினியிற் குறையலூர்க் காவலோன் வாழியே
நலந்திகழா யிரத்தெண் பத்துநாலு ரைத்தான் வாழியே
நாலைந்து மாறைந்தும் நமக்குரைத்தான் வாழியே
இலங்கெழு கூற்றிருக்கையிரு மடலீந்தான் வாழியே
இம்மூன்றிலிரு நூற்றிருபத் தேழீந்தான் வாழியே
வலந்திகழுங் குமுதவல்லி மணவாளன் வாழியே
வாட்கலியன் பரகாலன் மங்கையர்கோன் வாழியே."

## உரையாசிரியரின் பிற நூல்கள்

1. இந்து சமயச் சொல் அகராதி

இந்நூல் பற்றி குமுதம் வார இதழ்.

"இந்து மதம் சம்பந்தப்பட்ட பல விஷயங்களுக்குப் பொருள் தெரிந்துகொள்ள உதவுகிறது. ஆங்காங்கே யுள்ள புராண பாத்திரங்கள்பற்றியும் குறிப்புக்கள்"

—நன்றி. குமுதம் 23-7-92

2. அதிவீரராமபாண்டியனார் அருளிய நைடதம் மூலமும் கோக்கலை ஜேராஜன் உரையும் :-

INDIA'S NATIONAL NEWS PAPER
"THE HINDU" ABOUT THIS BOOK

"Naidatham was originally written by AdiVeeraRamaPandiyanaar who was a Pandiya King and had lived around the 16th century A.D. Naidatham comes from the Sanskrit word Naishadha. This is a story of the King Nala and his Queen Damayanthi. There is another work in Tamil on the life of Nala which was called Nalavenpa, authored by Pukalenti. As the name suggests, Nalavenpa is a work written in venpa verse. The present work Naidatham is written in Viruttam metre. Natdatham is composed of 1172 Viruttams,

Mr. Kokkalai J. Rajan has written commentaries with useful notes on certain difficult words and Phrases.

Each Viruttam is nicely presented according to the traditional metre convention. In certain cases the commentator has given the comparable verse of Nalavenpa so that the reader can easily compare the relevant portions and enjoy the literary beautify found in both Naidatham and Nalavenpa. Naidatham is sub-divided into various patalams. The commentator has given a brief introduction to each patalam which will be found useful to any common reader."

"Naidatham is a good piece of literary work Mr. Kokkalai J. Rajan had made the work available to the present day Tamil literary world. The commentator. cum-publisher has to be congratulated on this good venture. Naidathem is a good addition to the field of Tamil Literature."

—Thanks. THE HINDU, Tuesday, May 19, 1992

3. இலக்கியத்தில் கடவுள் வாழ்த்து

இந்நூலைப்பற்றி அமிதசுரபி இதழின் சங்கப் பலகை

"ஓர் ஆழ்ந்த சிந்தனையின் விளைவாகப் படைக்கப்பெற்ற ஆராய்ச்சிப் பெருநூல். எழுபத்தைந்து தமிழ் நூல்களில் இடம்பெற்றுள்ள கடவுள் வாழ்த்துப் பகுதியை ஆழ்ந்து ஆராய்ந்து சிறப்புற உருவாக்கப் பெற்றுள்ள அரிய

திறனாய்வு. தமிழின் பெருங்காப்பியங்கள். சிறு காப்பியங்கள், மேல்கணக்கு நூல்கள். கீழ்கணக்கு நூல்கள், இதிகாசங்கள், புராணங்கள், நீதி நூல்கள் மற்றும் ஆறு பிற நூல்களின் கடவுள் வாழ்த்துக் களைத் தமது கனிந்த தமிழில் தித்திக்கத் தித்திக்க விளக்கியிருக்கிறார் இந்நூலின் ஆசிரியர் கோக்கலை ஜே. ராஜன். பாராட்டிற்குரிய பைந்தமிழ் ஆய்வுத் திரட்டு''

—நன்றி. அமுத சுரபி டிசம்பர் 91

India's National News Paper "The Hindu" about this book.

"The author has made a sincere attempt to collect and annotate the poems on devotional themes that are found in the Tamil epics, narratives, idylls, anthologies, ethical works and some prabandhas. The opening chapter commencs with a study of the poems in Cilappatikarem, addressed to Moon, Sun and Rain and also on Poompukar, the citadel of ihe ancient Cholas and the author has pointed out the significence of nature-worship which was practised originaily in the primitive period when theology and philosophy had not taken shape. Next the author traces the devotional poems found in Civakacintamani, Manimekalai and other epics. These poems extol the glory of Arhat and Budda of the Non-Vedic systems. The invocatory songs prefixed to the Sangam anthologies are also studied. They praise Lord Siva, Muruga and Tirumal. He has also studied the lyrical poems in Paripaadal glo.i-

fying Cevvel and Tirumal. He has also included the prefatory poems of ethical works, eulogising a personal God. In the end, he has included the popular poem in Manonmaniyam, glorifying the Tamil Goddess."

On the whole, the book has a reference value."

—Thanks. The Hindu Dt. 24-12-91

4. உண்பொருள் குண அகராதி :

இந்நூல்பற்றி "ராஜம்" மாதர் மாத இதழ். "நாம் அன்றாடம் உண்ணுகின்ற பல்வேறு உணவுப் பொருள்களின் சரியான பயனும் அவை உடலுக்குத் தரும் பல்வேறு நன்மைகளையும் விளக்கும். கைவச மிருந்தால நோயில்லா நல்வாழ்வு பெறலாம்."

5. நறுந்தொகை விருந்து (இரண்டாம் பந்தி) :

அதிவீர ராம பரண்டியனார் அருளிய வெற்றி வேற்கையின் பாடல்களையே,

1. பெண்டிர்க்கழகு, 2. குலமகட்கழகு, 3. கண்கையர்க் கழகு 4. அறிஞர்க்கழகு, 5. வறிஞர்க்கழகு எனத்தலைப்பாகக்கொண்ட ஐந்கி சிறந்த இலக்கியக் கட்டுரைகள் அடங்கிய நூல். இந்நூல்பற்றி, "அமுதசுரபி" மாத இதழின் சங்கப்பலகை :

"அழகின் சிரிப்பைச் சற்று வித்தியாசமான கோணத்தில் ஆய்வு செய்யும் இந்நூல் இலக்கியச் சுவைஞர்களுக்கு நல்விருந்து"

"ராஜம்" மாதர் மாத இதழ் :

"பெண்மையின் பேரெழிலை மூன்று இலக்கியக கட்டுரைகளில் சித்தரிக்கும் நூல். தமிழின் செழுமை" நூல் முழுதும் தித்திக்கிறது

6. கனவுக் கையகராதி :

Indias National News Paper "The Hindu" about this book.

"Call it a superstition or anything, people in general still believe that dreams have some links with reality. The author has taken pains to compile a dictionary on dreams and their impact on day to day life. A novel experiment, readers should find ihe book interesting. The author himself says that the predictions can be taken as an example and warns against giving too much importance on dreams lest lest one should be branded as being superstitious. It is not uncommon to find certain persons thinking good and bad happenings to their dreams, while others dismiss it as lacking scientific basis."

—Thanks. The Hindu Dt. 21-2-89

7. நறுந்தொகை விருந்து (முதற்பந்தி)

வெற்றிவேற்கை வீரராமன் அருளிய நறுந்தொகையின் முதல் பத்துப் பாடல்களையே—

1. எழுத்தறிவித்தவன், 2. கல்விக்கழகு, 3. செல்வர்க்கழகு, 4. வேதியர்க்கழகு, 5. மன்னவர்க்கழகு, 6. வணிகர்க்கழகு, 7. உழவர்க்கழகு, 8. மந்திரிக்கழகு, 9. தந்திரிக்கழகு, 10. உண்டிக்கழகு. எனத் தலைப்பாகக்கொண்ட பத்து இலக்கியக் கட்டுரைகளடங்கிய நூல். ஆசிரிய மாணவர்கட்குப் பெரிதும் பயன்படத் தக்கது.

எனும் இவையனைத்தும் இவ்வுடலால் துய்த்திட முடியுமே யன்றி உடலை இங்கு நீத்து அங்கு சென்று துய்த்திடுதல் என்பது எப்படி இயலும் எனும் வினாவினை எழுப்புகிறார் திருமங்கையார். இவையனைத்தும் காமத்தின் வழியாகும் பொன்னகர் சென்றும் காமமே முதன்மையானது அந்த இன்பமே முடிவானது

"அன்ன திறத்ததே யாதலால் காமத்தின்
மன்னும் வழிமுறையே நின்றுநாம்..."

என்பதனைத் தெளிவுபடக் கூறிவிடுகிறார்.

"காமத்தின் வழிமுறையே நிற்று நாம்" என்ற பரகால நாயகி; முன்பு எழுதிய சிறிய திருமடலில் "ஊரார் இகழினும் நான்வார் ஆர் பூம் பெண்ணை மடல் ஊராது ஒழியேன்' எனும் இவையிரண்டு எடுத்துக்காட்டுகளும் பெண்ணே தன் ஆசையைப் பேசுவதாகிறது. ஆனால் தமிழ் மகளின் நிலையே வேறு.

"கடல் அன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப் பெண்ணின் பெருந்தக்கது இல்" எனும் வள்ளுவர் வாக்கினுக்கொப்ப

"அன்ன நடையார் அலர்ஏச ஆடவர்மேல்
மன்னும் மடல்ஊரார் என்பதோர் வாசமும்
தெனுரை யிற்கேட்டறிவது உண்டு..."

என்று திருமங்கைமன்னர் நாவில் ஓடுவதும் காண்க. தென்னன் நெறியை நன்குணர்ந்த நாயகி "மன்னும் வட நெறியே வேண்டினோம்" என்று வடநூல்களில் கண்டுள்ள பெண்களின் காமக் களியாட்டங்களை ஒவ்வொன்றாகத்தான் எம்பெருமான்மேல் கொண்டிருந்த காம இன்பத்தைத் துய்த்திட ஆதாரமாகக் கூறுகிறார். அது மட்டுமன்று காமத்தி வழிமுறை நின்றொழுகாதாரை, செழுந்சந்தனக் குழம்பின் தன்மையை உணராதார் எனவும், ஆயன்வேய் இன்னிசை ஓசைக்கிரங்கா'

தார் எனவும் மால்விடையின் மணிபுலம்பலுக்கு வாடாதார் எனவும் பலவுமாகக் கூறி அத்தகு மங்கையர் தம் மலரணை மேல் அவர்தம் மலர்க்குழலும் அல்குலும் மென்முலையும் இன்னிளவாடை தடவத் கண்துயிலட்டும் என்று நையாண்டி செய்கிறார்.

காமத்தின் வழிநின்று மன்னன் இராமன்பின் காடு சென்ற சீதாப்பிராட்டியும், தன்தனையன் தடுத்தும் வேகவதியென்பாள் போர்க்களம் சென்று தன் காதலனை அதட்டிக்கொணர்ந்து புணர்ந்து இன்புற்றதையும், பாண்டவர்களுள் சிறந்தவனாகக் கருதப்பட்ட அர்ச்சுனனை நாகராஜன் மகள் உலுபியென்பாள் வெட்கத்தைவிட்டு அவனை நாகலோகம் தூக்கிச் சென்று புணர்ந்தின்புற்றதையும், பாணாசுரன் மகளான உஷையென் பாள் தான் கனவில் கண்ட ஒரு ஆடவனைத் தன் தோழியின் உதவியுடன் அவன் நித்திரை செய்துகொண்டிருக்கையில் கட்டிலோடு தூக்கிவந்து அவனைப் புணர்ந்து பேரின்பம் அடைந்ததையும் உமாதேவி தவமியற்றி சிவபெருமானை யடைந்து அவன் மார்பில் புதைந்து புணர்ந்து இன்பம் துய்த்ததும், பாவியாகிய நானுமோர்நாள் திருநறையூரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைக் காண கதவைத் திறந்து கண்கள் களிக்கப் பார்த்திருக்கையில் பெரிய பிராட்டியார் அருகிலிருப்பதைக் காணாதவளாய் என் நெஞ்சமும் கைவளை யும், மேகலையும் நீங்கப்பெற்றேன் என்ற தன்னையும் நொந்து கொள்ளும் பரகால நாயகி மன்மதன் தொடுக்கும் மலர்க்கணை களினின்றும் காப்பார் யாருமில்லையே என்றும் பெண்மையும், மென்முலைகளும் எம்பெருமான் மார்பில் தோயாது எனக்கே பாரமாக என் கண்முன் இருந்துகொண்டு மேன்மேலும் வீங்கா திருக்க மருந்தொன்று கொடுப்பாரில்லை; இந்நிலையில் பசுவைத் தொடரும் காளையின் கழுத்தில் கட்டிய மணி ஓயாது அசைந்தசைந்தாடி எழுப்பும் ஒலியும் கொடிய வேலைக் காட்டிலும் கூர்மையாக வந்து என் காதுகளில் பாயும் துன்பத் தினின்றும் தப்பிப் பிழைக்க வழியொன்று இருந்தால் சொல் லுங்களேன் இல்லையேல் இத்துன்பம் விளைவித்த திருத்துழாய் மாலை அசைந்தாடும் மாலையுடையவன் மன்னன் இராவணன் தலைகள் தரையில் உருண்டோட அம்புகளைப் பொழிந்த

சேவகன், இரண்யனது மார்பைக் கூர்மையான நகங்களால் பிளந்து புகழ் படைத்த ஆழிபடை தடகை வீரன், பூமிப்பிராட்டியைக் கூர்நுதிமேல் வைத்து எடுத்த கூத்தன், கடலைக் கடந்து தேவர்கட்கு அமுது படைத்த வள்ளல், மாவலியை மயக்கி உலகனைத்தும் அளந்த தாளான், நீலமணி போன்றவன், வேங்கடத்து வித்தகன், எம்பெருமானை அவன் எழுந்தருளியிருக்கு திவ்யதலங்களில் கண்டு சேவித்து என் நிலையை விண்ணப்பத்தை ஏற்று தனது திருஅருளும், திருமார்பையும் எனக்குத் தந்தருளானாகில், முற்காலத்தில் இடைச்சியர் சேரியிலே தயிரையும் வெண்ணெயையும், திருடி உண்டதும் உரலோடு கட்டுண்டு கிடந்ததும், இந்திர விழாவில் பெருஞ்சோற்றைத் துளிகூட மிச்சமில்லாது உட்கொண்ட வெட்கக்கேட்டையும், பாண்டவர்கட்காக வேலைக்காரனாய் துரியோதனனிடம் தூது சென்ற சிறுமையும், குடக்கூத்தாடித் திரிந்ததும் தென்னிலங்கைப் பாவை சூர்ப்பணகையை அவள் பெண் என்றும் பாராமல் மானபங்கம் செய்ததும், தாடகையின் உயிரைப் போக்கியதுமான அவன் செய்த மற்றும் பல செயல்களையும் அவன் எழுந்தருளியிருக்கும் தலங்கள் தோறும் சென்று சொல்லிக்கொண்டு பரகால நாயகியாகிய நான் சிறந்த அழகிய பனை மடலைக்கொண்டு மடலூராதொழியேன் என்று எம்பெருமானை இவ்வுடலால் புணர்ந்து இன்புற்றிருத்தலே பிறவிப் பயனை ஆண்மாக்கள் அடைந்ததாக மக்களுக்கு உணர்த்துகிறார்.

## மடல்களின் சிறப்பு

சிறிய திருமடலும், பெரிய திருமடலும் உலகத்தார் எண்ணிடாத பக்திநெறியை மக்களுக்கு உணர்த்துவதாகும் சிறிய திருமடலில் கூறமுயன்ற செய்தி முழுமையடையவில்லையென்பதையுணர்ந்த திருமங்கையார் பெரிய திருமடலில் விரித்தும், தெளிவுபடவும் கூறிவிடுகிறார். முன்பே கூறியது போல் மோட்சமென்பது ஒன்று உண்டா இல்லையா என்பதல்ல

இத்திருமடல்களில் ஆழ்வார் பெருந்தகை நமக்கு உணர்த்தத் திருவுள்ளம் கொண்டது. எல்லா ஆன்மாக்களும் எம்பிரானை அடைந்துவிடத் துடிக்கின்றன. அப்படி அடைந்துவிடத் துடிக்கும் ஆன்மாக்கள் அவனை அடையும் மார்க்கத்தில் பிழை இழைத்துவிடுகின்றனர். இவ்வுலகில் இருக்கையில் அறம், பொருள், இன்பம் எனும் முப்பேறுகளை அடைந்து இன்புறாமல் "வீடு" எனும் நான்காவது ஒன்று உண்டென இவ்வுடலை வருத்தி வறுத்து உடலை நீக்கி எழுந்துபோவதென்பதுவும், உடலை இங்கு நீத்து பொன்னுலகம் சென்று உடலுடன் அனுபவிக்கும் இன்பங்களை அனுபவிப்பதாகக் கூறுவதும் உண்மைக்குப் புறம்பானது; ஆதலின் ஆன்மாக்கள் ஒன்றெனக் கலந்திடத் துடிக்கும் எம்பிரானை இந்த உலகில் இந்த உடலுடன் அவனைச் சேருவதே சாத்தியமானதாகும். அப்படி அவனைச் சேர்ந்துவிட்டால் அதுவே மோட்சம். மோட்சம் என்ற ஒரு நிலை இல்லை. அப்படிச் சென்றோர் திரும்பிவந்து சொன்னாரும் இல்லை என்பதே இவர் வாதம்.

இறைவன் எம்பிரானை இந்த உடலுடனே சேர்ந்து மோட்சத்தை இவ்வுலகிலேயே காணவேண்டுமென்பது வைணவம் கூறும் அறநெறியாகும். ஆழ்வார் பெருந்தகை கூறும் இத்தத்துவம் வேறு எந்த சமயத்திலும் இருப்பதாகத் தெரியவில்லை. இத்திருமடல்கள் இதனை வலியுறுத்துவதோடு வைணவம் தனித்தியங்கும் ஒரு மதம் என்பதனை இத்திருமடல்கள் தெளிவுபடக் கூறுவதாகக் காண்கிறோம்.

திருமங்கையார் இந்நூலைப் படைக்கும்பொழுது தென்னெறிக்கு மாசு வராதபடியே படைத்துள்ளார் ஏன்பதும் இவ்வாய்வால் கண்ட உண்மையாகும்.

"காமமுழந்து வருந்தினார்க் கேம
மடலல்லதில்லை வலி"

என்ற வள்ளுவன் வாக்கிற்கொப்ப பரகால நாயகி மடலூர்ந்து விடுவேன் என்று அச்சுறுத்திவருகிறாரேயன்றி மடலூர்ந்து

விடவில்லை. அதிலும் எம்பெருமானுக்கு ஊராரறிய இருமடல்கள் மூலம் தெரிவிக்கிறார் என்பதாக அறிகிறோம். அதற்கு மேல் அவர் மடலூர்ந்ததாகக் காட்டப்படவில்லையாதலின் தமிழ்மறைக்கு மாசு கற்பிக்காமல் இந்நூலைப் படைத்திருப்பது திருமங்கையார் வடநெறியே வேண்டினோமென்றாலும் தென்னெறிக்குப் பங்கம் வராமல் பார்த்துக்கொண்டார் என்று காணும்பொழுது இப்பெரியாரின் திருவுள்ளத்தை நன்கு புரிந்துகொள்ள இந்நூல்கள் ஒரு எடுத்துக்காட்டு.

ஒரு காலகட்டத்தில் சமயங்கள் ஒவ்வொன்றும் போட்டியிட்டுக்கொண்டு தமிழன்னைக்குத் தொண்டாற்றியிருக்கிறார்கள். இத்தகு சமயங்கள் யாவற்றினும் வைணவம் தமிழுக்குப் பெரும்பங்காற்றியுள்ளது என்பதைத் திவ்யப் பிரபந்தங்கள் 3776 யும் கற்றோரே உணரமுடியும்.

மேலும் இத்திருமடல்கள் இரண்டும் மக்களின் அறியாமையைப் போக்க ஆழ்வார் அவர்கள் அருளிச் செய்ததாகும். உலகின் இருளைப் போக்க எழுந்த ஞானஒளி. எம்பெருமானுக்குத் திருவுள்ளமானபொழுது நம்மை நோக்கியருள்வன் என்பது உண்மையாயினும், இங்கு தலைவனைப் பிரிந்த தலைவியின் ஆற்றாமையே உணர்த்துவதாக அமைத்து எம்பெருமானை பாமர மக்களும் அடைந்து அவனுடன் சேர்ந்து இன்பம் துய்த்திட வேண்டுமென்பதே ஆழ்வாரவர்களின் திருவுள்ளமாகும். இவ்வுடலை இவ்வுலகில் நீத்து தேவர் உலகில் சென்று இன்பம் துய்த்திடுவது பற்றிய மாயையை இவர் உடைத்தெறிகிறார். இவ்வுடலுடன் எம்பெருமானைக் காண இயலாத ஒருவன் இவ்வுடலை நீத்துக் காண்பான் என்பது மாயையென்றும் மடமையென்பதாகக் கூறுமிடத்து, "அன்னதே பேசும் அறிவில் சிறுமனத்து அங்கு அன்னவரைக் கற்பிப்போம் யாமே" என்று அறியாமையை நீக்குவதற்காக ஆழ்வார் திருவுள்ளத்தெழுந்ததே இத்திருமடல்கள் என்பதை நன்குணர்த்திட வேண்டும்.

## செய்யுள் அமைப்பு

சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகிய இவையிரண்டும் இரு தனித்தனிப் பாடல்கள். சிறிய திருமடல் ஒரு பாட்டாகவும் பெரிய திருமடல் ஒரு பாட்டாகவே கணக்கிடத் தகுந்தது. பாக்கள் இரண்டும் இரண்டிற்கு மேற்பட்ட அடிகளைக் கொண்டதாகவும் இலக்கணத்தோடு ஒரு பொருளை முற்ற விளக்குவதாகவும் அமையும் அமைப்புக்குப் 'பா' என்று பெயர். இவை, வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பன வாகும். மேலும் இரண்டடியால் வருவது குறள் வெண்பா வென்றும், மூன்றடியால் வருவது சிந்தியல் வெண்பாவென்றும் நான்கடிகளாய் இரண்டாமடியின் இறுதிச் சீர் முதலிரண்டடி களின் எதுகையையுடைய தனிச் சொல்லாய் வருவது நேரிசை வெண்பா, நான்கடிகளாய்த் தனிச்சொல் இன்றி வருவது இன்னிசை வெண்பாவென்றும் ஐந்தடி முதல் பன்னிரண்டடி யாகவருவது பஃறொடை வெண்பாவென்றும் பன்னிரண்டுக்கு மேற்பட்டால் கலிவெண்பாவென்றும் இலக்கண நூல்களில் காணப்படுவதால், திருமடல்கள் இரண்டும் இரு கலி வெண் பாக்களாகவே கொள்ளவேண்டும்.

### சமய நெறி

உலகில் தோன்றிய எல்லாச் சமயங்களும் மனிதன் அடையும் பேறுகள் யாவற்றிலும் வீடு அதாவது மோட்சம் அடைவதே கிடைத்தற்கரிய பேறுகள் அனைத்திலும் மிகச் சிறந்த பெரும்பேறு என்றே போற்றிப் புகழ்ந்து மக்களுக்கு உணர்த்தி வருகிறது. மனிதன் இவ்வுலகில் தோன்றுவதே, பிறப்பதே மோட்சமடைவதற்குத்தான் என்ற கோட்பாட்டை உலகில் எங்கு பரப்பி வருகிறது. இதற்கு பௌத்த மதம் விதிவிளக்கு என்பதை யாவரும் அறிவர். புத்தர்பிரான் கடவுள் மோட்சம் என்பதற்கு அப்பாற்பட்டு அன்பு எனும் சரடுயுத்துள் மக்களை ஒன்று திரட்டியவர், பௌத்த மதம்

நீங்களாக மற்ற எல்லா சமயங்களும் மோட்சம் சென்றடைவதையே தம் உயிர்வாழ்தலின் குறிக்கோள் என்று பறைசாற்றிக் கொண்டிருக்கையில் திருமங்கையார் "ஆரானுமற்று உண்டென்பா ரென்பது தானதுவும் ஓராமை அன்றே" என்கிறார். மோட்சம் செல்லும் பாதையை இம்மன்னர்

"காரார் புரவியேழ் பூண்ட தனியாழித்
தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு"

என்று தன் சிறிய திருமடல் கூறியிருப்பது சிந்தனையைக் கிளறுவதாக அமைந்த பகுதி. இதனைச் சற்று விளக்கமாகப் பெரிய திருமடலில்

"பின்னையது பின்னைப் பெயர்தரு மென்பதோர்
தொன்னெறியை வேண்டுவோர் வீழ்கனியு மூழிலையும்
என்னுமிவையே நுகர்ந்துடலம் தாம் வருந்தித்
துன்னு மிலைக்குரும்பைத் துஞ்சியும் வெஞ்சுடரோன்
மன்னுமழல் நுகர்ந்தும் வண்தடத்தி னுட்கிடத்தும்
இன்னதோர் தன்மையரா யீங்குடலம் விட்டெழுந்து
தொன்னெறிகட் சென்றா ரெனப்படுஞ் சொல்லல்லால்"

என்று மோட்சம் ஒருவன் சென்றான் என்பது வெறும்வெத்திப் பேச்சு என்பதாகக் கூறுமிடத்து மோட்சம் அடைய அவன் இவ்வுலகில் அடையும் துன்பங்களையும் ஒவ்வொன்றாகக் கூறியிருத்தல் ஒருவன் மோட்சமடைய என்னென்ன துன்பங்கட்காளாக வேண்டியுள்ளதென்பது தெளிவாகும். இவ்வாறு வெத்திப் பேச்சு பேசும் மக்கள் சொன்னதையே சொல்லிக்கொண்டிருக்கும் மக்களை, "அறிவில் சிறமனத்தர்" என்றும் "அன்னவரைக் கற்பிப்போம்" என்றும் கூறுவது திருமங்கையார் மனதில் கொண்ட சமயநெறி மற்ற சமயங்களிலும் முற்றிலும் மாறுபட்டதென்பதும் தெளிவதாகும்.

திருமங்கையார் சார்ந்திருந்தது திருவைணவம். திருவைணவ்சமயம் மோட்சம் உண்டு எனும் கொள்கையுடையது எம்பெருமானது மோட்சமளிக்கும் தன்மையு

நம்மாழ்வார் பத்து பாசுரங்களில் பாடி மகிழ்கிறார். இரண்டாம் பத்து எட்டாந்திருவாய்மொழி ஒரு பாசுரம் இங்கு உதாரணத்துக்குக் கொடுக்கப்படுகிறது.

"அணைவது அரவணைமேல் பூம்பாவையாகம்
புணர்வது இருவரவர்முதலும் தானே
இணைவனாம் எம்பொருட்கும், வீடுமுதலாம்
புணைவன் பிறவிக்கடல் நீந்துவர்க்கே"

என்று எம்பெருமான் மோட்சம் அருள்குவன் என்பது காண்க.

என்றாலும் திருமங்கையார் மோட்சம் இல்லையென்று நாத்திகர்கள் கூறுவதுபோல் கூறிவிட்டாரே என்று நினைப்பது பெரும் தவறு.

"... ... ... அறுவகைச்
சமயமு மறிவரு நிலையினை ஐம்பால்
ஓதியை ஆகத்திருத்தினை அறமுதல்
நான்க வையாய்மூர்த்தி மூன்றாய்"

என்று திருமங்கையாரே "அறம் முதல் நான்கு அவை ஆய்" என்று அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு பேற்றினைக் கொடுப்பவன் என்று எம்பெருமானை திருவெழுக்கூற்றிருக்கையில் போற்றியிருத்தல் ஆழ்வார் அவர்கள் மக்கள் அடையும் பேறுகளுள் மோட்சமும் ஒன்று எனத்திருவுள்ளம் கொண்டிருந்தார் என்பது தெளிவு.

மோட்சம் என்பதொன்று இருக்கிறதா இல்லையா என்பதல்ல திருமங்கையார் திருவுள்ளத்தில் இருப்பது. திருமங்கையார் திருமாலையே மனதில்கொண்டவர், திருமாலை அடைந்திடத் துடித்துக்கொண்டிருக்கும் ஒரு ஆன்மா, இறந்தபின் இந்த உடல் சுட்டுச் சாம்பலாகிவிடுகிறது அல்லது மண்ணில் மண்ணோடு மண்ணாகிவிடுகிறது. ஆதலின் இந்த உடலைவிட்டு நீங்கி மோட்சம் செல்லும் வரையிலுககாத்திருக்க திருமங்கையாருக்குத் திருவுள்ளம் இடம்கொடுக்

வில்லை. ஆதலின் எம்பெருமானை இந்த பூத உடலுடன் இப் பூமியிலேயே சேர்ந்திடவேண்டும் என்பதே இவர் அவா.

"கொம்மை முலைகள் இடர்தீரக் கோவிந்தற்கு ஓர் குற்றேவல்
இம்மைப் பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவந்தானென்?"

என்று நாச்சியார் திருமொழியில் கூறியிருத்தலும் காண்க. நம்மாழ்வாரும் இரண்டாம் பத்து ஐந்தாம் திருவாய் மொழியில்,

"திருவுடம் புவான்சுடர் செந்தாமரை கண்கை கமலம்
திருவிடமே மார்பம் அயனிமே கொப்புழ்
ஒருவிடமும் எந்தை பெருமாற்கு அரனேயோ!
ஒருவிட மொன்றின்றி என்னுள் கலந்தானுக்கே"

என்றபாசுரம் திருமங்கையாழ்வாரின் திருவுள்ளம்கூறுவதையே கூறுவதாகக் காண்கிறோம். "ஒருவிட மொன்றின்றி என்னுள் கலந்தானுக்கே" என்பதும் உடலோடு எம்பெருமானைப் புணர்ந்து இரண்டறக் கலத்தலும் ஒன்றாகும் என்பது காண்க. இந்த ஆவல் திருமங்கையிடம் மேலோங்கி நிற்பது காண்கிறோம். ஆதலின் எம்பெருமானின் திருஅவதாரச் சிறப்புகளையே தனக்குக் கிடைத்த ஆயுதமாகக் கொண்டு எம்பெருமானையே இழித்துப் பேசியேனும் தன் பக்கம் இழுக்கமுயல்கிறார். பரகால நாயகிக்குக் கிடைத்தவை எமபெருமான் வெண்ணெய் திருடித் தின்று உரலோடு கட்டுண்டதும், இந்திர விழாவில் பெருஞ்சோறு உண்டதும், துரியோதனனிடம் பாண்டவர் தூதனால் ஒரு ஏவலன்போல் சென்றதும் குடக்கூத்தாடியதும், இராவணர் தங்கையின் முலையும் மூக்கும் பெண் என்றும் பார்க்காமல் அறுத்ததும், தடாகையைக் கொன்றதும் என்ன வீரம் என்று எல்லோரிடமும் சொல்லி மானத்தை வாங்குகிறேனா இல்லையா பார் என்று கேட்பதுபோலும், அப்படி மானத்தை வாங்கிவிடுவேன் என்று பயந்தாகிலும் ஓடோடிவந்து

என்னைச் சேர்ந்து இன்பம் அடைந்திடுவன் என்று புலம்புகிறது திருமங்கையார் உள்ளம். இறைவனை இவ்வுடலால் புணர்ந்திட இந்த உத்தியைக் கையாளுகிறார் பரகால நாயகி. இறைவனை இவ்வுடலால் புணர்ந்து இன்புறுதல் அல்லாது வேறு ஒருமோட்சம் இல்லைஎன்பது இவர் கூறும் சமயநெறி எல்லோருக்கும் ஏற்புடையதாகக் காணப்படுகிறது.

> ''பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடிவந்து என்
> மனக்கடலில் வாழவல்ல மாயமணாள நம்பி!
> தனிக்கடலே! தனிச்சுடரே! தனியுலகே! என்றென்று
> உனக்கிட மாயிருக்கஎன்னை உனக்குஉரித்தாக்கினையே''

என்று பெரியாழ்வார் திருமொழியில் வருவதும் கண்டு மகிழ்க.

## திருமங்கையர் திருச்சரித சுருக்கம்

திருமங்கையாழ்வார் உலகத்துத் தோன்றிய மகான்களுள் ஒப்பற்றவர். இப்பெருமகனார் போன்று வேறு யாரேனும் எம்மொழியிலேனும் இறைவன்பால் தமக்கிருந்த ஈடுபாட்டை இறைவனைச் சேர்ந்திடவேண்டும் எனும் உள்ளத்துடிப்பை இவ்வளவு தெளிவாக எளிமையாக எழிலமிகு தமிழால் பாடியிருக்கின்றனரா என்பது ஐயமே. தன் உள்ளத்துள் எழுந்த கருத்தை அப்படியே ஆணித்திறமாகக் கூறியிருக்கும் இப்பெருமகனாரின் மாண்பு போற்றத்தக்கது. இவ்வாறு போற்றுதற்கும் புனிதத் தன்மைக்கும் எடுத்துக்காட்டாக விளங்கும் திருமங்கையாரின் இயற்பெயர் ''நீலன்'' என்பதுவே, ''திருமங்கை''யென்பது சோழ மண்டலத்தின் ஒரு பகுதியாகும் திருமங்கையென்னும் திருநாட்டில் திருவாலிதிருந்தரி எனும் தேயத்துக்கு மிக அருகிலுள்ள திருக்குறையலூரில். சோழ மன்னனுக்கு சேனைத் தலைவனாக இருந்த ஒருவரது திருக்குமாரராய் அவதரித்தார். இவர் தந்தை தாயார் பெயர்

கிடைத்திலது. இவர்கள் நான்காம் வருணத்தைச் சேர்ந்தவர்கள் என்பது மட்டும் தெரிவதாகும்.

யுகங்கள்தோறும் மகான்கள் தோன்றுவர் என்று கூறுவர். அதன்படி கிருதயுகத்தில் கர்த்தனென்னும் அந்தணனும் திரேதா யுகத்தில் உபரிசரவசு எனும் சத்ரியனும், துவாபர யுகத்தில் சங்கபாலனென்னும் வைசியனுமாகத் தோன்றி உலகை நல்வழிப்படுத்திவந்த மகாத்மாவே கலியுகத்தில் மண்ணுலகத்து இன்னுயிர்களை சன்மார்க்க நெறியில் செலுத்திட நான்காம் வருணமான சூத்திர சாதியில் திருமங்கையார் அவதரித்தார் என்பர். இவர் கலியுகத்தின் முந்நூற்றுத்தொண்ணூற்றெட்டாவதான நளவருடத்தில் பூர்ணிமை பொருந்திய வியாழக்கிழமையில், கார்த்திகை மாதத்தில், திருத்திமா நட்சத்திரத்தில் சார்ங்கமென்ற விஷ்ணுகார் முகத்தின் அம்சமாய் அவதரித்தார்.

சோழ மன்னனிடம் படைத் தலைவனாய் செயலாற்றிவந்த தந்தை வழியில் நம்நீலனும் படைத்தலைமைப் பொறுப்பேற்று போரிடுங்காலங்களில் தம் வல்லமையால் பகைவரை வென்ற காரணத்தால் இவர் ''பரகாலன்'' என்ற சிறப்புப் பெயர் பெற்றார். பரகாலரின் போர் ஆற்றலைக் கண்டு மகிழ்ந்த மன்னன் சோழன் இவரைத் திருமங்கை நாட்டுக்கு அரசனாக்கி முடிசூட்டினான். திருமங்கை நாட்டுக்கு மன்னனான மங்கையர் கோமான் மங்கையருடன் அவர்களின் இன்னிசைப் பாடல்களிலும் நடனங்களிலும் நாட்டங்கொண்டவனாய் இன்பம் துய்த்துவந்தான்.

இவ்வாறு நீலன் மங்கையர் தருமின்பமே பேரின்பமென்றிருக்கையில், அந்நாட்டில் திருவெள்ளக்குளமென்னும் திருப்பதியில், தாமரைப் பொய்கையொன்றில் தேவ மாதர் சிலர்வந்து நீராடிச் சென்றனர். அவ்வமர மகளிரில் திருமாமகளென்பாள் தன் தேவ வடிவைவிடுத்து மானுட வடிவங்கொண்டு தன்ன ந்

தனியளாய் குமுத மலர் கொய்து நின்றாள். அவ்வமையம் ஆங்கு வந்த வைணவ வைத்தியனொருவன் அம்மங்கையைக் கண்டு, அம்மகளைத் தன் இல்லத்துக்கு அழைத்துச் சென்று இல்லாளிடம் ஒப்படைத்து, குமுத மலரினின்றும் கண்டதனால் அவருக்குக் குமுதவல்லி எனப்பெயரிட்டு வளர்த்து வந்தான். அவள் எழில்மிகு மகளாய் வளர்ந்து அவளுக்கேற்ற ஆண் மகன் இவ்வுலகில் உளனோ எனும் ஐயமேற்பட்டு கவலைப் பட்டிருந்தான்.

குமுதவல்லியின் பேரெழில் நீலனுக்கெட்ட உடனே அவளைக் காண விழைந்து திருவெள்ளக்குளத்துக்கு வந்து குமுதவல்லியைத் தனக்கு மனையாளாக்க வேண்டுமெனக் கேட்க, அதற்கு இசைந்த தந்தையிடம், 'தப்தசக்ராங்களும் திவ்வியோரத்துவ புண்டரம் முதலிய பஞ்ச சமஸ்காரமுடைய ஒரு வைணவனுக்கேயன்றிப் பிறர்க்கு வாழ்க்கைப்படேன்' என்று தன் கருத்தைக்கூற நலனும் அது கேட்டு, திருநறை யூருக்குச் சென்று ஆங்கு எழுந்தருளியுள்ள நம்பியெனும் திருநாமங்கொண்ட எம்பிரான் முன்பு நின்று பிரார்த்தித்து, சங்கசக்கர முத்திரைகளைப் பெற்றுத் திருமணம் செய்து கொள்ளுதற்பொருட்டு விரைந்துவர், மீண்டும் அம்மங்கை, 'நீர் ஓராண்டளவும் நித்தியமாக ஆயிரத்தெட்டு திருவைணவர் களுக்கு அமுது செய்வித்து, அவர்களுடைய திருவடி தீர்த்தத் தையும் போனகஞ் செய்த சேடத்தையும் உட்கொண்டாலன்றி உம்மை நான் கொழுநராக ஏற்றுக்கொள்ளேன்' என்றுகூற, அவள்மேல் கொண்டிருந்த வேட்கையால் அதையும் முடித்திட உடன்பட்டு சபதம் செய்துகொடுக்க இருவருக்கும் திருமணம் இனிதே முடிந்தது.

பரகாலர் தமது செல்வம் முழுவதையும் செலவிட்டு சோழ மன்னனுக்குக் கப்பம் கட்டமுடியாததால், சென்னி மன்னன் சினங்கொண்டு பரகாலரைப் பிடித்துவர உத்தரவிட்டான். பரகாலர் தனது ஆடன்மாவெனும் குதிரை மீதேறி எதிர்த்து

போரிட்டு அரசனைப்புறங்கொடுத்தோடச்செய்தார். அரசனும் இவரை போரில் வெல்வதரிதென்பதை உணர்ந்து சீக்கிரம் கப்பம் கட்டும்படி கேட்டுக்கொண்டார். பரகாலரும் காஞ்சீ புராதிபரான பேரருளாளப் பெருமனை வேண்டிநிற்க கருணாகரரான வரதராஜ சுவாமி கனவில் தோன்றி வேகவதி நதிக்கரையில் வேண்டிய செல்வம் உள்ளதென அருளியது தெரிந்து, பொருள் கண்டெடுத்து அரசனுக்குச் செலுத்தவேண் டியது செலுத்தி மிகுந்த பணத்தை பழையபடி பாகவதாராத னத்துக்கு வைத்துக்கொண்டார்.

பரகாலருக்கு செல்வம் சேர்ந்ததைக் கேட்ட மன்னன் அச்சமும் வியப்பும்கொண்டு பரகாலரை வரவழைத்து, தான் செய்த பிழைகளைப் பொறுத்தருளுமாறு வேண்டினார். பிறகு பரகாலர் தாம் பெற்ற செல்வமனைத்தும் செலவழித்து, கைப் பொருளொன்றுமின்றி, வழிப்பறித்தாகிலும் கைங்கரியத்தைத் தடையின்றி செய்துமுடிக்கத் துணிந்து கொள்ளையடித்து திருமாலடியாரைப் பூசித்து வந்தார். எம்பெருமான் இவருக்கு பாடம் கற்பிக்கஎண்ணி, ஒரு அந்தண தம்பதியராய் அவன்முன் தோன்ற அவர்கள் அணிந்திருந்த அணிகலன்கனைத்தும் பெற்று, எம்பெருமான் மணமகனாக இருந்த அவர் காலி லிருந்த மோதிரத்தைக் கழற்ற முடியாமல், பற்களால் கடித்து, வாங்க, எம்பெருமான் மகிழ்ந்து பரகாலருக்கு "கலியன்"என்று பெயர் சூட்டினார்.

பின்னர் இவர் பறித்த பொருட்களை மூட்டையாகக் கட்டி எடுக்க முயன்றபொழுது அது இடம் பெயராதது கண்டு ஆச்சரியப்பட்டு, 'நீ என்ன மந்திரம் செய்தாய்' எனக் கேட்க எம்பெருமானும் அந்த மந்திரத்தை உனக்கு உபதேசிக்கிறேன் என்று, அஷ்டாச்சர மகா மந்திரத்தை உபதேசித்தார். உடனே கருடாருடராய்த் திருமகளுடன் காட்சி தந்தருளினார். அவ்வாறு மந்திரோபுதேசம் பெற்றதால், வடமொழி வேதங்கள் நான்குக்கும் ஆறு அங்கங்கள் அமைந்திருப்பது போன்று அவ்வேதங்களின் உட்பொருளால் நம்மாழ்வார் அருளிச் செய்த நான்கு திவ்வியப் பிரபந்தங்களுக்கும் அங்கங்

களாக அமையும்படி, பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் எனும் ஆறு திவ்விய பிரபந்தங்களைத் திருவாய் மலர்ந்தருளி, திருமங்கையாழ்வார் எனும் திருநாமம் பெற்றார். இவர் நாலுகவிப் பெருமாள், கலியர், ஆலிநாடார் அருள்மாரி, மங்கைவேந்தர், பரவாதி மத்தக ஜகண்டீரவர், பரகாலர், நீலநிறத்து நிமலர் என்று பல பெயர்களால் போற்றப்பட்டார்.

திருமங்கையாழ்வார் தமிழ்க் கவிகளில் தலையாயவர் என்பது தமிழுலகம் நன்கறியும். கவிகளில் ஆசுகவி, மதுரகவி, சித்திரக்கவி, வித்தாரக்கவி என நான்கு வகைகள் உண்டு. திருமங்கையார் மக்கள் கேட்டுப் பரவசப்படும்படியாக ஆசுகவித்துவமும், தொடையும், தொடைவிகற்பமுஞ் செறியச் சொற்சுவையும் பொருட்சுவையும் விளங்கப் பலவகை அலங்காரங்களும் பொலியப் பாடுதலாகிய மதுரகவித்துவமும், கலி வெண்பா முதலியன விரித்துப் பாடுதலாகிய கவித்துவமும், இவ்வாழ்வாருடைய திவ்யப்ரபந்தங்களாகிய பெரிய திருமொழி திருத்தாண்டகங்கள் திருமடல்களாமவற்றில் நன்கு விளங்கும்.

திருமங்கையார் திருத்தலங்கள் சென்று எம்பெருமானை சேவித்து, மகேந்திரகிரிக்கு அருகே சித்தாச்சிரமமெனும் திருக்குறுங்குடியில் வந்து ஆங்கு எழுந்தருளியிருக்கும் நம்பியெனும் எம்பிரானை ஆராதித்து அனுபவித்து, அங்கு தங்கியிருக்க நினைவு பெற்று குமுதவல்லியாருடன் சில காலம் யோக நிஷ்டையில் எழுந்தருளியிருந்து தனது நூற்றைந்தாம் வயதில் சமாதியெனும் மகா யோகத்தால் திருவுடம்பு நீத்து எம்பெருமானைச் சேர்ந்தார்.

பழி பாவங்களைச் சிறிதும் சிந்திக்காமல் பெருமாளுக்கு சேவை செய்த திருமங்கை மன்னன் தமது திவ்விய பிரபந்தங்களால் உலக மக்களை நன்னெறியில் செலுத்திக் கலி தோஷத்

தைக் கடிந்ததனால், "கலிகன்றி" எனும் திருநாமம் பெற்று என்றும் நீங்காத புகழ்பெற்றுத் திகழ்கிறார்.

இத்திவ்யப்பிரபந்தத்தைப் பயில்வோர், பயில்வோர் தம் மக்கள், மக்கள் தம்மக்கள், என்றென்றும் எம்பெருமான் அருள் பொழிய சீரும் சிறப்பும், பேரும் புகழும், வாழ்வும் வளமும் பெற்று வாழ்வாங்கு வாழ்வர் என்பது திண்ணம்.

"வாழிபரகாலன் வாழிகலி கன்றி
வாழி குறையலூர் வாழ்வேந்தன்—வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள்
மங்கையர்கோன்
தூயோன் சுடர் மானவேல்"

கோக்கலை ஜேராஜன்



'ஓட்டிடுவோம் ஓட்டிடுவோம்—நம்மின்
ஒழுக்கமில்லாக் குணத்தை"

அமரர் கவி கந்தசாமி ஆசிரியர், கோக்கலை.

# உள்ளுறை


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | முன்னுரை | x |
| 2. | உரையிசைத்தோனாய்வுரை | xii |
| 3. | சிறிய திருமடலின் தனியன் | 1 |
| 4. | சிறிய திருமடல் | 3 |
| 5. | சிறிய திருமடலின் தனிப்பாடல் | 62 |
| 6. | பெரிய திருமடலின் தனியன் | 64 |
| 7. | பெரிய திருமடல் | 66 |
| 8. | பெரிய திருமடலின் தனிப்பாடல் | 175 |

# முன்னுரை

கண்ணா! என்றால் எங்கிருந்தோ அவன் குழலோசை நம் காதில்வந்து மோதி இதமளிக்கும். கண்ணா! நீ எங்கிருக்கிறாய்? என்று தேடினால் அவன் கமலபாதச் சிலம்பொலி அருகில்வந்து ஆனந்தக் களிப்பூட்டும். கண்ணா! உன்னை எனக்குக் காட்டமாட்டாயா! என்று கண்மூடிக் கலங்கினால், அவன் கண்ணின் மணிகள் மலர்ந்திருக்க மாணிக்கப் புன்னகை பூத்து நிற்பான். என்னைத் தழுவிடாயோ! கண்ணா! என்றால் குலுங்கக் குலுங்கச் சிரித்து நிற்பான். அவன் பவளவாய் முத்துதிர்க்கும்.

கண்ணனின் உன்னத லீலைகளை, பொழியும் அமுதை எண்ணி எண்ணி இன்பத்தில் திளைக்கும் ஆன்மாக்கள் கோடானகோடி. ஆனால் ஆழ்வார்கள் எம்பெருமான் இன்புறுதலையே காணத் துடித்தவர்கள். நாயகியாகப் பாவித்து எம்பெருமான் ஓடோடிவந்து தன்மேல் விழுந்து புணர்ந்து, அவன் முகத்தில் நெளிந்தோடும் இன்ப உணர்வைக் கண்டு மகிழ்ந்திடத் துடித்தவர்கள் ஆழ்வார்கள். தன்னைப் பரகால நாயகியாகப் பாவித்து, இந்த உடலை எம்பிரான் புணர்ந்து இன்புறுதலைக் கண்டுவிடவேண்டும் என்று துடியாய்த் துடித்தவர் திருமங்கையார். உயிர் நீத்தபின் உடலை இவ்வுலகில் விட்டுவிட்டு சுவர்க்கத்தில் எம்பெருமானைச் சேர்ந்திடல் என்பது மாயை அறியாமையால் எழுந்த சொல் என்பதை நன்குணர்ந்தவர். எம்பெருமானை இவ்வுடலுடன் புணர்ந்து கலந்திடத் துடிக்கும் ஆன்மாக்களால், அதாவது எம்பெருமான்மேல் ஆன்மாக்களுக்கு உள்ள உணர்வுகளும்,

துடிப்பும், பிடிப்பும் அவர்களை எம்பெருமான் நிலைக்கு உயர்த்திவிடுவதாகக் காண்கிறேன். உடலால் எம்பெருமானைப் புணர்ந்திடத் துடிக்கும் துடிப்பானது, எட்டிப் பிடிக்க இயலாத ஓர் எல்லையை எட்டிப் பிடித்திடத்துடிக்குமோர் துடிப்பாகும்' இந்த உள்ளத் துடிப்பால் அந்த ஆன்மா, அடையமுடியாத ஒரு நிலையை, உயர்வை எம்பெருமானுக்கு நாயகியாக அவனுடன் கொலுவீற்றிருப்பதாகத் தன்னை, தன் நிலையை உயர்த்தி நிற்பதுவே ஆழ்வாரின் திருவுள்ளமாகும். இவ்வுடலால் எம்பெருமானைப் புணர்ந்து அவன் இன்பம் காணத் துடிப்பதுவே இதன் கருப்பொருளாகும். எம்பெருமானுடன் கொலுவீற்றிருக்கும் அளவுக்குத் தன்னை உயர்த்திக்கொண்ட ஆன்மாக்கள் அந்த நாராயணன் நிலைக்குத்தன்னை உயர்த்திக்கொள்வதோடு ஒரு சரியாசனத்தை பிடித்துவிடுகிறது என்பதுவுமாம். இதுவே இத்திவ்ய ப்ரபந்தம் உணர்த்தும் உண்மை. இத்தகு தத்துவம் வேறு எந்த சமயத்திலும் காணக் கிடைக்காத ஒன்றாகும். "ஓராமை யன்றே உலகத்தார் சொல்லுஞ்சொல்" ஆதலின், "அன்னவரை கற்பிப்போம் யாமே" என்றனர் திருமங்கையாரும் என்பதுவும் காண்க.

காயமே இது "பொய்" என்று ஒருவர் சொல்ல, இல்லை இல்லை இது "மெய்" என எழுந்தது எதிர்ப்பொலி. அந்த வாய்மைக்கு ஆன்மீக வளமூட்டுமவையே ஆழ்வார்களின் பாசுரங்கள். தமிழின் அமுதம் சொட்டுவதைச் சுவைக்கச் தெவிட்டாத பாசுரங்கள்.

இப்பாரங்களைக் கற்போர் எம்பெருமானை உடலாலும் உள்ளத்தாலும் தழுவப்பெற்று அந்த நாராயணனேயெனத் திகழ்ந்துவாழ்ந்திட வாழ்த்துகிறேன்.

**சென்னை - 600101** **கோக்கலை ஜேராஜன்**

**1-9-1992**

# உரையிசைத்தோனாய்வுரை

மடல் என்ற சொல் தமிழ் இலக்கணத்துறையில் மடலூர் தலையே குறிக்கும். திருமங்கையாழ்வார் திருவாய் அமுது உதிர்த்த சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகிய இவை யிரண்டும், திருமங்கையார் பரகால நாயகியாக எம்பெருமான் முன்னிட்டு மடலூரத் துணிந்ததைக் கூறும் பாரசுங்களாதலின் இவை இப்பெயர் பெற்றன. திருமங்கையார் முதலில் சிறிய திருமடலில் "மடலூராது ஒழியேன்" என்று கூறியும் எம்மெருமான் திருவுள்ளமிரங்காதது கண்டு பெரியதொரு அத்திரத்தைவிட்டுப் பார்க்கிறார். அதுவே பெரிய திருமடல் எனும் திருநாமம் பெறுகிறது. சிறிய திருமடலில் மடலூராது ஒழியேன் என்றதால் எம்பெருமான் ஓடோடிவந்து தன்மேல் விழிந்து புணராவிடில் இறந்துபடினும் மடலூராது விடமாட்டேன் என்பதாகக் கூறுகிறார். பெரிய திருமடலில்; சிறிய திருமடலில் காணாத ஏமாற்றம், ஏக்கம் பெரிய திருமடலில் காணப்படுகிறது. சீச்சீ இந்தப் பழம் புளிக்கும் என்ற மனநிலையில் எம்பெருமான் இராவணன் நல்தங்கையின் மூக்கரிந்ததும், தாடகையைத் தென்னுலககேற்றுவித்ததுமாகிய அவன் பெண்மைக்குச் செய்த கொடுமைகளை உலகறியக் கூறிவிட்டு ஊர்வன் பெண்ணை மடல் என்பதும் இவ்விரு திருமடல்களுக்குமுள்ள வேறுபாடாகும். முந்தையது நூற்றைம்பத்தைந்து அடிகளைக்கொண்ட கலிவெண்பாவாதலின் அதற்கு சிறியதிருமடல் என்றும், பிந்தையது இருநூற்றுத் தொன்னூற்றேழு அடிகளைக்கொண்ட கலிவெண்பாவாதலின் இதற்கு பெரிய திருமடல் என்றும் திருநாமம் சூட்டினார்

என்றே கொள்ளலாம். இனி இவ்விரு திருமடல்கள்பற்றிச் சற்று விரிவாகக் காண்போம்.

இறைவனைச் சரண் அடைந்த ஆழ்வார்கள் எம்பெருமானைச் சேர்ந்திடவேண்டுமெனத் துடிக்கின்றனர். ஆனால் அந்த இதயத்துடிப்பு எம்பிரான் காதில் சென்று மோதினாலும் அவன் ஏனோ பாராமுகமாயிருந்துவிடுகிகிறான். இதற்காக சிலர் தவமியற்றுகின்றனர். உண்ணா நோன்பு கொள்கின்றனர். அவன் எழுந்தருளியிருக்குமிடமெல்லாம் சென்று அவன் ஆலயத்தில் பூஜை முதலான நற்காரியங்களைச் செய்து அவன் பாதங்களைப் பற்றிட விழைகின்றனர். என்றாலும் அவன் பாதங்கள் எட்டாத தூரத்திலேயே இருந்துவிடுகிறது. தன்னை ஆட்கொண்டான் பாதங்களில் கண்ணீர் மழை பொழிந்து பாதபூஜை செய்தும் அவன் பார்வை மட்டும் எங்கேயோ நிலைத்துவிடுகிறது. இவையனைத்தும் பயனற்றுப் போனது கண்டு தமது உள்ளக் கிடக்கையை எம்பெருமானுக்கெடுத்துரைக்க எம்பெருமான் மனமிரங்கி தன்னிடம்வந்து ஒன்றெனக் கலந்திடுவான் என்ற எண்ணம் மேலோங்கியே நிற்கிறது. அப்படி விண்ணப்பித்ததும் எம்பெருமான் எழுந்தாரானாகில் என் செய்வது. அதற்கு ஒரே வழி காதலர்கட்கான மடலூர்தலே.

மடலூர்வேன் என்று சொன்னாலேனும் எம்பெருமான் ஓடோடிவந்து தன் அகலம் என் மார்பைச் சேர்த்தழுத்தானோ என்ற ஓர் ஆதங்கம் பரகால நாயகியின் உள்ளத்தை வாட்டி வதைக்கிறது. எண்ண அலைகள் பாசுரங்களாக மிதந்தோடுகின்றன.

மடல் என்பது பனங்கருக்கால் அமைக்கப்பட்ட குதிரையைக் குறிக்கும். "ஒன்றனறியே பலவற்றையும் சொல்லி மன்றின் நடுவே மடல் மாலைச் செலுத்துவது" மடலூர்தல் என்பதாம். இக்குதிரைக்கு ஆவரம் பூமாலையும் மணியும் அணிவிப்பது வழக்கு. மடலூர்தல் என்பது ஆண்பாற் பழக்க மாதவின்தான் காதலித்த பெண்ணின் உருவை வரைந்து குதிரையின் முன்புமாட்டி, தன் உடம்பு முழுதும் நீறு பூசிச்

கொண்டு தன்னுடைய மார்பில் எலும்பு மாலையை அணிந்து மடல்மேல் ஏறித் தெருவில் வருவான். குதிரை மடலால் அமைந்ததாதலின் அவன் நண்பர் சிலர் அக்குதிரையை இழுத்துச் செல்வர். கூர்மையான பனங்கருக்குக் குத்திக் குத்திக் குருதி கொட்டுவது கண்டு மக்கள் மனம்நொந்து அவனையும் அவன் காதலியையும் பெற்றோரை நிந்திப்பர். ஊரார் கூற்றுக்கு அஞ்சியேனும் அவனுக்குப் பெண் கொடுக்க பெண்ணின் பெற்றோர் முன் வருவர்.

கொடுமையான இம்மடலேறுதல் நிகழா வண்ணம் காதலர் பார்த்துக்கொள்வர். பெற்றோரின் இசையாத நிலையிலேயே மடலூர்தல் எனும் நிகழ்ச்சி நிகழ்வதாகும். இனி மடலேறுதல் தான் வழி வேறுவழியில்லை என்ற முடிவுக்கு வந்தாலும் மடலேறுவேன், மடலேறுவேன் என்று தலைவன் கூறித்திரிய லாமேயன்றி மடலேறுதல் கூடாது. ஏனெனில் மடல் ஏறாத நிலை ஐந்திணையாகும். ஐந்திணை என்பது அன்புடைக் காமம் என அழைப்பர். இவ்வன்புடைக் காமம் பலதிறப்பட்ட ஒழுக்க நிலைகளில் ஐந்து வகைகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு வகைக்கும் அக்காதலர் வதியும் நிலத்தின் பெயரையே வைத்து ஐந்திணையை வரையரை செய்துள்ளனர். அவை குறிஞ்சித்திணை, பாலைத்திணை, முல்லைத்திணை, மருதத்திணை, நெய்தல்திணை என்பன.

"ஐந்திணை உடையது அன்புடைக்காமம்
குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம்
நெய்தல் ஐந்திணைக்கு எய்திய பெயரே"

என்பது நம்பி அகப்பொருள். மடலேறிவிட்டால் அது பெருந்திணையாகும். பெருந்திணையென்பது பொருந்தாக் காமம். ஒத்த நலனும், குணமும் ஒழுக்கமும் இளமையும் அன்புடைய ஒருவனும் ஒருத்தியும் காதலித்து நுகரும் இன்பமே அன்புடைக்காமம், ஐந்திணை என்பர். இவையில் லாக் காதல் பெருந்தனை பொருந்தாக் காமம். வழிமாறி மற்றொருவனோடு ஒருத்தியும், மற்றொருத்தியோடு ஒருவனும் தொடர்பு கொள்ளுவதும் விருப்பமில்லாத ஆண் பெண்ணை

வலிந்து கூடுதலும், பொருள் கொடுத்துப் பொது மகளிரைக் கூடுதலும் அன்பில்லா ஒழுக்கங்கள் பெருந்திணையின் பாற்படும்.

நம் காப்பிய நாயகி பூத்துக் குலுங்கும் பருவத்தினள். திருமங்கை மன்னன் திருமங்கையாய் பரகால நாயகியாய் கன்னிப்பெண்ணாய் உருபெற்றுத் திகழ்பவள்.

"காரார் குழலெடுத்துக் கட்டிக் கதிர்முலையை
வாரா வீக்கி மணிமே கலைதிருத்தி
ஆரா ரயில்வேற்க ணஞ்சனத்தின் சீறணிந்து
சீரார் செம்பந்து கொண்டடியா நின்றேன் நான்"

என்று தன்னை அறிமுகப்படுத்திக்கொள்கிறாள் பரகால நாயகி. சிறிய திருமடலின் இப்பகுதி காப்பிய நாயகியின் எழில்கோலம் அழகின் சிரிப்பு பொங்கி வழிவது காண்கிறோம். அவளின் காதலனோ!

"நீரார் கமலம்போற் செங்கண்மா லென்றொருவன்
பாரார்களெல்லாம் மகிழப் பறைகறங்கச்
சீரார் குடமிரண் டேந்திச் செழுந்தெருவே
ஆரா ரெனச்சொல்லி ஆடும் .."

எனக்கு நிகர் ஆரேனுமுண்டோ என்று கூவிக்கொண்டு தெருவில் இறங்கிய வீரம் மிக்க காளை. இருவரும் ஒத்த நலனும், குணமும், ஒழுக்கமும், இளமையுமுடையராதலின் அவர்களுள் காதல் மலர்ந்தது இயற்கை. அன்புடைக் காதல் பெருந்திணையாகும். மையல் கொண்ட நாயகியின் மனம் எங்கெங்கோ சிறகடித்துப் பறக்கிறது. கார் மணி நிறமும் கைவளையும்" காணாது திகைக்கிறாள். அவனை அடைந்து விடவேண்டுமென மனம் துடிக்கிறது. என்ன செய்ய, எனும் வினா தன்னுள் எழுவதை உணர்கிறாள். அந்தக் கட்டழகன் கடைக்கண் பார்வைகூட என்மீது விழவில்லையே! என் நிலையை எப்படி அவனுக்கு எடுத்துக் கூறுவேன்? என்றெல் லாம் எண்ணியெண்ணித் தன் ஆற்றாமையை இச்சிறுமடலில் ஏற்றி வைக்கிறார்.

## சிறிய திருமடல்

சிறிய திருமடல் என்பது எம்பெருமானுக்கு ஒரு சிறிய விண்ணப்பம் என்று கொள்ளினும் பொருந்தும். எம்பெருமானைக் காணா முன்பே காதல் பிறந்துவிடுகிறது.

''ஏரா ரிளமுலையா ரன்னையரு மெல்லாரும்
வாராயோ வென்றார்க்குச் சென்றேனென்
வல்வினையால்''

''சென்றேன் என்வல் வினையால்'' என்கிறார். அவனைத் தன் கண்கள் களிக்கக் காண இயலவில்லை. ஆனால் அதற்குள், தன்னை முழுவதுமாக இழந்ததை உணர்கிறாள்.

''காரார் மணிநிறமுங் கைவளையுங்'' காணாதவளாய்த் திகைத்துப் போகிறாள். அதுமட்டுமன்று அவனைக் கடைக் கண்ணால்கூடக் காணா முன்பே.

''அறிவழிந்து தீரா வுடம்பொடு பேதுறுவேன்...''
பிதற்றும் என்நிலை மாறவேண்டும்''

என்கிறார். என்நிலை கண்டு அவன் ஓடோடிவந்து புணர வேண்டும். இன்றேல் மடலூர்வன் என்பது அவன் காதில் விழவேண்டும். தான் மடலூர்வேன் எனும் செய்தி எம்பெருமானுக்குப் போய்ச் சேரவேண்டும் என்பதே பரகாலநாயகியின் சிறு விண்ணப்பம்.

திருமங்கையார் ஒரு சிறந்த புலவர், நிலமகளின் எழில் தோற்றத்தைக் காண்கிறார். எம்பெருமான் படுகிடையாகக் கிடக்கும் பூமிப்பிராட்டியின் கொங்கைகள் அவள் உடுத்திய ஆடை ஆகியவற்றின் சிறப்பை முதலில் விளக்குகிறார்.

''காரார் வரைக்கொங்கை கண்ணார் கடலுடுக்கை
சீரார் சுடர்ச்சுட்டி செங்கலுழிப் பேராற்றுப்
போரா மார்பிற் பெருமா மழைக்கூந்தல்
நீரார வேலி நிலமங்கை...''

என்று நிலமங்கையின் எழில் தோற்றத்தை சிறப்பிக்கிறார். பெண்மையின் எழில் தோற்றத்தை பூமகளிடம் காண்கிறார். அத்தகு எழில்நிலமங்கைக்குரிய இப்புவியில் வாழ்பவர்கள் அடையும் பேறு மூன்றே. அவை அறம், பொருள், இன்பம் என மூன்றுமாம் என்று, தான் நாட்டங்கொண்ட இன்பத்தை வலியுறுத்த அம்மூன்றினுள்ளும் "இன்பம்" எய்துவார், மற்ற இரு கலைகளையும் பெற்றிடுவர் என்கிறார்.

"ஆராரவற்றி னிடையதனை யெய்துவார்
சீரா ரிருகலையு மெய்துவர்..."

அதாவது இன்பம் நுகர்வோரிடத்து அறமும் பொருளும் நிலைத்திருக்கும் தானாகவே வந்தடையும் என்பதனை விளக்கும் முகத்தான் தனக்கு நேர்ந்த ஒரு நிகழ்ச்சியை இங்கு விளக்குகிறார்.

பரகால நாயகியின் மனம் எம்பெருமான் பக்கம் ஈர்க்கப் பட்டதற்கான காரணத்தையும், தான் எம்பெருமானிடம் சேர்ந்து இன்பம் துய்த்தலையே வேண்டினோம் என்பதற்கான காரணத்தை இங்கு அழகுபட அடுக்கிக்கொண்டேகுகிறார்.

மக்கள் அடையத்தகு பேறுகளுள் அறம், பொருள் இன்பம் எனும் மூன்றினைத் தவிற வேறு ஒன்றும் இல்லையா என்ற வினாவினை எழுப்புவோர். "வீடு" பெறுதலையே பெரும் பேறாகக்கொண்டிருந்தனர். என்று கூறுவோரை,

"ஆரானு முண்டென்பா ரென்பது தானதுவும்
ஓராமை யன்றே .."

என்று அவர்களின் அறியாமையை வெளிப்படுத்துகிறார், அதற்கான காரணத்தையும் தெளிபடவாகக் கூறுகிறார்,

"காரார் புரவியேழ் பூண்ட தனியாழித்
தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு
ஆரா மமுதமங் கெய்தி அதில்நின்றும்
வாரா தொழிவதொன் றுண்டே"

என்ற வினாவினை எழுப்புகிறார். மேக மண்டலத்தில் செல்லும் ஏழு குதிரைகள் பூட்டிய ஒற்றைச் சக்கரத்தை யுடைய தேரில் நிறைந்த ஒளிக்கதிர்களையுடைய சூரிய மண்டலத்தைக் குடைந்து சென்று தேவர் உலகில் அமுதம் உண்டுகளித்திருக்கும் நிலையைப்பெற்று அதினின்றும் திரும்பி வராமல் அங்கேயே கிடப்பதென்பது பொருத்தமுடையதோ சொல்லுங்கள் என்று கேட்கிறார். பொருத்தமுடையதன்று என்பது யாவரும் அறிந்ததே. ஆனால் அவ்வாறு செல்வதுவே மக்கள் அடையும் பேறுகளுள் மிகச்சிறந்தது என்பார், ஓடித் திரியும் முயலை விட்டுவிட்டுக் காக்கை பின் ஓடுபவர்கள் போன்றது என்கிறார். முயல் மண்ணில் விளையாடிக்கொண் டிருக்கும். சில வெண்மையாக அழகுடன் திகழும். அதன் மாமிசம் உடலுக்கு மிகவும் நல்லது. காக்கை பறந்து திரிவது. நிலத்தில் விளையாடும் முயலைப் பிடிக்காது காக்கையைப் பிடித்துத் திரிவது போன்றவர்கள், சூரிய மண்டலத்தைத் தாண்டி மோட்சம் செல்ல விரும்புபவர்கள் என்பதாகக் கூறுகிறார். திருமங்கையார் இவ்வாறு கூறுமிடத்து எம்பெரு மானினும் மிக்கதோர் மோட்சமொன்றுண்டோ என்பதாகக் கூறுகிறார் என்றே கொள்ளவேண்டும். எம்பெருமான் என்முன் எழுந்தருளியிருக்க மோட்சமென்று ஒன்று உண்டு எனத் திரிவோரையே முயல்விட்டுக் காக்கை பின் செல்வார் எனக் குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

திருமங்கையார் நான்காம் வருணத்தவர் வீரமரபில் தோன்றியவர். அவர் காடுகளில் சென்று முயல் வேட்டையாடி சமைத்துண்டுகளித்திருக்கவேண்டும். முயல் இறைச்சி உண்பதால்,

"கடுகிய நடையுண்டாகுங் கனத்ததோர் பித்தமேகு
முடுகிய வீளைகாச முதிர்ந்ததோர் சுவாசம் போகுஞ்
சடுதியில் வெருண்டேயோடுந் தனிமுசற் கறியினாலே
கொடுமயிற் கண்ணாய்வாதங் குறைந்திடு மலமிறங்கும்"

என்பது பதார்த்த குண சிந்தாமணி. இதற்கான விளக்கம் உரையாசிரியரின் "உண் பொருள்குண அகராதி" காண்க.

திருமங்கையாரின் வீரமிகு வாழ்க்கைக்கும் முயற்சுறி வலுவூட்டியது போலும். முயலைவிட்டுக் காக்கை பின் செல்வோர், "இருக்கிறதை விட்டுவிட்டுப் பறக்கிறதைப் பிடிப்பவன்"போல எனும் நாட்டுப்புறப் பழமொழியை ஒக்கும். திருமங்கையார் காக்கை பின் போவார் ஒரு பக்கமிருக்க அம்மையாருக்கு நேர்ந்த ஒன்றைத் தம் தோழியருக்குக் கூறுவதாகக் கூறுகிறார்.

"நீரார் கமலம்போற் செங்கண்மா லென்றொருவன்" தன்னை ஆட்கொண்டதைக் கூறுமிடத்து

"ஆரானுஞ் சொல்லிற்றுங்கொள்ளேன் அறிவிழந்து
திராவுடம்பொடு பேதுறுவேன்..."

என்று தன் ஆற்றாமை நிலையைக் கூறுகிறார். இங்கு பரகால நாயகி எம்பெருமான் வயப்பட்டு, யார் என்ன சொல்லியும் கேளாதவளாய், எது கொடுத்தும் ஏற்றுக்கொள்ளாதவளாய், சுயநினைவிழந்து, அவனை அடையமுடியா இவ்வுடம்பு செத்து மடியாதா என ஏங்கித் தவிக்கும் தன் பெண்ணைக் கண்ட தாயானவள்,

"சீர்ஆர் செழும்புழுதி காப்பிட்டுச் செய்குறிஞ்சித்
தாரார் நறுமாலைச் சாத்தற்குத் தான்பின்னும்
நேரா தனவொன்று நேர்ந்தாள்..."

அதனாலும் தீராத என் மனநோயைக் கண்டு பாட்டிமார்கள் குறி கேட்டால் இவளைப் பிடித்திருப்பவன் யார் என்பது வெளிப்படும் என்கின்றனர். கட்டுவச்சி அங்கு வந்து சேர்கிறாள். இவளைப் பிடித்திருப்பவன், ஆயிரம் பேருடையான் என்றாள். கார்மேகம் போன்ற திருமேனியுடையவன் என்றாள். அழகிய வலம்புரிச் சங்குடையவன் என அபிநயித்துக் காட்டினாள்.

"நீரேது மஞ்சேன்மின் நும்மகளைநோய் செய்தான்
ஆரானு மல்லனறிந்தே னவனைநான்"

என்கிறாள். யாரால் இலங்கை பொடிப் பொடியானதோ, அராலே கல்மாரி காத்தது, ஆழிநீர் கடைந்து, ஆநிரை மேய்த்தது. உலகெலாம் உண்டு உமிழ்ந்தது, ஆயர்பாடியில் அசோதைப் பிராட்டி மோர் கடைந்து போகுமளவும் தூங்கு பவன்போல படுத்திருந்து அவள் வெளியே சென்றதும் வெண்ணெய் திருடி விழுங்கியது கண்டு, ஒரு நெடுங் கயிற்றால் ஊரார்கள் காண உரலோடு இடுப்பை அழுந்தக் கட்டியிருந்தது, நீர் நிறைந்த நெடுங்கயத்துள் ஆயிரம் தலை நாகன் மேலிருந்து நர்த்தனமாடியது, தன் சீதைக்காக சூர்ப்பணகையை மான பங்கம் செய்தது. கரனை வதைத்தது, இராவணன் தலைகள் பத்தும் உருண்டோடச் செய்தது, இரண்யன் குட்லைப் பிடுங்கி மாலையாக அணிந்துகொண்டு ஆரவாரம் செய்தெழுந்தது, வாமனனாக மூவடி மண் கேட்டு உலகெலாம் அளந்தது, மந்தார மலையை மத்தாகவும், பாம்பைக் கயிறாகவும்கொண்டு கடலைக் கடைந்து அமுதம் பெற்றது. கஜேந்திராழ்வாரைக் காத்தது ஆகிய செயல்களைச் செய்தவன், பேர் ஆயிரம் உடையவன் அவனே இவள் மனநோய்க்குக் காரணமானவன். வேறு யாருமல்ல எனக்கூறக்கேட்டதாய், "அவன் ஆகில் பூதுழாய் தாராது ஒழியுமே' என்று மனம் தேறியவளாய்ச் மசன்றுவிட்டாள்.

"ஆனால் என் நிலை வேறு. அவன் திருமேனி கண்டது முதல் உருமாறி வாய் பிதற்றித் திரிகிறேன். வாடை என்னை வாட்டுகிறது. இத்துன்பத்தினின்றும் விடுபடும் வகையறியேன். என் மனமானது அவனிடம் சென்று சிறந்த திருத்துழாய் மாலை தருவான் தரமாட்டான் என்பதைத் தெரிந்துவா என்றேன். ஆனால் சென்ற என் மனம் திரும்பாது அவனிடமே இருந்துவிட்டது. என் மனமே என்னைவிட்டு நீங்கிய பின் எனக்கு இங்கு உதவி செய்வார்யாருமில்லை. மெழுகுபோல் என் உயிர் நீராயுருகா நின்றது. என் நீண்டகன்ற கண்கள் உறங்கமாட்டாது எம்பெருமானின் திருநாமங்களையே சதா உச்சரித்துக்கொண்டே வாய் பிதற்றிக்கொண்டேயிருக்கிறது. கடல்போன்றும் அளவிடமுடியாக் காமத்தையுடையவர்களே

அது செய்யும் துன்பத்தையறிவார். வாசவதத்தையென்பாள் தன் தோழியரனைவரையும் நீத்துத் தன் காதலன் பின்போனாளே. அவளை யாரும் தூற்றவில்லை. அப்படியிருக்க என்னை மட்டும் நிந்திப் பதேனோ. ஆதலின் நான் அவன் கார்மேகம் போன்ற மேனியைக் காணுமளவும் அவன் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடம் வடதிசை மதுரை ஆகிய திருத்தலங்கள் எல்லாம் ஒன்றும்விடாமல் செங்கண் நெடியோனை, தேன்துழாய்தாரனை, தாமரைபோல் கண்ணானை, அவன் எண்ணமுடியாத ஆயிரம் திருநாமங்களைப் பிதற்றிக்கொண்டு பெரிய தெருவழியே, ஊரில் உள்ள அனைவரும் பழித்தாலும் நான் நீண்டு அழகிய பனைமட்டையைக்கொண்டு மடலூராது ஒழியேன்" என்கிறார் நம் பரகால நாயகி.

திருமங்கைமன்னர் ஓர் ஆடவர். சிறந்த போர் வீரர், குமுதவல்லியை மணந்து இல்லற இன்பம் துய்த்தவர். என்றாலும் ஆழ்வாருக்குப் பிராட்டித் தன்மை நேர்ந்ததற்கு காரணம் எம்பெருமானது பேராண்மைக்கு முன் திருமங்கை மன்னரின் ஆண்மை பெண்மையானது எனலாம். ஆண் பெண் இன்பநுகர்ச்சியில், ஆண் பெண்ணிடம் அடையும் இன்பத்தினும் பெண் ஆணிடம் பெறும் இன்பத்திற்கு எல்லையில்லை. தன் உயிர் நாயகன் தன்னைப் புணர்ந்து இன்பம் துய்த்தான் எனக் கண்ட பெண்மை புலகாங்கிதமடைகிறது. அவனுக்கு மேலும் மேலும் இன்பம் தந்திடத் துடிக்கிறது. இந்தத் துடிப்பு ஆணிடம் இல்லை. பெண்மை பெறும் இன்பம் மற்றுமொரு உயிரைப் படைத்திடவேண்டும் என்ற பேரவா பெண்மையை அழகில் மிதக்கச் செய்கிறது. கருவுற்ற தாய் பொலிவு பெற்றுத் திகழ்கிறாள். அந்த உயிர்த் துடிப்பைப் பெண்மைதான் உணர முடியும். ஆண்மைக்கு அதனை உணரும் வாய்ப்பு இல்லை. எம்பெருமான் உலகநாயகன், அவனே எல்லாமாய், எல்லாம் அவனாய் இருக்கும் எம்பெருமானைச் சேர்ந்து பெண்மை அடையும் பேரின்பத்தை அடைந்துவிடவேண்டுமென்பதே பரகால நாயகியின் நோக்கமாகும். எம்பெருமானை இவ்வுட

லால் சேந்து இன்பம் நுகர்ந்திடவேண்டும் என்பதே அடையத் தக்க பேறுகளில் சிறந்ததெனக் கொள்கிறார். "மடல் ஊராது ஒழியேன்" என்றதால் எம்பெருமானைச் சேராது செத்து மடியேன் என்பதுவுமாம் என்பதனை மனதில் கொள்ள வேண்டும். சுவர்க்கம் என்பது மோட்சம் என்பதும், நரகம் என்பதும் அவனே. அவனைச் சேர்ந்து விடுவதுவே மோட்சம் அவனின்றி மோட்சமென்பது வேண்டாம் என்பதாகிறது.

திருமங்கையாழ்வாரின் இத்தத்துவம் வேறு எந்த சமயத்திலும் காணக்கிடைக்காத ஒன்று. இவர்தம் கொள்கை வைணவம் தனித்தியங்கும் ஒரு சமயம் என்பதையும் உறுதிப் படுத்துகிறது. அந்த உறுதிப்பாட்டை மேலும் வலுப்படுத்துவதே பெரிய திருமடல்.

## பெரிய திருமடல்

மடலூர்வன் என்ற சிறிய திருமடலுக்கு செவிசாய்க்காத எம்பிரான் என்றாகிலும் ஓடோடிவந்து தன்னைப் புணர்ந்து இன்பம் துய்த்திடுவன் என்ற எண்ணம் மேலோங்கியே நிற்கிறது. மடலூர்வேன் என்று யாவருமறியக் கூறியும் எம்பெருமான் எழுந்திராது பரகால நாயகிக்கு எப்படியாகிலும் அவனை அடைந்தே தீருவது என்ற எண்ணத்தை மேலும் உறுதிப்படுத்துகிறது. சிறியதொரு மடல் எழுதி பெரியதொரு இடத்தைப் பெற்றிட நினைந்தது தவறு என்பதையுணர்ந்து, பெரியதொரு மடலைத் தீட்டுகிறார். சிறிய திருமடலில் தெளிவுபடக் கூறாதவற்றை இங்கு தெளிவுபடுத்துகிறார். கற்போர் மனம் களிப்பெய்திட சொல் விளையாட்டுக்கள் இங்கு ஒளிவீசி மிளிர்வது காண்கிறோம். சிறிய திருமடலில்.

"பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே அம்மூன்றும்
ஆராயில் தானே அறம்பொருளின்பமென்று..."

என்று, இவ்வுலகில் மானிடம் அடையும் பேறுகளில் மூன்று பேறுகளை மட்டும் குறிப்பிட்ட பரகால நாயகியார் பெரிய திருமடலில்

"மன்னு மறம்பொரு ளின்பம்வீ டென்றுலகில்
நன்னெறி மேம்பட்டன நன்கன்றே..."

என்று நான்கு பேறுகளாக விரிவுபடுத்துகிறார். முன்பு "ஆரானும் சிக்கனமற்று உண்டென்பார்" என்பதிலுள்ள "மற்று" எனும் சொல் இங்கு "வீடு" எனத் தெளிவாகிறது மேலும் சிறிய திருமடலில் இந்த மூன்று பேறுகளையும், "பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே" என்றவர், பெரிய திருமடலில்

"முன்னந் திசைமுகனைத் தான்படைக்க மற்றவனும்
முன்னம் படைத்தனன் நான்மறைகள்-அம்மறைதான்
மன்னு மறம் பொரு ளின்பம் வீடென்றுலகில்
நன்னெறி மேம்பட்டன..."

என்று தெளிவுபடுத்துகிறார். "பாரோர் சொலப்பட்ட" என்றது இங்கு நான்மறைகள் கூறியவை என்பதாக விரிவு படுத்திக் கூறுகிறார். அறம், பொருள், இன்பம் இம்மூன்றையும் விடுத்து "வீடு" செல்ல விழைவோர் என்னென்ன துன்பத்துக் குத் தங்களை ஆட்படுத்திக் கொள்கின்றனர் என்பதனை பெரிய திருமடல் தெளிவுபடக் கூறுவது காண்கிறோம்.

"தொன்னெறியை வேண்டுவோர் வீழ்கனியுமூழிலையும்
என்னுமிவையே நுகர்ந்துடலம் தாம் வருந்தித்
துன்னு மிலைக்குரம்பைத் துஞ்சியும் வெஞ்சுடரோன்
மன்னு மழல்நுகர்ந்தும் வண்தடத்தி னுட்கிடந்தும்"

என்று கூறிய பரகால நாயகியாரின் சொல்வன்மை நம்மை வியக்க வைக்கிறது. அவர் மேலும் கூறுகிறார். இத்துணை துன்பங்கட்குட்பட்டு, "ஈங்குடலம் விட்டெழுந்து தொன் னெறிகட் சென்றாரெனப்படுஞ் சொல்லால்" என்று கூறி, இது வெறும் வெத்திப் பேச்சு என்கிறார். வெறும் சொல் அல்லாமல் வேறு என்ன இருக்கிறது. "இன்னதோர் காலத்து இனையார் இது பெற்றார் எனவும் கேட்டு அறிவதில்லை" இந்த உடலைத் துன்புறுத்தி உடலை நீத்துச் சென்றார் இன்னது அடைந்தார்

என்று சொல்லக் கேட்டதில்லை என்கிறார். இந்த உடலுடன் எம்பெருமானைப் புணர்ந்து இன்பம் துய்த்திடாது இவ்வுடலை நீத்தபின் இவர்கள் என்னதான் செய்யமுடியும், செய்ய இயலும்? இவ்வுடலால் எம்பெருமானை அவன் விரும்பியபடியெல்லாம் இன்பம் அனுபவிக்காமல் இவ்வுடலைத் துன்புறுத்தி பாழாக்குகிறார்கள் என்று உள்ளம் நொந்து கொள்கிறார்.

"தொன்னெறிகட் சென்றாரைச் சொல்லுமின்கள்" என்று சொன்னால் "சொல்லாதே" அன்னதே பேசும் அதாவது சொன்னதையே திருப்பித் திருப்பிக் கூறும் மக்களை, "அறிவில் சிறுமனத்தார்" என்கிறார். இவர்கள் என்ன சொன்னாலும் கேட்கமாட்டார்கள். ஆதலின்,

"அன்னவரைக் கற்பிப்போம் யாமே"

என்கிறார். சிறிய திருமடலில் "காரார் புரவியேழ் பூண்டதனி யாழித்தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு ஆராவமுதமங் கெய்தி" என்ற பகுதியை தேவர் உலகில். "ஆரா அமுதம் அங்கெய்தி" என்ற பகுதியை, இப்பூவுலகில் உடலை வருத்தி தேவர் உலகு செல்பவர்கள் துய்க்கும் இன்பத்தை பெரிய திருமடலில் அடுக்கியடுக்கிக் காட்டுகிறார். "ஆயிரம் கண் வானவர்கோன்" என்றதிலிருந்து இன்னமுதம் "மாந்தியிருப்பார்" என்பது முடிய இவ்வுடலைவிட்டு பொன்னகரில் ஒருவன் துய்த்திடும் இன்பம் படம்பிடித்துக் காட்டப் படுகிறது.

"கொன்னவிலுங் கோளரிமாத் தான்சுமந்த கோலஞ்சேர்
மன்னிய சிங்காசனத்தின்மேல் அமர்ந்து"

கவரி பொதி அவிழ்ந்து, இன் இளம் பூ தென்றல் இயங்க, மென்இயலார் வெண்முறுவல், அவர்தம் மானோக்கு இன்இசை, வண்டு அமரும் சோலை, மழைதடம் கண்ணார் மின் இடையரோடு விளையாட்டு, மாணிக்க மஞ்சரி, செம்பொன்செய் மண்டபம், அன்னம் நடை அரம்பையர், இளமுலைமேல் நல்நறு சந்தனம், தாங்க அருசீர்மின் இடைமேல் கைவைத்து

# சிறிய திருமடலின் தனியன்

(பிள்ளை திருநறையூரரையர் அருளியது

நேரிசை வெண்பா)

முள்ளிச் செழுமலரோர் தாரான் முளை மதியம்
கொள்ளிக்கென் னுள்ளங் கொதியாமே—வள்ளல்
திருவாளன் சீர்க்கலியன் கார்க்கலியை வெட்டி
மருவாளன் தந்தான் மடல்.

அரும்பதவுரை :- முள்ளிச் செழுமலர் - செழுமையாகிய முள்ளி மலர். ஓர் - ஒப்பற்ற. தாரான் - மாலையை அணிந் தவன். வள்ளல் - வேண்டியவர்க்கு வேண்டியதனைத்தும் கொடுப்பவன். கெட்டவர்கட்குக் கேட்டபடி வந்தருளுபவன். திரு - இலக்குமி. ஆளன் - ஆள்பவன். திருவின்நாயகன். மரு - பொருந்திய. அமைந்தவாளன் - சக்கராயுதம் தாங்கி யவன். வாளம் - வட்டம், சக்கராயுதம். கார் - தீயவை. கருமைத் தீமைக்காகி வந்தது. கலி - துன்பம். அறியாமை, வெட்டி - அழித்து. சிதைத்து துன்பங்களையும் அறியாமை யையும் சிதைத்து என்பதாம். சீர்க்கலியன் - திருமங்கை யாழ்வார். முளைமதியம் - உதித்தெழும். சந்திரன். கொள் ளிக்கு - நெருப்புக்கு. தீச்சடருக்கு. என் உள்ளம் - என் மனம். கொதியாமே - வெந்து போகாமல் இருக்க. தந் தான் மடல் - திருமடல் எனும் இத்திவ்ய பிரபந்தம் அருளினான்.

விளக்கவுரை :- செழித்து வளர்ந்த முள்ளி மலர்களால் அமைந்த ஒப்பற்ற மாலையை அணிந்து கொண்டிருப்பவரும் வள்ளல்தன்மையுடையவரும். பொருந்தியவாளையடையவரும், அறியாமையை ஒழித்தவருமான திருமங்கையாழ்வார். முளைத் தெழும் சந்திரனாகிய கொள்ளியிலே என் உள்ளம் கொதிப் படைந்து வெந்து போகாதிருக்கும்படி சிறிய திருமடம் தந்தருளினான். காவலனைப் பிரிந்த காதலி தன் ஆற்றா மையை வெளிப்படுத்துவதே போன்று அமைந்த செய்யுள்

ஆற்றாமையால் அவருக்கு சந்திரன் உதயம் கொள்ளியாய்க் காய்ச்சுகிறது. எம்பெருமானாரைப் பிரிந்திருக்கலாற்றாது பிள்ளை திருநறையூரரையர் தன் ஆற்றாமையை, "முளை மதியம் கொள்ளிக்கென்னுள்ளங் கொதியாமே" என்று இந்நிலைக்குத் தன்னை வீழ்த்தியவன், "முள்ளிச் செழுமலரோர் தாரான்" அவன், "வள்ளல்", "திருவாளன்", "கார்க்கலியை வெட்டியவன்", "மருவாளன்" என்று எம்பெருமானாருக்கும் அடைமொழி கொடுத்துப் பாடியதே போன்று, பிரிவு எனும் துன்பத்தினின்றும் காத்திட "சீர்கலியன் தந்தான் மடல்" என்கிறார். இத்தனியனமைத்த பிள்ளை திருநறையூரரையரும் திருமங்கையாழ்வார் போன்று பக்தி பரவசத்தில் அருளிய பாசுரம் என்பது காண்க.

தலைவனைப் பிரிந்த தலைவிக்கு மதியமும், மல்லியும் தென்றலும் தீயாய்ச் சுடுபவை என்பது தலைவனாகிய எம் பெருமானை அடையத் துடிக்கும் அடியார்களுக்கும் அதேகதி யென்பதாக இப்பாசுரம் உணர்த்துகிறது. "முள்ளிச் செழு மலரோர் தாரான்" என்றது கலியனுக்கு முள்ளி மலர்மாலை ஏற்றது போலும். தாமரை எனும்வட சொல்லுக்கு முளரி என்பதே தமிழ்ச்சொல். முளரி எனும் தமிழ்ச்சொல் "முள்ளி" என்று செய்யுள் நயத்துக்காக மருவிற்றென்றும் கூறலாம், "மதியம்" என்ற சொல்லில் "அம்" என்பதை சாரியாகக் கொள்வர். என்றாலும் "மதியம்" என்ற சொல் முழுமதியைக் குறிக்கும். பிரிந்தார்க்கு மிகுந்த துன்பம் கொடுப்பது முழுமதியே. அதுவே மதியம். "கார்கலியை வெட்டி"! என்றதில் "கார்" இருள். துன்பம். "கலி" என்றது அறியாமையையும் இருள் எனும் அறியாமையை, எம்பெருமானை உணராத அறியாமையை அழித்து என்பதுமாம். வெட்டி என்பதை வினையெச்சமாகக் காண்க. சீர்கலியன் என்பது திருமங்கையாழ்வாருக்கான சிறப்புப் பெயர்.

**தனியன் உரை முற்றும்**

# திருமங்கை மன்னர் திருவாயமுதுதிர்த்த சிறிய திருமடல்

நூற்றைம்பத்தைந்து அடிகள் கொண்ட
கலிவெண்பா

[நாதநாமக்கிரியை இராகம் - ஆதி தாளம்]

காரார் வரைக்கொங்கை கண்ணார் கட்லுடுக்கை
சீரார் சுடர்ச்சுட்டி செங்கலுழிப் பேராற்றுப்
பேரார மார்பிற் பெருமா மழைக்கூந்தல்
நீரார வேலி நிலமங்கை யென்னுமிப்
பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே—அம்மூன்றும்
ஆராயில் தானே அறம்பொரு ளின்பமென்று

அ - ரை:- கார்ஆர் - மழைமேகங்கள் தவழ்ந்து வரும் மேகக் கூட்டங்கள் நிறைந்த, வரைகொங்கை - மலை போன்ற முலைகளையுடையவள். மலைகளை முலையாக உடையவள். கண்ஆர் - இடத்தையுடைய. கண் - இடம். உடுக்கை - உடை, ஆடை, சீலை. கடல் உடுக்கை - கடலே ஆடையாக. சீர்ஆர் - சிறப்பு நிறைந்த. சுடர் சுட்டி - சுடர் வீசும் அணி கலன். சுட்டி - நெற்றியில் அணியும் ஓர் வகை ஆபரணம். ஒளி வீசும் நெற்றிக்கும் பொருந்தும். செம் - சிவந்த. கலுழி - கலங்கிய நீர். காட்டாறு, வெள்ளம். பேர்ஆறு - பெரிய ஆறுகள். பேர்ஆரம் - புகழ் மிக்க மாலை. துளசி மாலை. மார்பின் - மார்பையுடையவன். பெருமாமழை கூந்தல் - பெருத்துக் கருத்த மேகக் கூட்டங்களைக் கூந்தலாக உடையவள். நீர் ஆரம்வேலி - ஆரம் நீர் வேலியாக அமைந்த, ஆவரண நீர் காப்பாகவுடைய. நிலமங்கை - பூமகள். இப் பாரோர் - இப்பாரில் உள்ள மக்கள். சொலப்பட்ட - சொல்

லப்பட்ட. கூறும்பேறு, மூன்றன்றே - மூன்றேயாகும். ஆரா யில்தானே - ஆய்ந்து. நோக்குமிடத்து. அறம் பொருளின்ப மென்று - அறத்தின் வழி நிற்றலும், பொருளீட்டலும், இன் பம் துய்த்தல் என இம்மூன்று பேறுகளே என்று,

வி - ரை:- கார்மேகங்கள் சூழ்ந்த திருமலைகளையே முலைகளாக உடையவளாயும், அகன்ற கடலையே சேலையாக உடுத்தியவளாயும், சீர்மிகு கதிரவனை ஆபரணமாக அணிந் தவளும், சிவந்து கலங்கிய பெரிய ஆறுகளை சிறந்த மாலை களாக உடையவளாயும், ஆவரண நீரை வேலியாக உடையவ ளாயுமான பூமிப் பிராட்டி எனும் இந்நில வாழ்மக்கள் கூறும் பேறுகள் மூன்றே. அம்மூன்றையும் ஆராய்ந்து பார்க்கில் அவை அறம் பொருள் இன்பம் என்பன.

முதல் நான்கு அடிகள் "நீராரவேலி நிலமங்கை" என்பது முடிய நிலமங்கையைச் சிறப்பிக்கும் பகுதி யாகும். காரார் வரை கொங்கை என்றது கார்மேகங்கள் சூழ்ந்த மலைகளை இரு கொங்கைகளாகச் சிறப்பிக்கிறார். முலைகளின்மேல் கூந்தல் தவழ்வது போன்று மலை களின்மேல் கார்மேகக் கூட்டங்கள் பவனி வருவதைக் காண் கிறார். வரை கொங்கையென்றது திருமாலிருஞ்சோலையும் திருவேங்கடமுமாகும். இங்கு மேரு முதலிய மலைகளைக் கூற இயலுமெனினும் நாயகன் விரும்பிப் படுகிடையாய்க் கிடக்கும் இடங்களாகிய திருமாலிருஞ்சோலையும், திருவேங்கடமே முலைகளான மலைகளாகக் கூறுவது பொருந்தும். நிலமகளின் அழகு சிறப்பிக்கப்படுவது பூமகள் எம்பெருமானுக்கு வாழ்க் கைப்பட்டவளாதலின் அவன் மலைகளாகிய முலைகளின்பம் துய்த்துக் கிடப்பதாகக் கூறுவதும் சிறப்பாகும். எம்பெருமான் பூமகளின் முலைகளில் தங்கி இன்புற்றிருக்கவே ஆழ்வார் பெண்களுக்கு இருக்க வேண்டிய உடல் அழகின் சிறப்பை பூமகளுக்குக் காட்டி மகிழ்கிறார்.

பூமிப் பிராட்டிக்குக் கடல் ஆடை. அவளின் ஒளி வீசும் நெற்றியை சீரார் சுடர் சுட்டி என்று கதிரவனை அவளின்

நெற்றியில் பிரகாசிப்பதாகக் காண்கிறார். செங்கலுழிப் பேர் ஆறு என்று எம்பெருமான் பூமிப் பிராட்டியிடம் இன்பம் துய்க் கையில் குங்குமச் சாந்து வியர்வையுடன் கலந்து கலங்கிய பெரிய ஆறு போன்ற ஆரம் பூண்ட மார்பகம் உடையவள். பூமிப் பிராட்டியின் கூந்தல் பெருத்த கரியமேகக் கூட்டம். இத் தகு சிறப்பு மிக்க பூமிப் பிராட்டிக்கு பாதுகாப்பாக, வேலியாக அமைவது ஆரம்நீர். இவ்வளவும் அமையப் பெற்றவள் நிலமங்கை என்கிறார். ஆரம் என்றது 'ஆவரணம்' என்ற வட சொல்லின் சிதைவு. அண்டத்துக்கப்பால் பெருகிக் கிடப்பது ஆவரணநீர் என்பர். இத்தனைச் சிறப்புகள் கொண்ட நில மகள் எனும் பாரில் வாழ்வோர் பெறும்பேறு எனக் கூறுவதனை ஆராய்ந்து பார்க்கில் அறம் பொருள் இன்பம் எனும் மூன்றே யாகும்.

ஆரா ரிவற்றி னிடையதனை யெய்துவார்
சீரா ரிருகலையு மெய்துவர்—சிக்கனமற்று
ஆரானு முண்டென்பா ரென்பது தானதுவும்
ஓராமை யன்றே உலகத்தார் சொல்லுஞ்சொல்
ஓராமை யாமா றதுவுரைக்கேன் கேளாமே
காரார் புரவியேழ் பூண்ட தனியாழித்
தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு
ஆரா வமுதமங் கெய்தி—அதில்நின்றும்
வாரா தொழிவதொன் றுண்டே? அதுநிற்க
ஏரார் முயல்விட்டுக் காக்கைபின் போவதே!

அ - ரை:- இவற்றினிடை - இம்மூன்று பேறுகளுள். அதனை - இன்பம் துய்த்தல் எனும் பேற்றினை. ஆர்ஆர் எய்துவர் - அடைகின்றவர்கள் யார் யாரோ. காம இன்பம் துயத்தலை அடைபவர் எவரோ! சீர்ஆர் - சிறப்பு மிக்க. இருகலையும் - அறம் பொருள் என இரு பேறுகளையும் எய்துவர் - அடைந்தவராவர். சிக்கனம் - உறுதியாக அடையக் கூடியது. மற்று உண்டு என்பர் - இவை மூன்று நீங்கலாக

மனிதப் பிறப்பின் பயனடையும் பேறுகளில் ஒன்றாகக் கருதபட தப்பட மற்றொன்றுண்டென்பர். எனபது தானதுவும் - என்று சொல்லத்தக்கதென்று கூறப்படுவதும். ஓராமை - அறியாமை. ஆய்ந்த காணாத தன்மை. ஓராமையன்றோ-ஆயந்து காணாது மடமையால் கூறுவதேயாகும். உலகத்தார் சொல்லும் சொல் - உலக வழக்கு. மக்களுடைய கருத்து உலகத்தார் சொல்லும். அது - அந்த வீடு எனும் பேறு. சிக்கனம் மற்று உண்டு என்று உலகத்தார் சொல்லும் அந்த சுவர்க்கம், மோட்சம். ஓராமை - ஆராயாமை. அய்ந்து காணாமை என்பதனை. ஆம் ஆறு உரைக்கேன் - ஆய்ந்து காணாமை என்பதனை. என்பதன் உண்மையைக் கூறுகின்றேன். கார் ஆர்புரவி - மேக மண்டலத்தில் செல்லும் குதிரைகள். ஏழ் - ஏழு. பூண்ட தனி ஆழி - பூட்டப்பெற்ற ஒற்றைச் சக்கரம். தேர்ஆர் - தேரில் அமர்ந்திருப்பவன். நிறைகதிரோன் - நிறைந்த ஒளிக்கதிர்களையுடைய, கதிரவனுடைய. மண்டலம் - சூரியமண்டலம். கீண்டுபுக்கு - கிழித்துக்கொண்டு போய், ஆங்கு - வைகுண்டத்தில். ஆரா அமுதம் - கிடைக்கப் பெறாத பேறு எனும் தேவர் உலக வாழ்வை அடைந்து. அதில்நின்றும் - அந்த நிலையிலிருந்தும், தெய்வீக வாழ்க்கையை விடுத்து.

வி - ரை:- அறம் பொருள் இன்பம் எனும் இம்மூன்று பேறுகளுள் இன்பம் துய்ப்பதாகிய காமம் துய்ப்பவர் மற்ற அறம் பொருள் இரண்டையுமடைந்தவராவர் என்பது ஆழ்வார் திருவுள்ளமாகும். இவற்றினிடை அதனை எய்துவார் என்றது காம இன்பம் துய்த்தலை அடைவர். இருகலையும் என்றது மற்ற இருகலைகளாகிய அறமும் பொருளுமாம். அதாவது காமமே இவையிரண்டையும் அளிக்கவல்லது எனத் திருவுள்ளம் கொண்டனர். காமத்தை அடைதற்கு அறமும் பொருளும் உதவுவது என்றபடி. ஆழ்வார் திருவுள்ளம் மலர்ந்தருளிய காமம் என்பது எம்பெருமானார் மேல் எழுந்த காமம் மாதலின் உலக மாதர்மேல் எழுந்த காமம் என்றுணர்தல் கூடாது,

இம்மூன்று பேறுகளேயல்லாது மற்றுமொரு பேறு உண்டென்பாரையும் ஆழ்வார் உள்ளம் நிந்திக்கிறது. அதனை "சிக்கனமற்று ஆராறு முண்டென்பா ரென்பது தானதுவும் ஓராமையன்றே உலகத்தார் சொல்லுஞ் சொல்" என்று திருவாய் மலர்ந்தருளுகிறார். மற்று என்பது இங்கு "வீடு." அறம் பொருள் இன்பம், வீடு எனும் நான் காம் பேற்றினை ஆழ்வார் ஏற்க மறுக்கிறார். அது ஓராமையால் எழுந்தது என்னும் பொழுது, அது ஓராமையால் எழுந்த ஓர் எண்ணமே என்று அதற்கான விளக்கமும் கூறுமிடத்து, மேகமண்டலத்தில் ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட கதிரவன் உலவும் சூரியமண்டலத்தைக் குடைந்து கொண்டு சென்று "கிண்டுபுக்கு" ஆராமமுதம் ஆங்கெய்தி அந்த நிலையினின் றும் நீங்காது நிலைத்திருப்பது என்பது ஓராமையால் உலகத்தார் சொல்லும் சொல் என்பதாகத் திருவாய் மலர்ந்தருளு கிறார்.

ஆழ்வார் திருவுள்ளம் மோட்சம் என்பது இல்லை என்று கூறுவதாக அமைந்த பகுதி. மோட்சம் என்பதை விவேக மற்றவர் சொல்லும் சொல் என்பதாகப் பாடுகிறார். சூரிய மண்டலத்தைக் குடைந்து சென்று மொட்ச இன்பம் அனுபவிப்பது பற்றிய கட்டுக் கதைகளை மக்கள் ஆய்ந்து காணாது ஏற்கின்றனரே! மேகமண்டலத்தில் குதிரைகள் ஓடுவதென் பதும், ஒற்றைச் சக்கரமுடைய சூரியன் தேர் ஒன்று உள்ளது என்பதும் அதனைஏழுகுதிரைகள் இழுத்துச் செல்வதும். சூரிய மண்டலத்தைக் குடைந்து கொண்டு செல்வதும், குடைந்து சென்று அங்கேயே ஆரா அமுதமெயதியிருப்பதுவும் ஏற் புடையதன்று எனப்புழி.

அதாவது ஒருவன் மோட்சம் உண்டென்று அதனை அடைந்திடத் திரிபவரது செயல் நிலத்தில் திரியும் முயலைக் கைவிட்டு காக்கையின் பின் செல்வது போன்றது என்றும் நையாண்டி செய்கிறார். "அது நிற்க" என்றது மோட்சம் என்பது ஒரு பக்கம் இருக்கட்டும் என்பதாம். அந்த

சர்ச்சை வேண்டாம் என்றவாறு. ஆழ்வார் அவர்களின் திருவுள்ளம் மேலும் மேன்மையான ஓர் இடத்தைப் பற்றிட விழைகிறது என்பது "அது நிற்க" என்று அவர் திருவாய் மலர்ந்தருளியது நமக்கு உணர்த்துகிறது. ஓராமை என்பதை ஓர்தல் இல்லாமையெனப் பிரித்துக் காண்க. ஓர்தல் - ஆய்தல். கேளாமே என்பதனைக் கேள் ஆமே எனப் பிரித்துக் காண்க. கேள் முதனிலைத் தொழில் பெயர். கேளுங்கள். மோட்சம் செல்வோம் என்று கூறுவதை ஆய்ந்து காணாத மடமை கொண்ட மானிடரே நான் சொல்வதைக் கொஞ்சம் கேளுங்களே என்பதாக அருளுகிறார், ஏரார் முயல் விட்டு என்பதனால் நிலத்தில் உலவும் முயலைப் பிடித்து அதனை உண்ணப் பயன்படுத்துதலை விட்டு விட்டு பறக்கும். உண்ணப் பயன்படாத காக்கையைத் துறத்திச் செல்கிறீர் என்பதாம். திருமங்கை மன்னன் எம்பெருமான் திருவருள் கிட்டாதிருந்த காலத்து கொள்ளையடித்தல் போன்ற தொழில்களைச் செய்தவர், ஆதலின் அவர் முயல் மாமிசம் உண்டிருக்க வாய்ப்புண்டு. அதில் தவறு ஒன்றும் இல்லை. முயல் மாமிசம் மிகுந்த மருத்துவ குணமுடையது என்பதை உரையாரின் "உண்பொருள் குண, அகராதி" எனும் நூலில் காணலாம். காக்கையைப் பொதுவாக உணவாகப் பயன்படுத்துவதில்லை. ஒரு சில நாடோடிகள் டொம்பர் என்பார் காக்கையை வலை வைத்துப் பிடித்துண்பதைக் கண்டுள்ளேன். காக்கை மாமிசத்திலும் சில மருத்துவ குணங்கள் உண்டு என்பதை "உண் பொருள் குண அகராதி"யில் காணலாம்.

இங்கு ஆழ்வார் திருவுள்ளம் மோட்சம் நாடித் திரிவாரைக் காக்கையின் பின் செல்வாரோடு ஒப்பிடுகிறார். காக்கை பயனற்றது. எளிதாகவும் கிடைக்கக்கூடியது அல்ல. ஆனால் முயல் பயனுடையது. எளிதாகவும் கிடைக்கூடியது. சூரிய மண்டலத்தைத் தாண்டி மோட்சத்தைத் தேட வேண்டாம். உனக்குக் கைக்கெட்டும் தூரத்திலேயே அதைவிடச் சிறந்த மோட்சம் எம்பிரான் இருக்கிறார் என்கிறார். இது மிகவும் சிறப்பான செய்தி தொடர்ந்து காண்க,

ஏரா ரிளமுலையீர்! என்றனக் குற்றதுதான்
காரார் குழலெடுத்துக் கட்டிக்—கதிர்முலையை
வாராரர வீக்கி மணிமே கலைதிருத்தி
ஆரா ரயில்வேற்க ணஞ்சனத்தின் நீறணிந்து
சீரார் செழும்பந்து கொண்டடியா நின்றேன்நான்
நீரார் கமலம்போற் செங்கண்மா லென்றொருவன்
பாரோர்க ளெல்லாம் மகிழப் பறைகறங்கச்
சீரார் குடமிரண் டேந்திச்—செழுந்தெருவே
ஆரா ரெனச்சொல்லி யாடு மதுகண்டு
ஏரா ரிளமுலையா ரன்னையரு மெல்லாரும்
வாராயோ வென்றார்க்குச் சென்றேனென் வல்வினையால்
காரார் மணிநிறமுங் கைவளையும் காணேன்நான்
ஆரானுஞ் சொல்லிற்றுங் கொள்ளேன்—அறிவழிந்து.

அ - ரை:- ஏர்ஆர் இளமுலையீர் - எழுச்சி மிக்க அழகிய இளம் முலைகளையுடைய பெண்டீர். ஏந்தின வனமுலையீர். ஏர் - எழுச்சி. ஏந்தின. ஆர் - அழகிய. அழகு தங்கிய. என்றனுக்கு - எனக்கு, உற்றது - நேர்ந்தது. உற்றதுதான் - நேர்ந்ததுதான். நேர்ந்த ஒரு சம்பவம் உங்களுக்குச் சொல்லப் போகிறேன் என்றபடி. குழல் - கூந்தல், கார்ஆர் குழல் - கார் மேகம் போன்ற கருமையான கூந்தல், எடுத்துக்கட்டி - நழுவி விழாதபடி வாரி அள்ளி முடித்து, மகளிர் கூந்தலை மேலே தூக்கிக் கட்டிக் கொள்வதும் ஓர் அலங்காரம், கதிர் முலை - ஒளி வீசும் முலை. வார் ஆர வீக்கி - கச்சு முழுமையாக நிரம்பும்படி முலைகளைச் செலுத்திக் கட்டி. வார் - கச்சு. வீக்கி - கட்டி. ஆர - நிரம்ப, மணிமேகலை - இரத்தின மணிகள் பொதிந்த மேகலை எனும் அணிகலன். ஆர்ஆர் மிக அழகிய. ஆர்வத்தைத் தூண்டும் அழகு. அயில்வேல் கண் - கூர்மையான வேல் போன்ற கண், பெண் கண்ணுக்கு ஆடவரின் நெஞ்சில் கூர்மையாகப் பாயும் வன்மையுண்டு ஆதலின் ஆர்ஆர் அயில்வேல் கண் என்றனர் அஞ்சனம் - (வடசொல்) மை. அஞ்சனத்தின்நீறு - மை சாந்து. சீர்ஆர் - சிறப்பு மிக்க அழகு. அடியா நின்றேன் -

அடித்துக் கொண்டிருந்தேன், நீர்ஆர் கமலம் - நீரைவிட்டு நீங்காத தாமரை, செம்கண் - சிவந்த கண்கள். மாலென் றொருவன் - திருமால் எனும் பெயருடையோன். பாரோர் - பாரில் உள்ள அனைவரும். பறை - முரசு. கரங்க - ஒலிக்க. சீர் ஆர்குடம் - சிறந்த அழகிய குடம். செழும்தெரு - செழிப்பு மிக்க தெரு. ஆர்அர் என - யாரேனும் உண்டோ எனஆடும். அதுகண்டு - குடக் கூத்தாடுதல் கண்டு. ஏர்ஆர் இளமுலை யார் - ஏந்தின வனமுலையார். அன்னையரும் - தாய்மாரும், எல்லாரும் - மற்ற பெண்டிரும். பெண்கள் யாவரும் அப்படியே தாம் செய்த காரியங்களைப்போட்டுவிட்டு மயங்கி ஓடினர் என்பதாம். வல்வினை - கொடிய வினையால். கார்ஆர் மணிநிறம் - அழகிய கருத்த நீலமணி நிறம். எம்பெரு மானோடு பாற்கடலில் இருந்ததால் ஏற்பட்ட நிறம். கைவளை - கையில் அணிந்த வளையல். நான் காணேன் - நான் காணவில்லை. கரியநிறம் வெளுத்தது, கையில் இருந்த வளையலும் கழன்று போனது தெரியவில்லை என்றபடி. ஆரானும் - ஆராகிலும். சொல்லிற்றும் - என்ன சொன்னா லும். கொள்ளேன் - மனதில் கொள்ள இயலாது போனேன். அறிவழிந்து - அறிவையும் இழந்து.

வி - ரை:- திருமங்கையாழ்வார் தம் திருவுள்ளத்தை இங்கு திறந்து வைக்கிறார். மோட்சத்தை இவ்வுலகிலேயே காண்பதற்கு யாது வழி என்று கூறுவதற்கு ஓர் ஆதாரமாகத் தன்னை பரகால நாயகியாக நியமனப்படுத்திக் கொள்கிறார். எம்பெருமானுக்கு நாயகியான தனக்கு நேர்ந்த ஓர் இன்னல் நிலையை அழகுபடச் சித்தரிக்கிறார். இங்கு கண்ணன் குடக்கூத்திலே ஈடுபட்டிருத்தலைக் கண்ட ஓர் இடைச்சிப் பெண்ணின் நிலையைத் தான் அடைந்ததாகக் காண்பிக்கிறார் யாதுமறியா அப்பெண் தன்னை அலங்கரித்துக் கொள் கிறாள். அதற்காகத் தன் காரார் குழலெடுத்துச் கட்டிக் கொள்கிறாள், கதிர் முலையை வார்ஆர்வீக்கி, மணிகள் பதித்த மேகலையையும் திருத்தி அணிகிறாள், பந்தைக் கையில்

கொண்டு விளையாடச் சென்றுவிடுகிறாள். பந்து விளை யாடும் பருவம் ஆதலின் அறியாமை குடிகொண்டிருந்தது. அப்பொழுது பறை ஒலி முழங்க சிறந்த குடங்கள் இரண் டைக் கையிலேந்தி இச்செழும் விதியிலே, என் குடக்கூத் துக்குத் தப்பிப்போவார் யாரேனும் உண்டோ எனச் சவால் விடுவதேபோல, நீரினின்றும் நீங்காத கமலம் போன்ற சிவந்த கண்களையுடைய திருமால் எனும் ஆடவன் உலகத் தாரனைவரும் மகிழ குடக்கூத்தாடினது கண்டு ஏர் ஆர் இள முலையார் அன்னையரும் மற்றுமனைவரும் வாரோயோ என்று எனையழைத்துச் சென்றனர். நானும் என் கொடிய வினைப் பயனால் அவர் வழி சென்ற பொழுது என் கரிய நிறமும். கைவளையும் காணாது போகக் கண்டேன். எவர் சொல்லியும் கேளாதவளானேன். அவர்கள் கூப்பிட்டதும் தான் அவனைக் காணச் செல்லாதிருந்திருக்க வேண்டும். என் வல்வினையால் அங்கு சென்றேன். சென்றதும் என் மணி நிறமும் கைவளையும் காண்கிலேன் என்பது உடல் வெளுத்து கை தளர்ந்து வளை நழுவியது என்பதாம். வல்வினையால் என்றது தொல்வினைத் தொடர்பால் என்பதுவுமாம்.

குடககூத்துபற்றி பரிபாடலில் கடுவனிள வெயின்னார் எனும் புலவர் திருமாலைப் பாடுமிடத்து,

"நால்வகை யூழியெண் ணவிற்றுஞ் சிறப்பினை
செங்கட் காரி கருங்கண் வெள்ளை
பொன்கட் பச்சை பைங்கண் மாஅ
லிடவல குடவல கோவல காவல"

என்றனர். இங்கு கூத்தாட எடுத்த குடத்தினை என்றது "குட அல" என்றதால் விளங்கும்-குடக்கூத்தென்பது திருமாலிற்குரிய கூத்துக்களுள் ஒன்று. அக்கூத்தாவது தலையில் அடுக்குக் குட மிருக்க இரண்டு தோள்களிலும் குடமிருக்க இரண்டு கைகளி லும் குடங்களை ஏந்தி ஆகாயத்தில் எறிந்து ஆடுவதென்பர். ஆனால் திருமங்கையாழ்வார் "சீர் ஆர்குடம் இரண்டு ஏந்தி"

என இரண்டு குடங்களைக் கொண்டு கூத்தாடுவதாகக் குறிப்பிடுகிறார். ஆய்வாளர்கள் இவ்வேறுபாட்டைக் கண்டுணர்க. இருகுடங்களானாலும் பரிபாடலில் கூறப்பட்டிருப்பதுபோல் ஆகாயத்தில் எறிந்து ஆடுவதென்பது எண்ணிப்பார்க்க இயலாத ஒன்று. குடம் என்றது மண்குடம் என்பதனையும் உணரவேண்டும்.

தீராவுடம் பொடு பேதுறுவேன் கண்டிரங்கி
ஏரார் கிளிக்கிளவி யெம்மனைதான் வந்தென்னைச்
சீரார் செழும்புழுதிக் காப்பிட்டுச்—செங்குறிஞ்சித்
தாரார் நறுமாலைச் சாத்தற்குத் தான்பின்னும்
நேரா தனவொன்று நேர்ந்தா ளதனாலும்
தீராதென் சிந்தைநோய் தீராதென் பேதுறவு
வாராது மாமை அதுகண்டு மற்றாங்கே
ஆரானும் மூதறியு மம்மனையார் சொல்லுவார்
பாரோர் சொலப்படுங் கட்டுப் படுத்திரேல்
ஆரானும் மெய்ப்படுவ னென்றார்—அது கேட்டுக்

அ-ரை :: தீராவுடம்பு - ஒழிந்து போகாத இவ்வுடம்பு. இது ஆற்றாமையின் எல்லையை உணர்த்தும் சொல். பேதுறு-பைத்தியம்' போன்ற நிலை. கண்டிரங்கி - கண்டு மனம் வருந்தி, இரக்குமுற்று. ஏர் ஆர் - அழகில் சிறந்த. கிளி கிளவி - கிளிபோன்று மொழி பேசும். கிளவி - மொழி. எம் அனை - என் அன்னை. தான் வந்து - தானே வந்து. அவளாகவே என் நிலை கண்டு வந்து. சீர் ஆர் - சிறந்த அழகிய. செழுபுழுதி - மண் கொண்டு காப்பிடுதல். யார் கண்பட்டு நோயுற்றாளோ அவர்களின் பாதம்பட்ட மண்ணை எடுத்துக் காப்பிடுதல். இங்கு எம்பெருமான் திருப்பாத மண் எடுந்துக் காப்பிட்டாள் என்பதாம். செங்குறிஞ்சி - சிவந்த குறிஞ்சி. தார் - மலர். ஆர் - அழகிய. நறு - மணம்கமழ். சாத்தற்கு - சாத்தா என்கிற தெய்வம். நேராதன - முன்பு செய்திடாத. ஒன்று செய்தாள் - ஒரு அஞ்சலி செய்தாள். சிந்தைநோய் -. மனநோய். பேதுறவு - மயக்கம். மாமை - கருமை நிறம்

உடல் அழகு. வாராது - திரும்பி வராது. மற்று - இந்நிலையில். ஆரானும் - யாரோ சில. மூது அறியும் - பழமையறிந்த முதுமையும் அறிவும் நிறைந்த. அம்மனைமார் - அம்மாவுக்கு அம்மா பாட்டிமார். அது கண்டு - அன்னை செய்த அஞ்சலிக்கும் நிலை மாறாதது கண்டு. பாரோர் - உலக வழக்கில் உள்ள. சொலப்படும் - குறி சொல்லும் என்ற ஒரு வழக்கப்படி. கட்டுப் படுத்தீர் - குறி சொல்லக் கேட்பதென அதன் படி செய்தீர்களாயின். ஆரானும் - அவள் மனத்தை ஆட்டுவிப்பவன் யாராயிருப்பினும். மெய்ப்படுவன் - வெளிபபடுவன். உண்மை வெளியாகும்.

வி-ரை :- முன்பகுதியில் உள்ள "அறிவழிந்து" என்ற சொல்லை இங்கு கொணர்க. குடக்கூத்தாடுதல் காணச் சென்றவள் அறிவழிந்து நின்ற நிலை கண்ட அன்னை முதல் உதவியாக திருமண் காப்பிடுகிறாள். உடம்பு தீர்ந்து போகாதோ என மயங்கும் மகளுக்கு திருமண் மனத்தை மாற்றவில்லையென அறிந்து சாத்தனுக்கு இதுகாறும் செய்யாத அஞ்சலியும் செலுத்துகிறாள். தன் அன்னைக்கு "ஏரார்கிளிக் கிளவி எம் அனை" என்று அடைமொழியிட்டு விளித்திருத்தலையும் அன்னை என்ற சொல் இடைக்குறைபட்டு அனை யென வந்திருத்தலையும் நோக்குக. செழுபுழுதி காப்பிடுதல் மகளிரிடை எங்கும் உள்ள ஒரு பழக்கம். யார் கண்பட்டு மகள் துன்பமடைகிறாளோ! எனக் கண்டு அந்த ஆண் அல்லது பெண் பாதம்பட்ட மண்ணை எடுத்துக் காப்பிடுவர். பாத மண் எடுக்கும் பொழுது பாதத்துக்குடையவர் பார்த்துவிடக் கூடாது என்பர். இதற்கு கண் எச்சில் நீக்குதல் என்பது சிறந்த தமிழ்ச் சொல்லாக அமையும். கண் எச்சில் நீக்கியும் அவள் தோற்றத்தில் மாற்றத்தைக் காணாத தாய், சிவந்த குறிஞ்சி மலர் மணம் கமழ் அணிந்திருக்கு சாத்தா எனும் தெய்வத்திற்கு தான் இது வரை செய்திராத அஞ்சலியும் செய்கிறாள். என்றாலும் மனநோய் நீங்காது அவளின் பழைய கரிய மேனி திரும்பாதது கண்டு பாட்டிமார் ஒரு வழி சொல்

கின்றனர். மாமை வாராது என்றதால் திருமங்கை கருமை நிறமுடையவள் என்பது தெளிவு. பெண்டிர்க்கு கருமை அழகு சேர்க்கும் என்பதுவுமாம். பாட்டிமார் ஒரு முடிவுக்கு வருகின்றனர். குறி சொல்லக் கேட்பது என்பது உலக வழக்கு. இதனை முதறியுமம்மனைமார் சொல்கின்றனர் ஆதலின் அதனை ஏற்றுக் கொள்வதொன்றாகும் என்பதாம். அதன்படி குறி சொல்லக் கேட்பது என முடிவானது என்பதாம்.

காரார் குழற்கொண்டைக் கட்டுவிச்சி கட்டேறிச்
சீரார் சுளகில் சிலநெல் பிடித்தெறியா
வேராவிதிர் விதிரா மெய்சிலி ராக்கை மோவாப்
பேராயிரமுடையான் என்றாள்—பேர்த்தேயும்
காரார் திருமேனி காட்டினாள் கையதுவும்
சீரார் வலம்புரியே யென்றாள்—திருத்துழாய்த்
தாரார் நறுமாலை கட்டுரைத்தாள் கட்டுரையா
நீரேது மஞ்சேன்மின் நும்மகளை நோய் செய்தான்
ஆரானு மல்ல னறிந்தே னவனைநான்
கூரார் வேற்கண்ணீ ருமக்கறியக் கூறுகேனோ?

அ-ரை :- கார் ஆர் குழல் - கரிய அழகிய கூந்தல். ஆர் என்ற சொல் அருமை எனவும் பொருள்படும். கொண்டை - மயிர் அலங்கார வகையில் ஒன்று. கட்டிவிச்சி - குறி கூறுபவள்: குறி சொல்லும் சாதிப் பெண். கட்டேறி - தெய்வ ஆவேசம் அடைந்து. பெண்களில் சிலரும் சில ஆண்களும் இவ்வாறு தெய்வ ஆவேசம் கொண்டு பேசுவர். ஆவேசம் கொண்டு சொல்லும் பொழுது அவை சொன்னபடியே நடக்கும் என்பது நம்பிக்கை. சீர் ஆர் - சிறந்த அழகிய. சுளகில் - முறத்தில். சுளகம் என்றால் உள்ளங்கை. சில நெல் பிடித்து - கொஞ்சம் நெல் எடுத்து. எறியா - வீசியெறிந்து. வேரா - வியர்த்து. விதிர் விதிரா - சுழன்று. தெய்வ ஆவேசம் கொண்ட பொழுது உடல் சுழற்றி ஆடுவது விதிர்விதிர்த்தல் என்பதாம். நடுக்கமடைதல். நடுங்கியது போன்று

சுழன்றாடுதல். பேய் பிடித்தவர்களும் இதுபோன்றே விதிர் விதிர்த்தாடுவர். மெய் சிலிரா - மெய் சிலிர்த்து. கைமோவா - கைமோந்து. பேராயிரம் - ஆயிரம் பெயர்கள். எம்பெருமானுக்கு ஆயிரம் பெயர்கள் உண்டு என்றதால். உடையான்- இவளை ஆட்கொண்டவன். பேர்த்தேயும் - மேலும். கார் ஆர் - அழகிய கார்மேகம் போன்ற, திருமேனி - பெருமாளின் உடல் அழகு. காட்டினாள் - கருமை நிறமுடையவன் என்பதை அபினயித்துக் காட்டினாள். கையதுவும் - திருமாலின் கையில் உள்ளதுவும். சீர் ஆர் வலம்புரி - சிறந்த அழகிய வலம்புரிச் சங்கு, திருதுழாய் - திருத்துழாய் மலர். தார் - மலர். நறுமாலை - மணம்கமழ் மாலை. கட்டுரைத்தாள் - அபிநயத்துக் காண்பித்தாள். கட்டுரையா - அபிநயத்துக் காட்டி. நீர் - தாயாகிய நீ. ஏதும் - எதுவும். அஞ்சேல்மின்- அஞ்ச வேண்டாம். நும் மகளை - உம்மகளை, நோய் செய்தான் - உள்ளத்துள் தங்கி ஆட் கொண்டவன், ஆரானும் - வேறுயாரும். அறிந்தேனவனை - அவனை அறிந்து கொண்டேன். கூர் ஆர் வேல் கண்ணீர் - கூரிய வேல் போன்ற அழகிய கண்களையுடைய மங்கையரே! உமக்கறிய - நீங்கள் தெரிந்து கொள்ள. கூறுகேனோ - சொல்லுவேன்.

வி-ரை :- மூதறியும்மம்மனைமார் பேசிக் கொண்டிருந்தது கேட்டு, யாரும் அழையா முன்பே, குறி சொல்லும் குறத்தி ஒருவள் யாரிங்கென்னை யழைத்த தூ! என்பதாக,

"கொங்குங் குடந்தையுங் கோட்டி யூரும் பேரும்
எங்குந் திரிந்து இன்றே மீள்வேனை யாரிங் கழைத்த தூஉ!!!

கண்டியூ ரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்றி
மண்டியே திரிவேனை யாரிங் கழைத்த தூஉ!!!

விண் ..நகரம் வெஃகா விரிதிரை நீர் வேங்கடமும்
மண்..நகரம் மாமாட வேளுக்கை தென் குடந்தை
எங்குந் திரிந்து இன்றே மீள்வேனை யாரிங்கழைத்த தூஉ!!!

நாகத் தணைகுடந்தை வெஃகாத் திருவெவ்வுள
நாகத் தணையரங்கம் பேரன்பில் நாவாயும்
எங்குந் திரிந்து இன்றே மீள்வேனை யாரிங்கழைத்த தூஉ!!!

வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவு மஃகாத
பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகரும் பூதூரும்
எங்குந் திரிந்து இன்றே மீள்வேனை யாரிங்கழைத்த தூஉ!!!

என்று கூவிக் கொண்டு வந்து நின்றாள். இது போன்ற பாடல்களை குறத்தியர் பாடித்திரிவர். வந்தவள் தெய்வ ஆவேசம் கொண்டவளாய், அழகிய சிறு முறத்தினின்றும் நெல் மணிகளை எடுத்து வீசியெறிந்து குறிபார்த்துரைக்க லுற்றாள். "சீர் ஆர் சுளகில்" என்றதற்கு அழகிய தன் சிறந்த உள்ளங்கையில் நெல்மணிகளை எடுத்து எனவும் பொருள் கொள்ளல் தகும். நெல் மணிகளை வீசி வியர்த்து விதிர் விதிர சுழன்றாட, கையை மோந்து பார்த்து நோய் செய்தவன் வேறு யாருமல்ல ஆயிரம் பெயர்களையுடைய அந்த எம்பிரானே இவள் மனதைக் கொள்ளை கொண்டவன் என்றவள், மேலும் அவன் எப்படிப்பட்டவன் என்பதனையும். கரிய திருமேனியை யுடையவன், வலம்புரிச் சங்கை கையிலேந்தியவன். திருத்துழாய் மலர் மாலை அணிந்தவன் என்று அபிநயித்துக் காட்டினாள். இவையனைத்தும் காட்டிய பின்பு, நீங்கள் சிறிதும் அஞ்ச வேண்டாம். உங்கள் மகளை நோய் செய்தவன் வேறுயாரு மல்லன். அவனை நான் அறிந்து கொண்டேன். கூரிய வேல் போன்ற அழகிய கண்களையுடைய மங்கையீர் உமக்கு தெளிவுபடக் கூறுவேன்.

இங்கு கட்டுவிச்சி, எம்பெருமானே இவளை ஆட்கொண் டனன் எனக் கூறவேண்டும். அப்படிச் சொல்ல அவள் நா எழவில்லை. நிலை தடுமாறுகிறாள். பேர் ஆயிரம் உடை யான் என்கிறாள். அவன் திருமேனி எந்நிறத்தது என்பதை அபிநயித்துக் காட்டுகிறாள். வலம்புரி சங்கையுடையவன் என்று அபிநயத்துக் காட்டுகிறாள். அவன் திருத்துழாய் மலர்

மாலை அணிந்தவன் என்றும் அபிநயித்துக் காட்டுகிறாள். கட்டுவிச்சிக்கு இறைவன் நாமத்தைச் சொல்ல நா துவளுவ தால் அவன் உருவை அபிநயித்துக் காட்டுகிறாள். கணவன் பெயரை மனைவியர் சொல்வது நம் நாட்டு மகளிர் வழக்க மன்று. அதே நிலையை கட்டுவிச்சியும் அடைந்ததாக ஆழ்வார் படம் பிடித்துக் காட்டியிருப்பது சிறப்பிக்கிறது, ஆரானும் அல்லன் அவனை நான் அறிந்தேன் என்றது அவளும் அவன் வயப்பட்டிருந்தாள் என்பதை மறைமுகமாகக் கூறுவதாகத் தெரிகிறது. கோபியருள் கண்ணனைக் கண்டு நான் மையல்கொள்ளவில்லையென்று யாராகிலும் ஒருவர் சொன்னால் நம்புவார்களா? அதுபோன்று கட்டுவச்சி யும் அவனை நான் அறிந்தேன் என்று சொல்லிவிடுகிறாள். தன்னை ஆட்டுவித்தவனே இவளையும் ஆட்டுவிப்பது கண்டு. வேர்வை விட்டு விதிர் விதிர மெய் சிலிர்த்துப் போகிறாள் என்பதும் காண்க. அவனை அவள் நன்கு அறிந்தவளாதலின் "கூர் ஆர் வேல் கண்ணீர் உமக்கு அறிய கூறுகேனோ" என்பது காண்க.

"சீரார் சுறத" என்று முறத்துக்கு அடைகொடுத்துப் பாடியிருத்தல், முறம் பதரை நீக்கி மணிகளை மட்டும் தன்னுள் வைத்துக் கொள்ளும் என்பதாம், சிறந்த அழகிய உள்ளங்கை யெனவும் பொருள்படும் என முன்னமே கூறினோம்.

எறியா, வேரா, விதிர் விதிரா, சிலிரா, மோவா என்பன செய்யா வெனும் வாய்ப்பாட்டிறந்தகால வினையெச்சங்கள் எறிந்து, வேர்த்து, விதிர்விதிர்த்து, சிலிர்த்து, மோந்து எனும் பொருள்களில் வருபவை. கட்டுரையாஎன்ப தூவும் இறந்தகால வினையெச்சம்.

"கூரார் வேற்கண்ணீ ருமக்கறியக் கூறுகேனோ" என்றது முன்பு கூறப்பட்ட "பேராயிரமுடையான் என்றாள். "சீர் ஆர் வலம்புரியே என்றாள்" என்றவை யனைத்தும் எம் பெருமானைக் கட்டுவச்சி தன் மனத்துள் வைத்துக் கூறியது

சி—2

என்பதாம். அவளை ஆட்கொண்டவன், தன்னை ஆட்கொண்ட பேர் ஆயிரம் உடையவன், கார் அர் திருமேனியன். சீர் ஆர் வலம்புரியன், திருதுழாய் தார் மார்பன் என்பதைத் தன் உள்ளத்துள் ஊகித்துக் கண்டாள் என்பதை உணர்த்துவதாம் என்பதுணர்க. தான் அவனைப் பற்றியறிந்ததை இனி உமக்கறியக் கூறுவேன் என்பதனை "உமக்கறியக் கூகேனோ" என்றாள் என்பதாம்.

ஆரா லிவ்வைய மடியளப் புண்டதுதான்?
ஆரா லிலங்கை பொடிபொடியா வீழ்ந்தது?மற்று
ஆராலே கன்மாரி காத்ததுதா னாழிநீர்
ஆரால் கடைந்திடப் பட்ட தவன்காண்மின்
ஊரா நிரைமேய்த் துலகெல்லா முண்டுழ்ந்தும்
ஆராத தன்மையனா யாங்கொருநா ளாய்ப்பாடிச்
சீரார் கலையல்குல் சீரடிச் செந்துவர்வாய்
வாரார் வனமுலையாள் மத்தாரப் பற்றிக் கொண்டு
ஏரா ரிடைநோவ எத்தனையோர் போதுமாய்ச்
சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை
வேரார் நுதல்மடவாள் வேறோர் கலத்திட்டு
நாரா ருறியேற்றி நன்கமைய வைத்ததனைப்
போரார் வேற்கண் மடவாள் போந்தனையும் பொய்யுறக்கம்
ஓரா தவன்போல் உறங்கி யறிவுற்றுத்
தாரார் தடந்தோள்க ளுள்ளளவுங் கைநீட்டி
ஆராத வெண்ணெய் விழுங்கி—அருகிருந்த
மோரார் குடமுருட்டி முன்கிடந்த தானத்தே
ஓரா தவன்போல் கிடந்தானைக் கண்டவளும்
வாராத்தான் வைத்தது காணாள்—வயிறடித்திங்கு
ஆரார் புகுதுவா ரைய ரிவரல்லால்
நீரா மிதுசெய்தீ ரென்றோர் நெடுங்கயிற்றால்
ஊரார்க ளெல்லாரு ங்காண வுரலோடே
தீரா வெகுளியளாய்ச் சிக்கன் ஆர்த்தடிப்ப
ஆரா வயிற்றினோ டாற்றாதான்—அன்றியும்

அ-ரை :- ஆரால். - யாரால். இவ்வையம் - இவ்வுலகம் அடி - திருவடி அளப்புண்டது - அளக்கப்பட்டது. பொடி பொடியாய் - தூள் தூளாக. கல்மாரி - பனிக்கட்டி மழை. ஆழி நீர் - கடல் நீர். பாற்கடல். கடைந்திடப்பட்ட - அமுதம் பெற பாற்கடலைக் கடைந்த. அவன்—இத்தகு செயல் களைச் செய்த அவன். அவனை. ஊர் ஆநிரை - ஊரிலுள்ள பசுக் கூட்டங்களை. மேய்த்து - மேயவிட்டு வீட்டுக்கு ஓட்டி வரும் அழகை. காண்மின் - காணுங்கள் என்று அசோதைப் பிராட்டி கூவியழைத்தது. உலகு எலாம் உண்டு உமிழ்ந்தது - பிரளய காலத்து உலகை அப்படியே உண்டு பின்படைக்கும் காலத்து வெளிப்படுத்தியது. உமிழ்தல் - இங்கு படைக்கும் தொழில். ஆராததன்மையன் - இவையனைத்தும் செய்தும் அடங்காத நிலையில். ஆங்கொருநாள் - அந்தக் கிருட்டிண அவதாரத்தில் என்றபடி. ஆய்ப்பாடி - ஆயர்பாடி. சீர்ஆர் - சிறந்த அழகிய. கலைஅல்குல் - மேகலை அணிந்த அல்குல். சேலை போர்த்த அல்குல் என்பதுமாம். கலை - மேகலை, சேலை. சீர்அடி - சீர்மிகுஅடி. அழகிய கால்கள். செம்துவர் வாய் - சிவந்த பவளம் போன்ற உதடுகளையுடையவாய். வார் ஆர் வனமுலை - கச்சணிந்த வனப்பு மிக்க முலைகள். முலை யாள் - முலைகளையுடைய அசோதைப்பிராட்டி. மத்து - தயிர் கடையும் மத்து. ஆர பற்றிக்கொண்டு - நன்றாக தயிரில் அழுந்தப் பற்றி, தயிரிலிருந்து வெண்ணெய் எடுக்க மத்து தயிரில் ஒரு பகுதி மூழ்கிய ஓர் அளவில் இருக்க வேண்டும். இதனையே "ஆரபற்றி" என்றனர். ஏர்ஆர் இடை - ஏற்றமிகு இடை. அழகிய இடுப்பு, மின்னல் இடை பெண்மைக்கு அழகு சேர்க்கும். நோவ - நோக. தயிர் கடையும்பொழுது மத்தைத் தயிரில் மிதந்தும் மிதக்காததுமாகப் பர்றி இழுக்க வேண்டும். அதற்குச் சற்று குனிந்து கயிற்றை இங்குமங்கும் இழுக்க வேண்டும். அப்பொழுது குனிந்த நிலையில் வெகுநேரம் இந்த வேலையைச் செய்யும்பொழுது இடுப்பு ஒடிந்து விடுவது போன்று வலிக்கும் என்பதால் "இடைநோவ" என்றனர். எத்தனையோர் போதும் ஆய் - எத்தனையோ பேர் போதும் போதும் என்று கூறுமளவுக்கு நீண்ட நேரம் தயிர் கடைந்து.

திரண்ட - திரண்டு வந்த. வேர்ஆர் நுதல்மடவாள் -வேர்வை துளித்த நெற்றியுடைய அசோதை. கலம் - பாத்திரம். வெண் ணெய்ப்பானை. நார்ஆர்உறி - பனைநாரால் அமைக்கப்பட்ட அருமையான உறி. ஏற்றி - அதன்மேல் வைத்து, உறி வீட்டில் தலைக்குமேல் தொங்கிக் கொண்டிருக்கும். எறும்பு அதனுள் போக முடியாதபடி வைப்பர். நன்கமைய வைத்து - யாரும் தொட முடியாதபடியும் எறும்பு முதலியன போக முடியாத படியும் வைத்து. போர்ஆர்வேல் கண் - ஆடவரிடம் போரிடும் வேல் போன்ற கண்கள். மடவாள் - இங்கு யசோதை. போம் தனையும் - போகும் மட்டும். ஓராதவன் - ஒன்றும் அறியாத வன்போல். உறக்கம் உறங்கி - உறங்குவதுபோல் உறங்கிக் கிடந்து. அறிவு உற்று - அன்னை அசோதை சென்று விட்டாள். இனி வர நாழியாகும் என்பதனை நன்கு அறிந்து கொண்டு. தார்ஆர் தடம்தோள் - மாலை சூடிய தோள்கள் மட்டும். உள் அளவும் கைநீட்டி - கையை முழுமை யாகச் செலுத்தி, இது குழந்தையின் குணத்தை நன்கு பிரதி பலிக்கும் சொல். ஆராத வெண்ணெய் - அப்பொழுதுதான் திரட்டிய வெண்ணெய்; ஒரு பானை நிறைய வெண்ணெய். சேர்த்து வைத்தாள் என்பது தெளிவு. தெவிட்டாத வெண்ணெய். அருகு - அருகில். மோர் ஆர்குடம் - மோர் நிரம்பிய குடம். உருட்டி - உருண்டோட வைத்து. முன் கிடந்த - முன்பு படுத்திருந்த. தானத்தே - இடத்திலேயே. ஓராதவன் - யாதுமறியாதவன். கிடந்தானை-உறங்குதுபோல் கிடந்தவனை. வாரா - வந்து. வைத்தது காணாள் - இடை நேர்க வெண்ணெய் சேர்த்து வைத்தது காணாதவளாய். வயிறடித்து - வயிற்றில் அடித்துக்கொண்டு. ஐயர் இவர் - இப்பெரிய மனிதர் இவர். அல்லால் - அல்லாமல். புகுது - புகுபவர். ஆர்ஆர் - வேறு யார். நீராம் - நீங்களே என்று. தீராவெகுளி - அடங்காக் கோபம். ஓர் நெடுங் கயிற்றால் - கையில் சிக்கிய ஒரு நீண்ட கயிற்றால். உண்மையில் அது குறுங்கயிறு. உரலோடே - உரலுடன். சிக்கன ஆர்த்து - நன்றாக இறுகக் கட்டி அடிக்க. ஆறா வயிற்றி

னொடு - வயிற்றெரிச்சலோடு. ஆற்றாதான் - வருந்தி நிற்பவன்.

வி - ரை:- நம் மகளிரிடம் கணவன் பெயரைக் கேட்டால் அவன் பெயரை நேரடியாகக் கூறாமல் அவன் பெயரை வேறு பல கூறி உணர்த்தி விடுவர். இப்படி ஒரு காலம் இருந்தது. கட்டுவச்சியின் மனதைக் கட்டிப்போட்ட எம்பெருமான் பெயரைக் கூறாது அவன் செய்த லீலைகளையே கூறுகிறாள். யாருடைய பொற்பாதங்கள் பட்டு இவ்வுலகம் அளக்கப் பட்டதோ, யாரால் இலங்கை நகரானது பொடிப் பொடி யாகிப் போனதோ, யாராலே கோவர்த்தன மலையை ஒரு விரலாலே தாங்கி, கல்மழை தாக்காமல் காத்ததோ, பாற் கடலைக் கடைந்ததும், ஊரில் உள்ள பசுக்களை மேய்த்து வர, என் மகன் நிரை மேய்த்து வரும் அழகு காணீரோ என்று அசோதை கூவி அழைத்ததும் பிரளய காலத்தில் உலகெல்லாம் உண்டு, பிறகு படைக்கும் காலத்து உமிழ்ந்து ஆக்கல், அழித்தல், காத்தல் எனும் முத்தொழிலையும் மேற்கொண்ட எம் ஐயன், இவையனைத்தும் செய்து அடங்காதவனாய், ஆயர்பாடியில் அசோதைப்பிராட்டி, இடுப்பு நோக நீண்ட நேரம் தயிர் கடைந்து திரண்ட வெண்ணெயை ஒரு பானையில் சேர்த்து யாருக்கும் எட்டாதபடி ஒரு அழகிய உறியில் வைத்துச் செல்லுமளவும், உறங்குவதுபோல் பாசாங்கு செய்து ஒரு மூலையில் கிடந்து, அவள் வெளியே சென்றதும் ஆசை அடங்காதவனாய் கைமுழுக்கப் பானையிலிட்டுச் சேர்த்து வைத்த வெண்ணெயனைத்தையும் அமுது செய்து அருகிலிருந்த மோர் குடத்தையும் காலிசெய்து சாய்த்துவிட்டு "இந்தப் பூனையும் பால் குடிக்குமோ" என்று சொல்லும்படி மறுபடியும் முன்பு படுத்திருந்த இடத்திலேயே படுத்து உறங்கு வதுபோல் பாசாங்கு செய்து கிடக்க, வெளியில் சென்று வந்த அசோதைப்பிராட்டி வெண்ணெய்ப் பானையும் மோர்க் குடமும் காலியாகிக் கவிழ்ந்து கிடப்பது கண்டு, இந்த மகானுபவர் இல்லாது வேறு யார் இந்த வேலையைச் செய் திருப்பார் என்று நன்கு தெரிந்து கொண்டு ஒரு குறுங்

கயிற்றால் உலகலந்தானை உரலோடு அழுந்திக்கட்டி அடிக்க வயிரெறிந்து வருந்தி நிற்பவன் என்று முடிக்கிறார்,

"பாலைக் கறந்து அடுப்பேற வைத்துப்
பல்வளையாள் என்மக ளிருப்ப
மேலையகத்தே நெருப்புவெண் டிச்சென்று
சாளக் கிராமமுடைய நம்பி
சாய்த்துப் பருகிட்டுப் போந்து நின்றான்"

என்று பெரியாழ்வார் திருமொழியில் கூறுவதும் காண்க.

"ஆரால் இவையம் அடியளப் புண்டது" என்றதால் இவ் வையகம் இறைவன் திருவடிகளால் அளக்கப்படும் பேறு பெற்றது என்பதாம். அளப்புண்டது அளக்கப்படும் பேறு பெற்றது. வாமன அவதாரத்தின் சிறப்பை விளக்கும் பகுதி. இலங்கை பொடிப் பொடியானது இராமாவதாரத்தில். கல்மாரியினின்றும் பசுக்களையும் மக்களையும் காத்தது கிருட்டின அவதாரத்தில். கண்ணன் கோவர்த்தன மலையை குடையாகக் கொண்டு ஆயரையும் ஆநிரையும் காத்த செய்தியை பெரியாழ்வார் பத்துப் பாசுரங்கள் பாடி மகிழ் கிறார். ஒவ்வொரு பாசுரத்தையும் "கோவர்த்தனமென்னும் கொற்றக்குடையே" என முடிக்கிறார். பாசுரங்களை கற்குந் தோறும் கற்குந்தோறும் கண்ணன்பால் எழும் காதல் மயக்கம் தெவிட்டாத இன்பத் தேனாய்த் தித்திப்பது காணலாம். ஆழிநீர் கடைந்தது, தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைய அமுதம் தோன்ற அதனை தேவர்கட்குப் படைத்த செய்தியும், கிருட்டிண அவதாரத்தில் அசோதைப்பிராட்டியார் கண்ணனை ஆநிரை மேய்த்து வர அனுப்பியதும், கண்ணன் கன்றுகள் மேய்த்து வரக் கண்டு அசோதை மகிழ்ந்து "காண்மின்" "காண்மின்" என்று கூவி அழைப்பது அமுதாய்ச் செவியுள் பாய்கிறது.

"சீலைக் குதம்பை ஒருகாது ஒருகாது செந்நிறமேல்
தோன்றிப்பூ
கோலப்பணைக் கச்சும் கூறையுடையும் குளிர்முத்தின்
கோடாலமும்
காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன் வேடத்தைவந்து
காணீர்"

என்று பெரியாழ்வார் திருமொழியில் வரும் பாசுரமும் இங்கு நினைவு கொள்க. "காண்மின்" என்பதும் "காணீர்"என்பதும் ஒப்பு நோக்குக. உலகெலாம் உண்டு உமிழ்ந்தது. பிரளய காலத்து நிகழ்ந்ததும், பிறகு மீண்டும் படைக்கும் காலத்து நிகழ்ச்சிகள் இவையனைத்தும் செய்து ஆராத தன்மையனாய் கிருட்டிண அவதார லீலைகள் மிகவும் சிறப்புப் பெறுகின்றன என்பதை "ஆராத தன்மையான்" என்று சொல்லால் சொல்லப் போகும் எம்பெருமான் தன்மைகள் சிறப்பு மிக்கவை என்றபடி.

திருமால் அவதாரங்கள் பத்தினுள் கண்ணன் அவதாரம் போல் களிப்பு மிக்கது வேறு ஒன்றும் இல்லை. கண்ணன் காப்பியமே, செல்வச் செழிப்பு. இன்பம், குதூகலம், உல்லாசம். சல்லாபம். கபடம் அவை தந்த வெற்றி இவையனைத்தும் ஒன்றித்த அவதாரம். ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஒருத்தி மகனாய் வளர்ந்த காலத்து அவன் செய்த இன்ப விளையாட்டுக்கள் கேட்கக் கேட்க இனிமையூட்டுபவை. அவற்றை கட்டுவிச்சியும் நமக்கு நினைவூட்டுகிறார். கண்ணனின் இளமைக் கோலங்கள் இங்கு நினைவு கூறப்படுவது காண்க.

அசோதைப்பிராட்டியை, "சீர்ஆர்கலை அல்குல்சீர், அடி செம் துவர்வாய், வார்ஆர் வனம் முலையாள்" என அடை கொடுத்து அடுக்கிக்கொண்டே போவது சிறப்பு. கலை அல்குல் என்றது மேகலையணிந்த அல்குலையுடையவள் என்பதாம் என முன்னரும் கூறினோம். வனமுலையாள் என்றதால் அசோதைப் பிராட்டியார் இளமை நீங்கா மங்கை என்பதை உணர்த்துகிறார். அவள் மற்ற மகளிர் போன்று இல்லத்தில் தயிர் கடைகிறாள். தயிர் கடையும்பொழுது மத்து எப்படி அமைந்

தழுந்தியிருக்க வேண்டுமென்பதனை "மத்து ஆர் பற்றிக் கொண்டு" என்கிறார். மத்து ஆர பற்றிக் கொண்டதால் அவள் வளைத்த இடுப்பை தயிர் கடைந்து முடிக்கு மட்டும் நிமிர்த்த முடியாத நிலையில், "ஏர் ஆர் இடை நோவ" என்றனர். தயிர் கடையும்பொழுது அவ்வப்பொழுது அருகிலுள்ள மற்ற மங்கையர் போதும் நிறுத்திவிடு என்பர். ஆனால் முழுமையாகத் தயிர் கடையப்பட்டு விட்டதா என்பது தயிர் கடையும் பெண்ணுக்குத்தான் தெரியும். கடையக்கடைய வெண்ணெய் திரண்டு கொண்டிருக்குமாதலின், "எத்தனையோர் போதும் ஆய்" என்றும் கேளாது மிகுந்த வெண்ணெய் திரட்டி நெற்றியில் வியர்வை சொட்ட வேறு ஓர் கலத்திலிட்டு அழகிய நாரினில் அமைக்கப்பட்ட உறியில் ஏற்றுகிறாள். அன்னைக்குத் தன் மகன்மேல் ஐயம். ஆதலின் அவன் கைக்கு எட்டாத உயரத்தில் நன்கமைய வைத்துப் போகும் மட்டும் பொய்த் தூக்கம் செய்த நம் இளவல் தன் வேலையைக் காட்டிவிடுகிறார். பானை நிறைய வெண்ணெய். அதை அள்ளி அள்ளி உண்ணலாம். ஆனால் கண்ணன் குழந்தை என்பதை ஆழ்வார் அழகுபட "தார்ஆர் தடதோள்கள் உள் அளவும் கைநீட்டி" என்று கண்ணன் அள்ளி அள்ளி உண்ட காட்சியை இந்நூலைக் கற்போர் உள்ளத்துள் கண்டு மகிழ வைக்கிறார். ஏனெனில் இக்காட்சியை எழுத்தால் நிரப்ப இயலாத ஒன்று. கண்ணன் விழுங்கிய, "ஆராத வெண்ணெய்" இஃது இரு பொருளில் வருபவை. அப்பொழுதுதான் திரட்டப்பட்ட வெண்ணெய். கண்ணன் கைமுழுமையாக நீட்டி அள்ளிஉண்ணுமளவுக்கு மிகுந்த வெண்ணெய். அசோதைப்பிராட்டி திரட்டியிருக்கிறாள் என்றால் அம்மக்களின் செல்வச் செழிப்பை என்னவென்று கூறுவது. மற்றுமொரு பொருள் தெவிட்டாத தெள்ளமது என்பதாம்.

"தாழியில் வெண்ணெய் தடங்கையார் விழுங்கிய
பேழை வயிற்றெம் பிரான்"

எனும் பெரியாழ்வார் திருமொழி யின் பாசுரமும் நினைவு கூர்க,

நான் (உரையாசிரியன்) சிறு குழந்தையாக இருக்கையில் கண்ணன் போன்று வெண்ணெய் திருடித்தின்று கொழுத்து விட்டதால் அச்சங்கொண்ட என் அன்னை மருத்துவரிடம் காண்பித்து நிலைமையறிந்து ஆறுதல் அடைந்தாள் என என் அன்னை சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆதலின் வெண்ணெய் உண்ணுதல் உடலுக்கு அழகும் ஒளியும் சேர்க்கும்.

கண்ணனின் மனம் வெண்ணெய் விழுங்கியதுடன் திருப்தி யடைந்ததாகத் தெரியவில்லை. அருகில் இருந்த மோர்க் குடமும் சாய்கிறது. இவையனைத்தும் செய்துவிட்டு பூனை தன் பழைய இடத்தில் போய் படுத்துக்கொள்கிறது. அசோதைப்பிராட்டி வருகிறாள். பானை காலியாகக் கிடப் பதும் குழந்தை முன்புபோல் உறங்கிக் கொண்டிருப்பது கண்டு ஐயன் செய்ததும் செய்துவிட்டு படுத்து உறங்குவதுபோல் பாசாங்கு செய்துகொண்டிருப்பது கண்டு, "ஐயர் இவர் அல்லால் இங்கு புகுதுவார் ஆர்ஆர் இது செய்தீர் நீராம் என்று" ஒரு குறுங்கயிற்றால் ஊரார் எல்லாம் காண உரலோடு சிக்கனக்கட்டி அடிக்க வயிற்றெரிச்சலுடன் வருந்தி நிற்பவன் அந்த மாயக் கண்ணன் என்பதாம்.

திருமங்கையாழ்வார், "நெடுங்கயிற்றால்" என்பதை மதுரகவியாழ்வார் "கண்ணி நுண்சிறுத்தாம்பு" என்றுகூறி பத்துப் பாசுரங்களைப் பொழிந்து செல்கின்றார். அவற்றின் முதற் பாசுரம்.

"கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணிய பெருமாயன் என்னப்பனில்
நண்ணித் தென்குருகூர் நம்பியென் றக்கால்
அண்ணிக்கும் அமுதூறும் என்னாவுக்கே"

என்று அந்நெடுங்கயிறாம் குறுங்கயிற்றைப் போற்றுவது காண்கிறோம்.

இப்பகுதி திருமால் அவதாரங்களுள் கண்ணன் அவதாரம் சிறப்பு மிக்கதாகவும், மற்ற அவதாரங்களால் திருப்தி

அடையாத எம்பெருமான் கண்ணன் அவதாரம் எடுத்தனர் என்பதை "ஆராத தன்மையன் ஆய்" என்பது உணர்த்துதல் நன்கு உணரப்பட வேண்டும் என்பதால் இங்கு மீண்டு வலியுறுத்துகிறோம்.

நீரார் நெடுங்கயத்தைச் சென்றலைக்க நின்றுரப்பி
ஓரா யிரம்பண வெங்கோவிய னாகத்தை
வாரா யெனக்கென்று மற்றதன் மத்தகத்துச்
சீரார் திருவடியால் பாய்ந்தான்—தன்சீதைக்கு
நேராவ னென்றோர் நிசாசரிதான் வந்தாளைக்
கூரார்ந்த வாளால் கொடிமூக்குங் காதிரண்டும்
ஈரா விடுத்தவட்கு மூத்தோனை—வெந்நரகம்
சேரா வகையே சிலைகுனித்தான் செந்துவாவாய்
வாரார் வனமுலையாள் வைதேவி காரணமா
ஏரார் தடந்தோ ளிராவணனை—ஈரைந்து
சீரார் சிரமறுத்துச் செற்றுகந்த செங்கண்மால்.

அ - ரை:- நீரார் - நீர் மிகுந்த. நெடுங்கயம் - பெருங் கயம், பொய்கை. அலைக்க - அலைக்கழிக்க. ஓர் ஆயிரம் பணம் - ஆயிரம் படங்களையுடைய. வெங்கோஇயல் - கொடிய யமன் போன்ற, கோஇங்கு எமனை உணர்த்தும். நாகம் - பாம்பு. உரப்பி - உசுப்பு, சீண்டிவிட்டு. எனக்கு வாராய் - என்னுடன் போர் செய்ய வாராய். மத்தகம் - தலை பாகம். சீர்ஆர் திருஅடி - சிறந்த அழகிய பாதங்கள். பாய்ந்தான் - நடனம் செய்தல். நர்த்தனம் செய்தல். நேராவன் - நிகராவேன். நிசாசரி - அரக்கி, சூர்ப்பணகை, கூர்ஆர்ந்த - கூர்மை மிக்க. கொடிமூக்கு - நீண்டமூக்கு. நீண்ட மூக்கு மகளிர்க்கும் அழகு சேர்க்கும். ஈரா - ஈர்த்து. விடுத்து - துரத்தியடித்து, அவட்கு மூத்தான் - அவள் அண்ணன் கரன். வெம்நரகம் சேராவகை - நரகில் அனுபவிக்க வேண்டியதை உலகிலேயே அனுபவிக்க. சிலை - வில். குனித்தான் - வளைத்தான், கொன்றான். செம்துவர்வாய் -

சிவந்த பவளவாய். வார்ஆர்வனம் முலையாள் - கச்சு அணிந்த முலையையுடையவளான. வைதேவி - சீதை, காரணமா - காரணமாக. ஏரார் தடம்தோள் - அழகிய பெரிய தோள்கள். சீர்ஆர் - சிறந்த அழகிய. ஈர்ஐந்து - பத்து சிரம் - தலை. செற்று - கொன்று. உகந்த - மனமுவந்த. செம்கண்மால் - சிவந்த கண்களையுடைய திருமால் புண்டரீகாட்சன்.

வி - ரை:- அன்றியும் என்பதனை இங்கு கொணர்ந்து, பொருள் காண்க. மேலும், நீர் நிறைந்த நெடுங்கயத்தைச் சென்று கலக்கி அதில் குடிகொண்டிருந்த ஆயிரம் தலைகளை யுடைய யமன் போன்றும் கொடிய நாகப் பாம்பை அதட்டி. போர் செய்ய வாராய் என்று அழைத்துப் போரிட்டு அதனை அடக்கி அதன் தலைமேல் நின்று நர்த்தனம் செய்தவன். தன் சீதைக்கு நிகர் என்று வந்த சூர்ப்பணகையென்னும் அரக்கியை கூர்மிகு வாளால் நீண்ட மூக்கையும் காதுகள் இரண்டையும் அறுத்துத் துரத்திவிட்டு அவளுக்கு மூத்தோன் கரனுக்கு நரகம் என்பது வேறு வேண்டாமென உணரும்படி வில் வளைத்து அழித்துக் கொன்றவன். 'சிவந்த பவளவாயுடையவளும் கச்சு அணிந்த வனப்பு மிக்க முலைகளையுடையவளுமான சீதாப்பிராட்டிக்காக, எழுச்சி மிகு அழகிய குன்று போன்ற தோள்களையுடைய சிறந்த அழகிய பத்துத் தலைகளையும் அறுத்துக் கொன்ற மகிழ்ச்சி மிக்க கண்களையுடைய திருமால் புண்டரீகாட்சன்.

நீர்ஆர் நெடுங்கயம் என்பது யமுனையாற்றில் ஒரு மடுவில் வசித்து வந்த காளியனென்னும் ஆயிரம் தலை நாகத்தை அடக்கியது. அலைக்க நின்று என்றதனால் நீண்ட நெடுங்கயமே அலைக்கழிக்கப்பட்டதால் அதில் வசித்த நாகத்தின் கதியை முன்னமே உணர்த்திவிட்டபடி. வெங்கோ என்றால் கொடிய அரசன். இங்கு களியன் எனும் பாம்பு நாகப் பாம்புகட்கெல்லாம் அரசன் போன்றவன் என்றபடி.

வெங்கோ என்ற சொல்லுக்கு யமன் என்ற பொருள் கொள்ளினும் பொருந்தும். வெங்கோ இயல் என்றதால் யமன் போன்ற என்றே பொருள் கொள்ளப்பட்டது. சீர்ஆர்திரு அடியால் பாய்ந்தான் என்றது அதனை அடக்கிய வேகத்தில் அதன் தலைமேல் நின்று நர்த்தனம் செய்தது. இரு செயலுக்கும் இடைவெளியில்லாத வேகத்தை உணர்த்தவே "பாய்ந்தான்" என்றனர்.

"தன் சீதைக்கு" என்றதால் பாற்கடலில் தன்னைப் பிரிந்து இராமாவதாரத்தில் தன்னிடம் ஒன்று சேர்ந்த சீதையை என்பதாம் இக் காட்சியைக் கம்பநாடன்,

"கண்ணொடு கண்ணினை கவ்வி யொன்றையொன்
றுண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
அண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள்"

என்கிறார். கம்பன் ஓர் தமிழ்க் கவிஞன்.

"யான் நோக்கின் நிலன் நோக்கும்"

என்பதே தமிழர் பண்பாடு. அப்படியிருக்க, "அவளும் நோக்கினாள்" என்றனரே என்றதோர் வியப்பு எழுவது இயற்கை. இங்கு, "பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ" என்பதையே உணர்த்தும் நிகழ்ச்சி. அண்ணல் தன்னுடன் பாற்கடலில் இருந்ததன் நாயகி என்பதைக் கண்டு கொள்கிறான். அவளும் தன் நாயகன் தன்னைத் தேடி வந்து விட்டான் என்பதைக் கண்டு கொள்கின்றனர். ஆதலின், "கண்ணொடு கண்ணினைக் கவ்வி, ஒன்றையொன்றுண்ணவும், நிலைபெறாது, உணர்வும் ஒன்றிட" என்று அடிக்கொண்டே போகிறார். இப்பகுதியை, உரையாசிரியன் நறுந்தொகை விருந்து இரண்டாம் பந்தி பெண்டிர்க்கழகு பகுதியில் எடுத்தாண்டிருத்தல் கண்டு மகிழ்க.

தன் சீதைக்கு, "நேர் ஆவன்" என்ற காரணத்திற்காக வெகுண்டெழுந்த வள்ளல், சூர்ப்பணகை மானபங்கப்படுத்திய

தோடு மட்டுமல்லாமல் கரனை மாய்த்த செய்தியை வெம் நரகம் சேராவகையே சிலை குனித்தான் என்பது சிறப்பு. கொடிய நரகம் என்பது வேறு இல்லை என்பது போன்று அவனை அழித்தான் என்பதாம். சீதாப்பிராட்டிக்கு, "செம் துவர்தாய், வார்ஆர் வனமுலையாள்" என்று அடை கொடுத் திருத்தல் காண்க. இராவணன், "ஏர்ஆர் தடம்தோள் இராவணன்" என்பதும் காண்க. செம்கண்மால் என்றதால் இராவணனை அழித்ததால் சிவந்த கண்களையுடைய திருமால் என்பதுவுமாம்.

சூர்ப்பணகை இராவணன் தங்கை தண்டகாரணியத்தில் தங்கி அங்கு வசிக்கும் முனிவர்களை வருத்தித் திரிந்தவள். இராம இலக்குமணர் கோதாவரிக்கரையில் பஞ்சவடி ஆசிரமத் திருக்கையில் இராமபிரான் அழகில் மயங்கி அழகிய வடிவம் கொண்டு தன்னைக் கூடும்படி வேண்டியும் கேட்காதது கண்டு சீதையிருப்பதால்தான் இராமன் தன்னை விரும்பவில்லை எனத் தப்புக்கணக்குப் போட்டு, இராமன் காலைக்கடன் முடிக்கச் சென்றிருந்த நேரம் பார்த்துச் சீதையைப் பிடிக்கத் தொடர்கையில் இலக்குமணன் கண்டு அவள் கூந்தலைக் கையால் பற்றி மூக்கையும் காதுகளையும் அறுத்துத் துரத்தி விட்டதை இராமன் செய்ததாகக்கூறப்படுகிறது. பெரியாழ்வாரும் இதனைப் பெருமாள் செயலாகவே மனத்தில் கொண்டு, "சூர்ப்பணகாவைச் செவியொடு அவளார்க்க அரிந்தானைப் பாடிப்பற அயோத்திக்கரசனைப் பாடிப்பற" என்கிறார். இந்த சூர்ப்பணகையின் அண்ணன்முறை கரன் என்பவன். ஆதலின், "அவட்கு மூத்தானை" என்றனர். இராவணன் தாயான கேகசியின் தங்கையும், அரக்கரில் சிறந்த சுமாலின் மகளும், இராவணன்து தந்தையான விச்ரவ முனிவரையே கொழுநனாக அடைந்தவளும், இரா்வணனுக்குச் சிறிய தாயுமாகிய கும்பீநசியின் மகனாய், இராவணன் தம்பி முறையில் வருபவன் கரன். கேகசியின் வயிற்றில் இராவணன் கும்பகர்ணனுக்குப்பின் விபீடணனுக்குமுன் பிறந்தவள் சூர்ப்பணகை. சிறிய தாயின் மகனான கரன் இவளுக்கு மூத்தோன் எனப்பட்டான் என்த

இவன் சூர்ப்பணைக்குப் பாதுகாவலாகப் பெருஞ் சேனை யுடன் தண்டகாரணியத்தில் இருக்க இராவணனால் நியமித்து வைக்கப்பட்டவன். சூர்ப்பணகை நிலைகண்டு பெரும் படை யுடன் சென்றபொழுது அகம்பநன் என்பான் சொல்லியும் கேளாது போர் செய்கையில், இளையபெருமாளைச் சீதைக்குக் காவலாக்கி, இராமன் போர்க்கோலங் கொண்டு கரன் சேனையை அழித்துப்பின் கரனைக் கொல்லும் பொருட்டு ஒரு அம்பு தொடுக்க இராமன் வில் முறிந்துவிட, இராமன் தன் கையைப் பின் நீட்டி வருணன் தந்த விஷ்ணு தனுசைப் பெற்று அதனை வளைத்து நாண் ஏற்றி முதலில் கரனது வலக்கையை யும் பின்பு கரனையும் கொன்று வெற்றிகொண்டான் என்பதனையே, "வெம்நரகம் சேராவகையே சிலை குனித் தான்" என்றது. "ஏர்ஆர் தடம்தோள் இராவணனை சீர்ஆர் ஈஐந்து சிரம் அறுத்து செற்று" என்றது இராவணனின் பத்து தலைகளையும் வீழ்த்தி வெற்றிகொண்டது யாவரும் அறிந்ததே.

"வெந்நரகஞ் சேராவகையே சிலைகுனித்தான்", என்றதன் பொருள் அவன் நரகில் சென்று அனுபவிக்க வேண்டிய துன்பங்களை இங்கேயே அனுபவித்தான், அனுபவிக்கும்படி வில் வளைத்தான் என்பதாம் என்று முன்னமே கூறினோம். ஆனால் இராமபிரான் கரனை நரகுக்கு அனுப்பாது சுவர்க்கத் திற்கு அனுப்பினார் என்றும் பொருள்படும் என்பதும், இது பொருந்தாப் பொருள் என்பாரும் உண்டு. ஆனால் என்னுள் எழுந்த ஓர் பொருளை இங்கு கூற விரும்புகிறேன். கரன் போரிட்டது எம்பெருமானிடம். எம்பெருமானிடம் போரிடுதல் என்பது சாதாரண ஒரு மனிதனுக்குக் கிடைக்கக்கூடிய வாய்ப் பல்ல. எம்பெருமான் கைப்பட்டுத் தொடுத்த அம்பு வந்து தைத்த பொழுதே கரன் உடல் உள்ளம் அனைத்தும் புனித மடைந்துவிடுகிறது. அவனிடத்து பாவம் என்பது எங்கே இருக்கும். பாவம் ஒன்றும் இல்லாது புனிதமடைந்த ஒருவனை நரகம் எப்படி ஏற்கும்? ஆதலின் இராமபிரானைக் கண்களால் காணும் பாக்கியம் பெற்றவன். அவன் கைபட்ட

அம்புகள் அவன் உடலைத் துளைக்கும் பேறுபெற்றவன். சுவர்க்கமே வேண்டாம். இத்தகு பேறுபெற்ற ஒருவனுக்கு சுவர்க்கம் என்ற ஒன்று வேண்டவே வேண்டாம். ஏனெனில் சுவர்க்கத்துக்குச் சென்றாலும் அங்கும் அந்தத் திருமாலைத் தானே பார்க்கப் போகிறான். அதை இங்கேயே கண்கள் குளிரக் கண்டுவிட்டானே என்பதால் "வெந்நரகஞ் சேரா வகையே" என்றது நரகில் நுழைய முடியாதபடி அவன் தூய்மையடைந்து சுவர்க்கம் எய்தினான் என்பதுவும் இதற்கான பொருளுமாகுமென்பதுவுமாம்.

போரார் நெடுவேலோன் பொன்பெயரோ னாகத்தைக்
கூரார்ந்த வள்ளுகிராற் கீண்டு—குடல்மாலை
சீரார் திருமார்பின் மேற்கட்டிச் செங்குருதி
சோராக் கிடந்தானைக் குங்குமத் தோள்கொட்டி
ஆரா வெழுந்தா னரியுருவாய்—அன்றியும்
பேர்வாம னாகிய காலத்து மூவடிமண்
தாரா யெனக்கென்று வேண்டிச் சலத்தினால்
நீரேற் றுலகெல்லாம் நின்றளந்தான் மாவலியை
ஆராத போரி லசுரர்களுந் தானுமாய்க்
காரார் வரைநட்டு நாகங் கயிறாகப
பேராமல் தாங்கிக் கடைந்தான்.........

அ - ரை:- போர்ஆர் - போரிடுவதில் வல்ல. நெடு வேலோன் - நீண்ட வேலைத் தாங்கியவன், வேற்படையுடையவன். பொன்பெயரோன் - இரண்யம் என்ற வடசொல்லுக்குப் பொன் என்று பொருள்படும். இரணியகசிபு. ஆகம் - உடல். அரிஉரு - சிங்கத்தலை மனித உடல் கொண்ட நரசிம்ம உருவம். கூர்ஆர்த்த - கூர்மை மிக்க. வள் - வலிமை. உகிர் - நகம். கீண்டு - கீறிப் பிளந்து, புறண்டுதல், வகிர்தல். சீர்ஆர் திருமார்பு - சிறந்த அழகிய திருமகளுக்கிடமான மார்பு. மாலைகட்டி - மாலையாக அணிந்து. செம்குருதி

சோரா - சிவந்த இரத்தம் பெருக. குங்குமம்தோள் - குங்குமம் பூசப்பட்ட தோள். சீதாப்பிராட்டி தன் நெற்றிக் குங்குமம் படிய மார்பில் சாய்ந்ததால் குங்குமச் சேறு பூசப்பட்ட தோள். கொட்டு - தட்டி, மார் தட்டுதல், தோள் தட்டுதல் இரண்டும். ஆரா - ஆர்பரித்து. எழுந்தான் - எழுந்தவன். அன்றியும் - மேலும். பேர்வாமன் - மிகப் பெரிய வாமன். மூவடிமண் - மூன்றடி நிலம். தாராயென - தரமாட்டாயா என யாசித்து. சலத்தினால் - வஞ்சனையால். நீரேற்று - அவன் நீர் வார்துக் கொடுக்க அதனை ஏற்றுக்கொண்டு. நின்று - திரிவிக்கிரமனாக ஆகாயமளாவி வளர்ந்து நின்று. அளந்தான் - பூவுலகை ஓரடியாலும், மேலுலகை மற்றோரடியாலும் அளந்தவன். மாவலி - மகாபலி எனும் அசுரன். ஆராத போர் - முடிவில்லாத தேவ அசுரர்கட்கு இடையில் நடந்த போர். இருக்கு வேதம் காண்க. வேத காலப் போர் அசுரர்களும் தானும் ஆய் - அசுரர்களும் தானும். கார் ஆர் வரை - கார்மேகம் சூழ்ந்த மந்தரமலை. நட்டு - மத்தாக நட்டு வைத்து. நாகம் - வாசுகி எனும் நாகம். பேராமல் தாங்கி - அம்மலை நிலை பிறழாமல் இருக்க அதனை முதுகில் தாங்கி, கீழே சென்றுவிடாமல் இருக்க ஆமை வடிவமெடுத்துத் தாங்கி. திருதுழாய் - திருத்துழாய் மலரால் ஆன. தார் - மாலை. ஆர்ந்த - அணிந்த. கடைந்தான் - திருப்பாற்கடல் கடைந்தான்.

வி - ரை:- போரிடுவதில் வன்மை மிக்க நீண்ட வில்லையுடைய பொன் பெயரோனது உடலை நரசிம்ம உருக்கொண்டு கூர்மிகு நெருங்கிய திருநகங்களால் கிறிப் பிளந்து அந்த இரண்யனின் குடலைப் பிடுங்கி, தன் அழகிய பிராட்டி தங்கும் மார்பில் மாலையாக அணிந்து சிவந்த இரத்த வெள்ளத்தில் கிடந்த அந்த அசுரன் இரண்யனை, குங்குமச் சேற்றினாலான தனது தோளின்மேல் அறைந்து கொண்டு ஆரவாரம் செய்து எழுந்தான், அன்றியும், மிகவும் சிறிய வாமனனாக திருவவதாரம் செய்த காலத்து, மாவலியிடம் மூன்றடி மண் கொடு எனக் கேட்டு, அவன் நீர்வார்த்துக் கொடுத்ததும், வஞ்சனையால் திரிவிக்கிரமனாக ஆகாயமளாவி வளர்ந்து நின்று

உலகெலாம் அளந்து தனதாக்கிக் கொண்டான். முடிவில்லா தேவ அசுரர் போரில், அசுரர்களும் தானுமாக மேகம்சூழ் மந்தரமலையை மத்தாகக்கொண்டு வாசுகி எனும் நாகத்தைக் கயிறாகச் சுற்றி அம்மலையானது கீழே அழுந்திவிடாதபடி ஆமை அவதாரம் கொண்டு அம்மலையை முதுகில் தாங்கி திருக்துழாய் மாலையை மார்பில் அணிந்து பாற்கடலைக் கடைந்தான்.

இரணியன் ஒரு வரம் பெற்றிருந்தான். தனித்தனியாகப் போரிடுகையில் தேவர், மனிதர், விலங்கு முதலியவர்களாலும் அவர்களின் ஆயுதங்களாலும், பகலிலும், இரவிலும், பூமியிலும் ஆகாயத்திலும் வீட்டினுள்ளும் புறத்திலும் தனக்கு மரணம் வரக்கூடாது என்பதுவாம். இவ்வாறு வரம் பெற்றிருந்ததால் தேவர் முதலியோருக்கு பல கொடுமைகள் செய்து தன்னையே கடவுளாக வணங்கும்படி செய்து வந்தான். ஆனால் அவனின் ஒரே மகனான பிரகலாதன் இளமையிலிருந்தே விட்டுணுவிடம் நீங்காத பக்தி கொண்டவன். கல்வி கற்க ஆரம்பிக்கும்பொழுது இரண்யன் தன் பெயரையே முதலில் சொல்லிக் கற்க வேண்டும் எனக் கட்டளையிட்டும் கேளாதவனாய் நாராயண நாமம் சொல்லித் தன் கல்வியை ஆரம்பிக்க, தொடர்ந்து நாராயண நாமத்தையே செபமாகத் தினமும் தியானிப்பது கண்ட இரண்யன் கோபங்கொண்டு அவனைப் பலமுறையாலும் துன்புறுத்தி மேலும் கேளாதது கண்டு தன் மகனைக் கொல்லவும் பல தந்திரங்கள் செய்தும் அவனை நாராயண மந்திரம் காப்பதறிந்து, தன் மகனை நோக்கி, 'மகனே! நீ சொல்லும் நாராயணன் எங்குள்ளான்? எனக்குக் காட்டு' என்றுகூற, பிறகலாதாழ்வாரும், 'என் நாராயணன் தூணிலுமுளன் துரும்பிலுமுளன் எங்குமுளன்' என்று மனவுறுதியுடன் சொல்வது கேட்டுப் பெரிதும் வெகுண்டு ஆங்கிருந்து ஒரு தூணை அடித்து இதில் உள்ளனோ? என்று வெகு கோபமாகக் கேட்க, பிரகலாதாழ்வாரின் மனம் குளிர அந்தத் தூணிலிருந்து நாராயணன் சிங்க

முகமாகவும், மனித உடலுடனும், நரசிம்மமூர்த்தியாக வெளி வந்து இரண்யனைப் பிடித்து வாசற்படியில் தன் மடிமீது வைத்துக்கொண்டு தன் திருக்கை நகங்களால் அவன் வயிற் றைப் பிளந்து குடலைப் பறித்து இலக்குமி தங்கும் மார்பில் மாலையாக அணிந்துகொண்டு, இரத்த வெள்ளத்தில் மிதந்த அவன் உடலை, திருமகள் சாய்ந்து இன்புறும் தன் திருத் தோள்களில் அவன் உடலை எடுத்து அறைந்து கொண்டு. "இரண்யன் ஒழிந்தான்" என ஆர்ப்பரித்தெழுந்து பிரகலாத ஆழவாருக்கு அருள் செய்தது இப்பகுதியில் கூறப்பட்டுள்ளது.

"கோளரியின் னுருவம்கொண்டு அவுணனுடலம்
குருதிகுழம்பி யெழக்கூருகிரால் குடைவாய்!
மீளஅவன் மகனை மெய்ம்மை கொளக்கருதி"

என்று பெரியாழ்வார் திருமொழியில் வருதலும் காண்க.

மகாபலியென்னுமோர் அசுரன் தன் வலிமையால் இந்திரன் முதலிய தேவர்களை வென்று மூவுலகையும் ஆண்டு வரும் காலத்து, அரசிழந்த இந்திரன் முதலான தேவர்கள் அந்த நாராயணனைச் சரண் அடைந்து வேண்ட, அப்பெருமான் மிகவும் குள்ள வடிவமான வாமனவ தாரங்கொண்டு, காச்யபமா முனிவனுக்கு அதிதியிடம் தோன்றி பிராமண பிரம்மச்சாரியாகி வேள்வியயிற்றி வேண்டு வன வேண்டியபடி அனைவருக்கும் கொடுத்து வருதல் கண்டு, அந்த மாவலியிடம் சென்று, தான் தவம் செய்வதற்குத் தன் காலடியால் மூவடி நிலம் வேண்டுமென, மாவலியும் இசைந்து தாரை வார்த்துக் கொடுத்தவுடன் திரிவிக்கிரமனாக ஆகாய மட்டும் வளர்ந்து, ஓரடியால் பூமியையும், மற்றுமோர் அடியால் மேலுலகத்தையும் அளந்து தானமாகப் பெற்ற மற்றுமோரடிக்கு நிலமில்லையேயென, அவன் வேண்டு கோலின்படி அவன் தலையில் மூன்றாவதடி வைத்து அவனைப் பாதாளத்தில் அழுத்தி அடக்கிய செய்தியும் இப்பகுதியில் வருதல் காண்க.

தேவர்களும் அசுரர்களும் பார்கடலைக் கடைந்து அமுதம் பெற்றனர். பாற்கடலைக் கடைந்து தேவர்கள் தாங்கள் இழந்த செல்வங்களையெல்லாம் பெறவேண்டியிருந்தது. ஒரு முறை வித்தியாதரப் பெண் ஒருவள் விஷ்ணு உலகம் சென்று திருமகளைப் புகழ்ந்து பாடி திருமகள் தந்த ஒரு மலர் மாலையை மகிழ்ச்சியுடன் தன் கை வீணையில் அலங்கரித்துக் கொண்டு பிரம்மலோகம் வழியாக வர, துர்வாசமுனிவர் எதிர்பட்டு அந்த வித்யாதரப் பெண்ணை வணங்கித் துதிக்க அப்பெண் மனமுவந்து அந்த மாலையை முனிவருக்குக் கொடுத்தாள். அம்மாலையின் பெருமையையுணர்ந்த முனிவன் பெரும் மகிழ்ச்சியுடன் மாலையுடன் தேவலோகத்திற்கு வந்து அப்பொழுது ஐராவத யானையின்மேல் உல்லாசமாக வந்து கொண்டிருந்த இந்திரனுக்கு அம்மாலையைக் கொடுத்தான். இந்திரன் அதனைக் கைநீட்டி வாங்காமல் மாவட்டியினால் வாங்கி, யானையின் பிடரியின்மீது வைக்க, யானை அதனைத் துதிக்கையால் இழுத்துக் காலில் போட்டு மிதித்தது. அது கண்ட முனிவரன் மிகுந்த கோபம் கொண்டு, இந்திரனின் செல்வச் செருக்கை அடக்க எண்ணி, "தேவலோகத்துச் செல்வங்களெல்லாம் கடலில் ஒழிந்துவிடக் கடவது" என்று சபிக்க, உடனே தேவலோக செல்வங்கள் எல்லாம் ஒழிந்து கடலுள் மறைந்தன. தேவர்கள் செல்வம் யாவும் அழிந்தது கண்ட அசுரர் தேவலோகம் சென்று அவர்களை வென்றனர். இந்திரன் முதலான தேவர்கள் நாராயணனைச் சரணடைந்து வேண்ட, அப்பெருமான் கட்டளைப்படி அசுரர்களையும் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாகவும் வாசுகி எனும் நாகத்தைக் கயிறாகவும் கட்டிப் பாற்கடலைக் கடையலாயினர். அப்பொழுது மத்தாகிய மந்தரமலை கடலினுள் அழுந்திட, தேவர்கள் வேண்டுகோளின்படி பெருமாள் ஆமை அவதாரம் எடுத்து கடலுக்கடியில் சென்று மந்தரமலையைந் தன் முதுகில் தாங்கி, பாற்கடலைக் கடைந்து அமுதம் பிறக்க உதவினர் என்பதுவும் இங்கு கூறப்படுகிறது.

இரண்யனுக்குப் பொன்பெயரோன் என்று தமிழில் சிறப்பிருத்தல் காண்க. நாராயணனால் கொல்லப்பட வேண்டும்

என வரம் பெற்றவன் நாராயணன் திருமடியில் கிடக்கவும், திருநகங்களால் பிளக்கப்படவும் பாக்கியம் பெற்றவன். திருமகள் சாய்ந்து கிடக்கும் மார்பில் அவன் உடல் சாத்தப் ட்டும் பேறும் பெற்றவன் என்பதை இங்கு உணர்தல் வேண் டும். "ஆரா எழுந்தான்" என்பதில் "ஆரா" என்ற சொல் செய்யாவென்னும் வாய்ப்பாட்டிறந்த கால வினையெச்சம். ஆர்பரித்து என்றபடி. பேர்வாமன் என்றது வாமனர்களுள் பெருமை மிக்கவன். வாமநன் என்றது வர்மன் எனச் சிதைந்து வந்தது. சலத்தினால் என்பது வடசொல்.

... ... ... ... ... ... ... ...திருத்துழாய்
தாரார்ந்த மார்வன் தடமால் வரைபோலும்
போரானை பொய்கைவாய்க் கோட்பட்டு நின்றலறி
நீரார் மலர்க்கமலங் கொண்டோர் நெடுங்கையால்
நாரா யணாஓ! மணிவண்ணா நாகணையாய்!
வாராய் என்னாரிடரை நீக்கா யெனவெகுண்டு
தீராத சீற்றத்தாற் சென்றிரண்டு கூறாக
ஈரா வதனை யிடர்கடிந்தா னெம்பெருமான்
பேரா யிரமுடையான் பேய்ப்பெண்டீர் நும்மகளைத்
தீரா நோய்செய்தா னெனவு ரைத்தாள்.

அ - ரை;- திருத்துழாய்த் தாரார்ந்த - திருத்துழாய் மலர்மாலையணிந்த. மார்வன் - மார்பன், சொல் விகாரம். ஆர்ந்த - முழுமையாக மூடிக்கொண்ட. திருத்துழாய் மலர் மாலை மார்பை முழுமையாக மூடி மறைத்து அலங்கரித் திருந்தது என்பதாம். தடம்மால்வரை - மிகப் பெரிய கருமை யான மலை. தடம் - பருத்த உயர்ந்த, மால் - கருமை. வரை - மலை, போர்ஆனை - செருக்குற்ற யானை. பொம்கை - நீர்த்தடாகம். வாய்க்கோள்பட்டு - கோள்வாய் பட்டு. முதலையின் வாயிலகப்பட்டு. கோள் - பாம்பு. முதலை. நின்றலறி - யாதும் செய்வதறியாது திகைத்து நின்று அலறி. நீர்ஆர்கமலம் - நீரிலிருந்த அழகிய கவல மலர். கொண்டு - பற்றிக்கொண்டு. ஓர்நெடுங்கை - நீண்ட

துதிக்கை. ''ஓர்'' அசையெனத் தள்ளினும் தள்ளுக அல்லது யானைக்கு முழு நம்பிக்கை தருவது அதன் தும்பிக்கை ஒன்றே என்பதை உணர்த்துவதாகவும் பொருள் கொள்க. நாராயணா ஓ - ஓநாராயணா. நாராயணா என்றது விளியாக மாறி நாராயணாஓ என்றாயிற்று. மணிவண்ணா - நீலநிறம் கொண்ட மணி போன்றவனே. நாக அணையாய் - நாகணைப் படுக்கையாய் உடையவனே. வராய் - வந்தருளாயோ. என் அர்இடர் - என் பெருந்துன்பம். நீக்காய் - நீக்கமாட்டா. என - என்று கூக்குரலிட. வெகுண்டு - சீற்றம் கொண்டு சீற்றம் - கோபம். இரண்டு குறுஆக ஈரா - இரண்டு பங்காகப் பிளந்து. இடர் - துன்பம். கடிந்தான் - நீக்கினான். துன் பத்தைக் கடிதல் என்பது கடிந்து நீக்குவதாகும். எம்பெரு மான் - யான் போற்றும் இறைவன். பேய்பெண்டீர் - பேய் போன்று பித்துடைய பெண்டீர். தீராநோய் - காதல் நோய் தலைவன் தலைவியரைச் சேர்ந்தாலன்றி நீங்காதாதலின் தீரா நோய் என்றனர். உரைத்தாள் - சொன்னாள்.

வி - ரை:- திருத்துழாய் மலர் மாலையணிந்து கடலைக் கடைந்தவன் என்ற முன்பகுதியினை இதனுடன் சேர்த்துப் பொருள் கொள்க. ஒரு மலை போன்றும் மத்தகத்தையுடைய செருக்கு கொண்ட யானை ஒன்று பொய்கையில் ஒரு முதலை யின் வாயில் அகப்பட்டு அதினின்றும் தப்ப இயலாது வருந்தி அலறி, நீண்ட தன் துதிக்கையால் ஆங்கு அலர்ந்திருந்த கமல மலரை எடுத்துக்கொண்டு, "நாராயணாஓ மணிவண்ணா, நாகணையாய்" என்று ஓலமிட, அந்த நாராயணனும் அந்த முதலையின்மேல் சீற்றம் கொண்டு அதனை இரண்டு கூறு ஆகப் பிளந்து அந்த யானையின் துன்பத்தைப் போக்கின எம்பெருமான். முன்பு கூறியதுபோல் ஆயிர லீலைகள் செய்தவன் அவனுக்கு ஆயிரம் பெயர்கள் உண்டு. பேய் போன்றும் பிதற்றும் பெண்டீர் அவனே உம் மகளுக்குத் தீரா நோய் செய்தான் என்றுரைத்தாள்.

போரானையென்றதற்கு செருக்கு கொண்ட யானை என முன்பே பொருள் கொண்டோம். இந்த யானை

  

முற்பிறவியில் இந்த்ரத்யும்நனென்னும் ஓர் அரசன். இவன் ஒருநாள் திருமாலைப் பூசித்துக் கொண்டிருக்கையில் அகத்திய முனிவர் அவனிருக்குமிடத்துக்கு எழுந்தருள, முனிவர் வருவது அறியாத அரசன் தன் பூசையைச் செய்துகொண்டிருப்பது கண்ட முனிவன் கடுங்கோபங்கொண்டு நீ யானை போலச் செருக்குற்றிருந்தமையால், நீ யானையாகக் கடவது எனச் சபிக்க அப்பொழுதே அவன் ஒரு காட்டானையாகத் தோன்றி முன்செய்த பூசையைத் தொடர்ந்து செய்து வந்தான். ஒரு நாள் திருமாலைப் பூசிக்க மலர் பறிப்பதற்கு நீர் மிகுந்திருந்த தடாகத்தில் கால் வைக்க, அங்கு முதலையாய்க் கிடந்த கூகூ வென்னும் கந்தர்வன் அந்த யானையின் காலைப் பற்றிக் கொள்கிறது. கூகூவென்பவன் தேவனென்னிம் முனிவன் நீர்நிலையில் நின்று தவம் செய்ய அம்முனிவன் காலைப் பற்றி இழுத்ததால் அந்த முனிவரின் சாபத்தால் முதலையாகக் கிடந்தவன், பற்றிய முதலையினின்றும் தப்பிக்க இயலாது 'நாராயணாஓ'' வாராய் எனக் கூக்குரலிட்டது. இதற்கு ஈடான ஒரு பகுதி பெரியாழ்வார் திருமொழியில்,

''நண்ணித் தொழுமலர் சிந்தை பிரியாத
நாராயணா! இங்கே வாராய்''

எனக் கூவியழைத்திருத்தலும் காண்க. ''ஆதிமூலமே'' என்று ஒலித்த ஒலி அந்த நாரணனை ஈர்த்து வந்து முதலையை இரண்டாக ஈர்ந்து கஜேந்திராழ்வாரின் இன்னல் நீக்குகிறது,

''நாயக ராத்திரியுஞ் சிலதேவர்க்கு நாணிலைகொ
ளூயக ராத்திரி மூலமெனா முனந்துத் திப்பணிப்
பாயக ராத்திரி மேனியம்மான் பைம்பொன் வேங்கடவன்
நீயக ராத்திரி சக்கரத்தாற் கொன்றசீர் கண்டுமே''

என்ற திருவேங்கடத்தந்தாதியின் பாசுரம் எம்பெருமான் கஜேந்திராழ்வாருக்கருளியது சிறப்பித்திருத்தல் காண்க.

இடர்கடிந்தான் உன்பது இன்னலைக் கடிந்து கொள்ளுதல் அதாவது போக்கிவிடுதல், கஜேந்திர ஆழ்வார் துதிக்கையில்

இருந்த தாமரை மலர்களை எம்பிரான் ஏற்றுக்கொண்டார் என்பதுவுமாம். ஈரா என்பது இறந்த கால வினையெச்சம். ''தீராத நோய் செய்தான்'' என்றதால் அவன் செய்த நோயை வேறு யாராலும் தீர்க்க முடியாது அவனே வந்துதான் தீர்த்து வைக்க இயலும் என்பதாம். நோய் இங்கு காதல் நோய், காம நோய், ஆழ்வார்கள் இறைவனைப் புணர்ந்து இன்பம் துய்த்திடவேண்டும் என்று எழுந்த காம நோய்.

''தாரார்ந்த மார்வன் தடமால் வரைபோலும்''

என்ற பகுதி என்னைப் பரிபாடலின் முதற்பாடலுக்கு ஈர்த்துச் செல்லுகிறது.

''ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலை
தீயுமிழ் திறனொடு முடிமிசை யணவர
மாயுடை மலர்மார்பின் மையில்லால் வளைமேனிச்
சேயுயர் பணைமிசை யெழில்வேழ மேந்திய
வாய்வாங்கும் வளைநாஞ்சி லொருகுழை யொருவனை
எரிமலர் சினைஇய கண்ணை பூவை
விரிமலர் புரையு மேனியை மேனித்
திருஞெமர்ந் தமர்ந்த மார்பினை மார்பிற்
றெரிமணி பிறங்கும் பூணினை மால்வரை''

எனும் பகுதி படித்து இன்புறத்தக்கது. பரிபாடலின் இப்பகுதியினை முழுமையாகக் கற்று இன்பம் துய்த்திட உரையாசிரியரின் ''இலக்கியத்தில் கடவுள் வாழ்த்து'' எனும் நூலைக் கண்டு பயனடைக. பரிபாடல் தரும் திருமால் பற்றிய பாடல்கள் தித்திப்பவை. சுவைத்துப் பாருங்கள்.

... ... ... ... ... சிக்கனமற்று
ஆரானு மல்லாமை கேட்டெங்க ளம்மனையும் 105
போரார்வேற் கண்ணீ ரவனாகில் பூந்துழாய்
தாரா தொழியுமே தன்னடிச்சி யல்லளேமற்று
ஆரானு மல்லனே யென்றொழிந்தாள்—நானவனைக்
காரார் திருமேனி கண்டதுவே காரணமாய்

பேராப்பித தற்றாத் திரிதருவன் —பின்னையும் 110
ஈராப் புகுதலு மிவ்வுடலைத் தண்வாடை
சோரா மறுக்கும் வகையறியேன்—சூழ்குழலார்
ஆரானு மேசுவ ரென்னு மதன்பழியை
வாராமல் காப்பதற்கு வாளவிருந் தொழிந்தேன்,

அ - ரை:- சிக்கன - தெளிவாக, நிறைவாக, முழுமையாக; மற்று - வேறு. ஆரானும் அல்லாமை - வேறு யாரும் இந்நோய்க்குக் காரணம் அல்லாமை. கேட்டு - சிக்கன கெட்டு, தெளிவாகத் தெரிந்து கொண்டு. அம்மனை - மனைக்குரியவள், அம்மா, தாய். போர்ஆர் வேல் கண்ணீர் - ஆடவருடன் போரிடும் வேல் போன்ற கண்களையுடைய பெண்டீர்! அவன்ஆகில் - அந்த எம்பெருமானேயானால். பூதுழாய் - துளசிமலர். தாராது ஒழியுமே - தன் மார்பில் அணிந்திருக்கும் துழாய் மார்பில் அவளுக்கு அருளாது. அவளைத் தன் மார்புடன் சேர்த்துப் புணராது நீங்குமோ. துளசிமாலை பிரசாதம் கிடைக்காது போகுமோ என்றபடி. தன் அடிச் - தனக்கு, திருமாலுக்கு அடிமைப்பட்டவள். அல்லளே - அவள் அல்லவோ. அவள் திருமாலுக்கு அடிமையானவள் அல்லவோ. மற்று - வேறு. ஆரானும் - ஒருவனும், மானிடப் பிறவியில் ஒருவனும் அல்ல என்றபடி; அல்லனே - அல்லவே. என்று ஒழிந்தாள் - என்றுகூறித் தன் கவலை தீர்ந்தாள். காரார் - கரியமேகம் . போன்ற. கண்டதுமே - கண்ணில் கண்டதும். காரணம்ஆ - அவனை மனதில் நினைந்து துதித்திட்ட நாள் முதல். சேவித்த நாள் முதல். பேரா - உருபெயர்ந்து, உருமாற்றமடைந்து. பிதற்றா - பிதற்றிக்கொண்டு திருதருவேன் - திரிந்து கொண்டிருந்தேன். பின்னையும் - மேலும். ஈராப்புகுதலும் - இரண்டாகப் பிளந்து புகுதல். தன்வாடை - குளிர்ந்த வாடைக் காற்று. . சோரா - சோர்வடையச் செய்யும் துன்பத்தைக் கொடுக்கும், மறுக்கும் - மறதலிக்கும், நீக்கும். வகை அறியேன் - வழி அறியேன். .ழ்குழலார் - தலை நிறைய கூந்தல் பொதிந்த பெண்டிர். ஆரானும்- யாரா

கிலும். ஏசுவார் - ஏளனம், இகழ்ச்சியாகப் பேசுதல். என்னும் அதன் பழியை - என்று அந்தப் பழிச்சொல்லை. வாராமல் காப்பதற்கு - வந்தடையாதிருக்க, பழிச்சொல் வந்து சேரா திருக்க. வாளா இருந்தொழிந்தேன் - ஒன்றும் செய்யாது இருந்து தொலைந்தேன்.

வி - ரை:- என் தாயும், வேறு யாரும் மானிடப் பிறப்பில் எவரும் இந்நோய்க்குக் காரணம் அல்ல என்பதைத் தெளிவாகக் கேட்டுணர்ந்து கொண்டு, ஆடவருடன் போரிடுவதில் வல்ல வேல் போன்றும் கண்களையுடைய பெண்டீர். இவளுக்கு இந்நோய் செய்தவன் அந்த எம்பிரானேயாகில் அவன் மார்பில் அணிந்த துளசிமாலையுடன் சேர்த்து அவளைப் புணராது நீங்குவனோ! அவள் அவனுக்கு அடிமைப்பட்டவள் அல்லவோ! ஆதலின் வேறு யாரும் இவளுக்கு அந்நோய் செய்தவர் அல்லர் என்றுகூறி மனக்கவலை ஒழிந்தாள். நான் அவனது கரிய மார்பைக் கண்கள் குளிரக் கண்டது முதல் என் உருப்பெயர்ந்து பித்துப் பிடித்தவள்போல் பிதற்றித் திரிகின் றேன். மேலும், குளிர்ந்த வாடைக் காற்றானது எனது உடலைப் பிளந்துகொண்டு உள்ளே சென்று உடல், உள்ளச் சோர்வையும் உண்டாக்குகிறது. இத்துன்பம் நீக்கும் வகை யறியேன். பொதிந்த கூந்தலையுடைய மகளிர் யாராகிலும் என்னை இழிவாகப் பேசுவர் என்று அந்தப் பழி வாராமல் காத்துக்கொள்ளவே இதுகாறும் சும்மா இருந்துவிட்டேன், பாவி நான் என்றபடி. தன்னைக் கவர்ந்தவன் கார்மேக வண்ணன் அந்தத் திருமால் என்று தெளிவுபடாமலும் என் தோழியர் பழித்தும் இழித்தும் கூறுவார்களே என்று அஞ்சி அவனைச் சென்று தழுவாமல் இருந்துவிட்டேன் பாவியேன் என்பதும், "வாளாவிருந்தொழிந்தேன்" என்பதன் பொருளாம்.

"போரார் வேற்கண்ணீர்" என்றது போரிடுவதில் வல்ல வேல் போன்ற கண்ணினையுடைய மங்கையீர் என்பதும் பொருளாகும். எனினும் மகளிர் கண்கள் போரில் வெல்லும் -

  

கூர்வேலினும் கொடியதாய்ப் பாய்ந்து ஆடவரை வீழ்த்து மாதலின் ஆடவரிடம் போரிடுவதில் வல்ல கண்களையுடைய பெண்டீர் என்பதே பொருந்தும், "பூதுழாய் தாராது ஒழியுமே" என்றது எம்பெருமான் தன் மார்பில் அணிந்த துளசியைப் பிரசாதமாக அளிக்காமல் இருப்பனோ! என்பது பொருள் என்பது துளசிமாலையணிந்த தன் மார்பில் அணைத்து இன்பம் துய்க்காமல் விடுவனோ என்பதுவே முழுமையான பொருள். "தன் அடிச்சி அல்லளே" என்றதால் ஆழ்வார் பெருந்தகை எம்பெருமான்முன் தன் நிலையை நன்குணர்ந்து பாடுகின்றார். தான் பட்டத்து அரசி அல்லள். திருமகளுக்கு நிகரானவள் அல்லள் என்பதனை நன்கு உணர்ந்து தன்னை "அடிச்சி" என்று தெரிவித்துக் கொள் கிறார். ஆன்மாக்கள் எம்பெருமானிடத்தில் கொண்டுள்ள பக்தி நெறியை உணர்த்தும் பகுதியாகும். ஆன்மாக்கள் இறைவனுடன் ஒன்றெனக் கலந்திடத் துடிக்கும் நிலையை இப் பகுதியால் திருமங்கையாழ்வார், "தான் அடிச்சி அல்லளே" அவனைப் புணர்ந்திடத் துடிக்கும் ஆன்மா என்பதை இவ் வொரு சொல்லில் சித்தரித்திருப்பது காண்க.

கட்டுவிச்சி சொல் கேட்டு தாய் தன் கவலை ஒழிந்தாள். என்றாலும் மகளின் நிலை வேறு. இறைவனைக் காணத் துடிக்கும் ஆன்மா ஒரு கரிய உருவைக் காண்கிறது. அவன் என்னவன் என்ற எண்ணம் மேலோங்குகிறது. ஆன்மா எம்பெருமானை கண்டுவிட வேண்டுமென அலைமோதிக் கொண்டிருக்கையில் அதன் கருப்பொருளைக் கண்டு கலங்கு கிறது என்பதனையே "காரார் திருமேனி கண்டதுமே காரவ மாப் பேராப் பிதற்றாத் திரிதருவன்" என்று ஆழ்வார் திருவுள்ளம் நமக்குணர்த்துகிறது என்பதாம்.

"வாராய் மடநெஞ்சே வந்து—மணிவண்ணன் 115
சீரார் திருத்துழாய் மாலை நமக்கருளித்
தாரான் தருமென் றிரண்டத்தி லொன்றதனை
ஆரானு மொன்னாதார் கேளாமே சொன்னக்கால்

ஆராயு மேலும் பணிகேட் டதன்றெனிலும்
போரா தொழியாதே போந்திடுநீ யென்றேற்குக்
காரார் கடல்வண்ணன் பின்போன நெஞ்சமும்
வாராதே யென்னை மறந்ததுதான்—வல்வினையேன்
ஊரா ருகப்பதே யாயினேன்........."

அ - ரை:- வாராய் மடநெஞ்சே - மடமை கொண்ட மனமே எழுந்திரு, மடைமையினின்றும் தெளிவுகொள். ஆரானுமேசுவாரென்னும் மடமை. வந்து - எம்பெருமான் அருகில் வந்து, மடமையினின்றும் தெளிந்து வந்து என்றபடி. மணிவண்ணன் - நீல மணிக்கோலம் கொண்ட எம்பெருமான். சீரார் - சிறப்பு மிக்க, திருத்துழாய் - தூயதுளசி. நமக்கருளி. நமக்கு அருள்கூர்ந்து. தாரான் - தரமாட்டான். தரும் - தருவன். என்ற இரண்டத்தில் - என்ற இரண்டினில்- ஒன்றதனை - இரண்டில் ஒன்றை. ஒன்னாதார் - பகைவர் வேண்டாதார், சொன்னக்கால் - சொன்னாயாகில். பணி - கட்டளை, சொல். ஆராயுமேலும் - ஆய்ந்து பார்த்தானாகிலும். அதன்றெனிலும் - அது தெரியாது என மறுத்தாலும். போராதொழியாதே போந்திடு - நீ வாராது அங்கேயே இருந்துவிடாமல் உடன் திரும்பி வந்துவிடு. போராதொழியாதே - போராடித் தொலையாதே, அவன் உன்னைத் தெரியாதென்றுவிட்டால் போராடிக் கொண்டிருந்து தொலையாதே என்றபடி; போந்திடு - விரைந்து திரும்பிவிடு. என்றேற்கு - என்று சொன்ன சொல்லுக்குக் கட்டுப்பட்டு, என் சொல்லை ஏற்றுக்கொண்டு. கார்ஆர்கடல் - கரிய பெருங் கடல். வண்ணன் - வண்ணமுடையமன்.பின்போன நெஞ்சம் - அவனைத் தொடர்ந்து சென்ற மனம். வாராதே - என்னிடம் மீண்டும் திரும்பி வாராமல். என்னை மறந்ததுதான் - என்னை முற்றிலும் மறந்தது மறந்ததுதான், மறந்து அதனிடமே தங்கி விட்டது தங்கிவிட்டதுதான். வல்வினையேன் - வலிய வினைப் பயனையுடைய நான். ஊரார் உகப்பதே ஆயினேன் - ஊரார் சிரிப்புக்கு இடமானேன், பிறர் பார்த்துச் சிரிக்கும் பொருளானேன் என்றபடி.

வி - ரை:- மடமை கொண்ட மனமே இன்னமும் முடங்கிக் கிடக்காதே, எழுந்திரு. அந்த எம்பிரானிடமே சென்று அந்த மணிவண்ணன் அருள்கூர்ந்து சிறப்பு மிக்க அவன் மார்பில் அணிந்துள்ள துளசிமாலையை நம் மார்பில் பொருந்த அளிப்பான் அல்லது மாட்டான் எனும் வார்த்தையை அவனுக்கு வேண்டாதார் எவரும் கேட்டிடாமல் நீ அவனுக்குச் சொல்வாயாகில், அச்சொல்லை செவிமடுத்து அன்புடன் கேட்டாலும்; அந்த சங்கதியே தெரியாது என்று சொன்னாலும் சரி, நீ அங்கேயே தங்கிவிடாமல் உடன் திரும்பிவிடு என்று சொல்ல அதற்கு உடன்பட்டு அந்தக் கரிய கடல் வண்ணனைக் காணச்சென்ற என் மனமானது சொன்ன கட்டளையின்படி திரும்பி வந்து தொலையாமல் என்னை முற்றிலும் மறந்து என் தீயவினைப் பயனால் அவனிடமே தங்கிவிட்டது. அதனால் நான் ஊரார் பேச்சுக்கும் ஏச்சுக்கும் ஆளாகி அவர்கள் மகிழும் கேலிக்கூத்துக்கு இலக்கானேன்.

மடநெஞ்சே வாராய் என்றது, மடநெஞ்சமே எழுந்து செல்லாய் என்ற பொருளில் வருதல் காண்க; மடமையி னின்றும் எழுந்து வாராய் என்றும், "வந்து" என்ற சொல் சென்று என்று பொருளிலும் வருதல் காண்க. தரும் தாரான் என்ற இரண்டிடத்தில் ஒன்று என்றதில், இரண்டிடத்தில் என்றது இரண்டில் ஒன்று என்ற பொருளில் வருவது. சொன்னக்கால் என்றது சொன்னால் என்ற பொருளில் வருவது. பணி கேட்டு என்ற கட்டளை கேட்டு இங்கு கட்டளை பொருந்தாப் பொருளாதலின் சொல் கேட்டு என்ற பொருளில் வரும். போரா தொழியாதே என்றது போராடித் தொலையாதே என்று பொருள்படும். போராடிக்கொண்டங்கேயே இருந்துவிடாதே என்று மனம் தன்னைவிட்டு அவனிடம் தங்கிவிடுமோ என்ற ஆற்றாமையை உணர்த்தும் சொல். உடல் அவளை அடையத் துடிக்கும்பொழுது மனம் சென்று அவனுடன் தங்கிவிடுவதை, பொறாமையை எடுத்துக்காட்டும் சொற்றொடர். போந்திடு என்பதும் வந்துவிடு எனும் பொருளில் வருதல் காண்க, கார்ஆர் கடல்வண்ணன் பின்

போன நெஞ்சம் வாராதே என்னை மறந்ததுதான் என்றதால் தன்னை முற்றிலுமாக அந்தக் கார்மேக வண்ணனுக்கு ஒப்படைத்துவிட்டாள் என்றானது. ஊரார் உகப்பதே ஆயினேன் என்றது ஊரார் மகிழும்படியாயினேன் என்றதால் ஊரார் மகிழ்ந்து ஏளனம் செய்து பரிகசிக்கும் ஒரு பொருளானேன் என்றதும் தன் நிலையை உணர்த்துவதாம். ஆயினேன் என்றது சீர்குலைந்து போனேன் என்றபடி. இந் நிலைக்குக் காரணம் சென்ற மனம் திரும்பாது அவனுடன் விட்டதுதான். ஆழ்வார்கள் தங்கள் உடலால் எம்பெருமானைப் புணர்ந்து இவ்வுலகிலேயே அந்த சொர்க்கத்தை அனுபவிக்கும் ஆவல் மிகுதியால் எழுந்தவையே இப்பாசுரங்கள். திருஆண்டாள், நாச்சியார் திருமொழி கண்ணனென்னும் பகுதியில்,

"கொம்மை முலைகளிடர்தீரக்
கோவிந் தற்கோர் குற்றேவல்
இம்மைப் பிறவி செய்யாதே
இனிப்போய்ச் செய்யுந் தவந்தானென்?
செம்மை யுடைய திருமார்பில்
சேர்ந்தா னேலு மொருஞான்று
மெய்ம்மை சொல்லி முகம்நோக்கி
விடைதான் தருமேல் மிகநன்றே."

திருஆண்டாள் உள்ளத் துடிப்பும் திருமங்கையாழ்வார் உள்ளத் துடிப்பும் ஒன்று என்பதை "முகம் நோக்கி விடைதா தருமேல் மிகநன்று" என்ற சொற்றொடர் உணர்த்துவது காண்க. "விடைதான் தருமேல் மிகநன்று" என்றது அடுத்த அவதாரத்தில் சேர்ந்துகொள்ள வாய்ப்புக் கிடைத்துவிட்டது என்றபடி. "ஊரார் உகப்பதே ஆயினேன்" என்றது தாரான் எனினும் அடுத்த அவதாரத்தில் மீண்டும் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்த மகிழ்ச்சியில் ஊரார் மகிழ்ந்தனர் என்று கூறினும் தகும்.

நம்மாழ்வார் அருளி திருவிருத்தம் நாற்பத்தைந்தாவது பாசுரத்தில் எம்பெருமான் முனபோய்விட்ட தனது மனதை நொந்து தலைவி வருந்துவதாகக் கூறும் பாசுரம் இன்பம் துய்ப்பது.

"மடநெஞ்ச மெனறுந்தம தென்றுமோர் கருமங்கருதி
விடநெஞ்சை யுற்றார்விட வோவமையுமப் பொன்பெய ரோன்
றடநெஞ்சங் கீண்டபிரானார் தமதடிக்கீழ் விடப்போய்த்
திடநெஞ்ச மாயெம்மை நீத்தின்றுதாறுந் திரிகின்றதே"

இரணியனுக்கு இப்பாசுரத்திலும் பொன் பெயரோன் என விளித்திருத்தலும், "திடநெஞ்சமாய் எம்மை நீத்து இன்று தானும் திரிகின்றது" என்று வருந்துதலும் நோக்குக. தலைவன் எம்பிரானைப் பிரிந்த தலைவி, ஆன்மா படும் துன்பத்தை இவர் பாசுரங்சள் பளிச்சிட்டுக் காட்டுவது காண் கிறோம். இந்த இன்பத்தை எல்லோராலும் அனுபவிக்க முடியாது.

"... ... ... ... ... ... ...மற்றெனக்கிங்கு
ஆராய்வா ரில்லை அழல்வாய் மெழுகுபோல்
நீரா யுருகுமென் னாவி—நெடுங்கண்கள்
ஊரா ருறங்கிலுந் தானுறங்கா வுத்தமன்றன்
பேரா யினவே பிதற்றுவன்—பின்னையும்
காரார் கடல்போலுங் காமத்த ராயினார்
ஆரே பொல்லாமை யறிவார். அதுநிற்க
ஆரானு மாதானு மல்ல ளவள்காணீர்
வாரார் வனமுலை வாசவதத்தை யென்று
ஆரானுஞ் சொல்லப் படுவா ளவளுந்தன்
பேராய மெல்லா மொழியப் பெருந்தெருவே
தாரார் தடந்தோள் தளைக்காலன் பின்போனாள்
ஊரா ரிகழ்ந்திடப் பட்டாளே—மற்றெனக்கிங்கு
ஆரானுங் கற்பிப்பார் நாயகரே........"

அ - ரை:- மற்றெனக்கிங்கு ஆராய்வாரில்லை - என் நிலைபற்றி கவலைப்படுவோர் இங்கு யாரும் இல்லை. கவலைப்பட்ட அன்னை - நோய் செய்தான எம்பெருமானே என்று முழுமையாகத் தெளிந்தபின் சென்றுவிட்டதால் வேறு யாரும் எனைப்பற்றி ஆய்ந்து காண்பார் யாரும் இல்லை என்றபடி. அழல் - நெருப்பு. என்ஆவி - என் உயிர். மனம் அந்த எம்பெருமானிடம் சென்றுவிட்டதால் உடலில் உள்ள உயிர் தீயில்பட்ட மெழுகுபோல் நீராய் உருகியது. நெடுங் கண் - நீண்டு பாயும் கண், அகவின்வழிகள்' ஊரார் - ஊரில் உள்ள மக்கள். உறங்கிலும் - உறக்கத்தில் இருந்தாலும். உறங்கா - உறக்கம் கொள்ளாது. உத்தமன்தன் - அந்த உத்தமன் எம்பெருமான், பேர் ஆயினவே - அவன்தன் திருநாமங்களை. பின்னையும் - ஒன்றன்பின் ஒன்றாக, மேன் மேலும், பிதற்றுவன் - வாய்க்கு வந்தபடி சொல்லிக்கொண் டிருக்கிறேன். கார்ஆர்கடல் - செழித்த பெருங்கடல். காமத்தர் ஆயினர் - காமத்தை உடையவர்கள். ஆரே - யார்தான். பொல்லாமை அறிவர் - அதன் கொடுமையை அறிவார்கள். கடல் போன்ற காம மயக்கத்தில் உள்ளவர்கள் யார்தான். அதன் உண்மை உருவை உணர்வார்கள்? அதுநிற்க - அது ஒருபுறம் இருக்க, ஆரானும் ஆதானும் அல்லள் அவள் - நான் சொல்லப் போகும் அவள் சாமான்யமானவள் அல்லள் காணீர் - உங்களுக்குத் தெரியும். வார்ஆர்வனமுலை - கச்சணிந்த ஏந்தின வனமுலையாள். வாசவதத்தை என்று - வாசவதத்தை என்பாள். அவளும் - அந்த வாசவதத்தையும் தன்பேர்ஆயம் - தன் தோழியர் கூட்டம். எல்லாம் ஒழிய- எல்லாவற்றையும் விட்டுவிட்டு. பெருந்தெருவே - இராசவீதி யில். தார்ஆர் தடந்தோள் - மாலையணிந்த பருத்த தோள் களையுடைய. தளைகாலன் - விலங்கிடப்பட்ட கால்களை யுடையவனுமான வத்சராஜன் என்பான். பின்போனாள் - அவன் பின்னாலே போனாள். ஊரார் - ஊர்மக்கள். இகழ்ந் திடப்பட்டாளே - இகழ்ந்து கூறப்பட்டாளோ எனின் இல்லை. இங்கு - அப்படியிருக்க நான் மட்டும் இங்கு. எனக்கு - எனக்கு மட்டும். மற்று - வேறு விதமாக, ஊரார் பழிப்பர் என்றெல்

லாம். கற்பிப்பார் - சொல்லுவார்கள். ஆரானும் - யாரா யிருப்பினும். நாயகரே - நியாயம் கற்பிப்பார் அன்று

வி - ரை:- என் அன்னை சென்றபின் என்னைப்பற்றிக் கவலைப்பட்டு, ஆறுதல் கூறுபவர் எவருமில்லை. என் உயிரானது நெருப்பினில் வைத்த மெழுகுபோல் நீராய் உருக் கிறது. எனது நீண்ட அகன்ற கண்களும் ஊரார் யாவரும் உறங்கியும் உறங்கமாட்டாது அந்த உத்தமன் எம்பெருமானின் திருநாமங்களையே ஒன்றன்பின் ஒன்றாக மேன்மேலும் உச்சரித்துக்கொண்டே இருக்கிறது. நிறைந்த கடல் போலும் கரைகாணாக் கடல் போன்ற காமத்தை உடையவர்கள் யார் தான் அதன் பொல்லா உருவை அறிவார்கள். அது அப்படி யிருக்க, கச்சணிந்த ஏந்தின வனமுலைகளையுடைய வாசவ தத்தையென்பாள், எல்லோராலும் புகழ்ந்து சொல்லப்பட் டவள். அவள் ஒரு சாதாரணப் பெண் அல்லள். அந்த வாசவதத்தை தன் சிறந்த செல்வங்களையும் தோழியர்களை யும் நீக்கிவிட்டு அரசவீதி வழியே. மாலையணிந்த பருத்த தோள்களையும், காலில் விலங்கினையுமுடைய வத்சராஜன் பின் போயினள். அப்படிச் சென்றும் ஊரார் அவளை இகழ்ந்து பேசினார்களா? இல்லை. ஆனால் இங்கு அதே நிலையில் உள்ள என்னை மட்டும ஊரார் இழித்துரைப்பர் என்று பழித்துப் பேசுகின்றார். அப்படிப் பேசுவோர் யாரா யிருந்தாலும் அவர்கள் எனக்கு நியாயம் சொன்னவர் ஆகமாட் டார்கள்.

நம் பரகால நாயகியின் ஆற்றாமை பன்மடங்காகி தீயிலகப்பட்ட மெழுகுபோல் உருகுகிறது. அதற்குக் காரணம், ஆற்றுவாரும் இல்லை என்னைத் தேற்றுவாருமில்லை யென் பதனை "ஆராய்வாரில்லை" என்றனர். "நீராயுருகு மென் னாவி" என்றதால் ஆவி எவ்வாறு உருகும். உடல் உருகிப் போவதை ஆவி உருகிற்று என்கிறார். மனம் அவனிடம் சென்றது திரும்பவில்லை. இப்பொழுது யாருமற்றனாதை யானதால் அவன் எண்ணம் எனும் தீ உடலை வாட்ட நீராய்

உருகியது என்பதாம். மகளிர் கண்கள் நீண்டு அகன்றிருக்கு மாதலின் ''நெடுங்கண்கள்'' என்றனர். அவன்வரக் காணோமே என நீண்டு விழித்துப் பார்த்திருந்த கண்கள் என்பதுவுமாம். ஊரார் உறங்கினும் தானுறங்காத நிலையில் அந்த உத்தமன் பேரை திரும்பத் திரும்பச் சொல்லிப் பிதற்றுதலிலும் வேறு இன்பமில்லையென்றபடி. 'கார்ஆர் கடல்' என்றது பெருகிப் பெருத்த கடல். காமம் கடலினும் பெரிதாதலின் கார்ஆர் கடல் என்றனர். காமக் கடலில் மூழ்கியவர்களைக் 'காமத்தர் ஆயினார்' என்றனர். அதில் மூழ்கியபின் அதன் பொல்லாத குணங்களை யாரே அறிந்துகொள்ள முடியும். இதற்கு ஒரு கதை சொல்கிறார். வாசவதத்தை என்பாள், எல்லாராலும் பாராட்டப்பட்டவள். அவள் தன் சிறந்த செல்வங்களையும் தோழியர் கூட்டத்தையனைத்தையும் ஒழித்து மாலைகள் அணிந்த கால்களில் விலங்கு பூட்டப்பட்ட மன்னன் வத்சராஜன்பின் ராஜவீதியில் சென்றபொழுது அவளைப்பற்றி இழிவாகப் பேசினார்கள் யாருமில்லை. அப்படியிருக்க எனக்கு மட்டும் பழிவந்து சேரும் என்று வேறு பாடம் கற்பிப் பவர்கள் நியாயமற்றவர்கள் என்கிறார். 'பேர்ஆயம்' என்பது பெருஞ் செல்வமும் தோழியர் கூட்டமும், ஆயம் தோழியர் கூட்டம் என்றும் பொருள்படும். 'தளைகாலன்' என்றது தளை யிடப்பட்ட கால்களையுடையவன். விலங்கு பூட்டப்பட்ட கால்களையுடையவன்! மற்று கற்பிப்பார் என்பது மாற்று கற்பிப்பார் என்பதாம். நாயகரே என்றது நியாயம் கூறாதவர், நியாயம் கூறாதவரே என்றபடி, நாயகர் என்றது தலைவன். நாயகரே என்றதால் எமக்குத் தலைவனல்லன் ஆதலின் அவன் பேச்சைக் கேட்க வேண்டியதில்லை என்பதாம்.

இங்கு கூறப்படும் வாசவதத்தை யார் என்பது புலப்பட வில்லை. சீவகசிந்தாமணியில் வரும் வாசவதத்தைக்கு இங்கு கூறப்பட்டிருக்கும் நிகழ்ச்சிக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. சீவகசிந்தாமணியை இங்கு நினைவுகூர வாய்ப்பே இல்லை. சுபந்து என்னுமோர் சமஸ்கிருத கவியால் இயற்றப்பட்ட

வாசவதத்தா எனும் நூலில் இருந்தெடுத்தாளப்பட்டிருக்கலாம். அல்லதுவேறு ஏதாகிலும் புராணங்களிலிருந்து எடுத்தாளப்பட்டிருக்கலாம். மகாபாரதத்தில் ஆதிபருவத்தில் திரௌபதி சுயம்வரத்திற்கு வந்த மன்னர்களுள் ஒருவன் பெயர் வத்சராஜன் என்பது அந்த வத்சராஜனே இங்கு "தாரார் தடந்தோள் தளைக்காலன்" என்று கூறப்பட்டான் என்று கொள்ள வாய்ப்புண்டு. வாசவதத்தை துணிந்து தன் தலைவனுடன் செல்லவில்லையா? அவளை யார் என்ன சொன்னார்கள்? என்னை மட்டும் ஏன் இப்படிக் காய்ச்சுகிறார்கள் என்று கோபங் கொண்டவளாய், "எனக்கிங் காரானும் கற்பிப்பார் நாயகரே?" என்று கூறிவிடுகிறாள்.

"எனச் சொல்லாயினு மாகவெறி திரைவை யமுற்று
மேனத் துருவாயிடந்த பிரானிருங் கற்பகஞ்சேர்
வானத் தவர்க்கு மல்லாதவர்க் கும்மற்றெல்லா யவர்க்கு
ஞானப் பிரானையல்லா லில்லைநான் கண்டநல்லதுவே'

என்ற நம்மாழ்வார் அருளிய திருவிருத்தம் பாசுரம் 99 இங்கு நினைவு கொள்க. பரலோகநாயகியின் திருவுள்ளம் என்ன என்பதை இப்பாசுரம் உணர்த்திவிடுவது காண்க.

திருஆண்டாள் தன் ஆற்றாமையைப் பெண்மைக்கே உரிய சொற்களில்,

"உள்ளே யுருகிநைவேனை யுள்ளோ விலளோ வென்னாத
கொள்ளை கொள்ளிக் குறும்பனைக் கோவர்த்தனனைக்
கண்டக்கால்
கொள்ளும் பயனொன் றில்லாதகொங்கை தன்னைக்
கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட் டவன்மார்வி லெறிந்தென் னழலைத்
தீர்வேன்"

என்பதூம் காண்க. நாச்சியார் திருமொழி, கண்ணனென்னும் பாசுரம் 8. கண்ணன் நினைவால் பற்றி எரியும் கொங்கைகளைப் பிடுங்கி அவன் மார்பில் எறிந்தாகிலும் தன் ஆற்றா

மையைப் போக்கிக் கொள்ளும் எண்ணம் பெண்ணுக்கன்றி பெண்ணாகப் பாவித்த மற்ற ஆழ்வார்கட்கு வராது என்பதும் காண்க. நம்மாழ்வாரும் திருஆண்டாளும் தன் மனத்துள் இருந்த இறைவனை வெளிப்படையாகக் கூறியது போலவே திருமங்கையும், என்னதான் செய்யத் துணிந்தாய் என்போருக்குத் தன் உள்ளக் கிடக்கையைத் திறந்து விடுகிறாள்.

"... ... ... ... ... ... ... ... ...நானவனைக்
காரார் திருமேனி காணுமளவும் போய்ச்
சீரார் திருவேங் கடமே திருக்கோவல்
ஊரே மதிட்கச்சி யூரகமே பேரகமே
பேரா மருதிறுத்தான் வெள்ளறையே வெஃகாவே
பேராலி தண்கால் நறையூர் திருப்புலியூர்
ஆராமஞ் சூழ்ந்த வரங்கம்—கணமங்கை
காரார் மணிநிறக் கண்ணனூர் விண்ணகரம்
சீரார் கணபுரஞ் சேறை திருவழுந்தூர்
காரார் குடந்தை கடிகை கடன்மல்லை
ஏரார் பொழில்சூ ழிடவேந்தை நீர்மலை
சீராரும் மாலிருஞ் சோலை திருமோகூர்
பாரோர் புகழும் வதரி வடமதுரை
ஊராய வெல்லா மொழியாமே நானவனை
ஓரானை கொம்பொசித் தோரானை கோள்விடுத்த
சீரானைச் செங்கணெடி யானைத் தேன்துழாய்த்
தாரானை தாமரைபோற் கண்ணானை யெண்ணருஞ்சீர்ப்
பேரா யிரமும் பிதற்றிப்—பெருந்தெருவே
ஊரா ரிகழிலு மூரா தொழியேன்நான்
வாரார்பூம் பெண்ணெ மடல்."

அ - ரை :- நானவனை - அவனை நான். இவ்வாறு என்னை ஆட்டுவித்த அவனை நான் அல்லது காமம் தலைக்கேறிய நான், அந்தக் காமத்துக்குக் காரணனான அவனை என்றபடி. காரார் திருமேனி - கார்மேக வண்ணனின் திரு உடம்பு. அவன் உருவை, முழுமையாக காணும் அளவும்.

அவன் என்முன் தோன்றுமளவும். சீரார் திருவேங்கடமே - சீர்மிகு திருவேங்கடமலை. திருக்கோவல் - திருக்கோவலூர். 'மதில்கட்சி - மதில் சூழ்ந்த. யூரகமே - காஞ்சி நகரில் உள்ள ஊரகம். பேரகம் - பக்குடத்தான் சன்னிதி. பேரா - பெயர்ந்து போகாத. நிலைத்து நின்ற. மருது - மருதமாம்' இறுத்தான் - முரித்தான். வெள்ளறை - திருவெள்ளறை' வெஃகாவே - திருவெஃகாவே, பேரொலி - பெரிய திருவாலி நகர். தண்கால் - திருத்தண்கால். நறையூர் - திருநறையூர். திருப்புலியூர் - குட்டநாட்டுத் திருப்புலியூர். ஆராமாஞ்சூழ்ந்த- அழகிய சோலைகள் சூழ்ந்த. அரங்கம் - திருவரங்கம். கணமங்கை - திருக்கண்ணமங்கை. காரார் மணிநிறம் - கரிய நீலமணியின் நிறம். கண்ணனூர் - கண்ணபிரான் திருத்தல மான. விண்ணகரம் - திருவிண்ணகர். சீரார் - சீர்மிகு. அழகிய கணபுரம் - திருக்கண்ணபுரம். சேறை - திருச்சேறை. திருவழுந்தூர் - தேரழுந்தூர். காரார் - கார்மேகம் சூழ்ந்த' குடந்தை - திருக்குடந்தை. கடிகை - கடிகைத் தடங்குன்று' கடன்மல்லை - திருக்கடல்மல்லை. ஏரார்பொழில் - அழகிய சோலைகள் சூழ்ந்த. இடவெந்தை - திருவிடவெந்தை. நீர்மலை - திருநீர்மலை. சீராரும் - சிறப்பு மிக்க. மாலிருஞ் சோலை - திருமாலிருஞ்சோலை. திருமோகூர் - திருமோகூர் பாரோர் - உலக மக்கள். வதரி - பத்ரிகாச்சிரமம். வடமதுரை - வடக்கிலுள்ள மதுரை. ஊர்ஆய எல்லாம் - இந்த புண்ணிய பூமியெங்கும். ஒழியாமே - நீங்காமல், ஒன்றுவிடாமல். ஓர் ஆனை கொம்பு ஒசித்து - ஒரு யானையின் கொம்பை ஒடித்து: ஆனை கோள்விடுத்த - யானையின் இடர் நீக்கிய. சீரான் - சிறந்தவன், இறைவன். செம்கண் - சிவந்த கண்களை உடையவன். நெடியானை - கைக்கு எட்டாது நெடிது தூரத்தில் இருப்பவனை. தேன் துழாய்தார் - தேன் பொதிந்த துளசி மாலையுடையவனை. தாமரைபோல் கண்ணானை - தாமரை போன்ற திருக்கண்களையுடையவனை. எண்ணரு - எண்ண இயலாத. சீர் - சிறப்பு. பேர்ஆயிரம் - ஆயிரம் திருப் பெயர்கள். பிதற்றி - உளறிக்கொண்டு, பிதற்றிக்கொண்டு. பெருந்தெரு - பெரிய தெரு, இராஜவீதி. ஊரார் இழலிலும் -

ஊர் மக்கள் இகழ்ந்து பேசினாலும். வார்ஆர்பூ - நீண்ட அழகிய மலர் போன்ற பனைமட்டையைக் கொண்டு: மடல் ஊராது ஒழியேன் - மடல் ஊர்தல் செய்யாது இருக்கமாட்டேன். பூ என்றது பனைமடலைச் சிறப்பித்துக் கூறியதாகும்.

வி - ரை :- அவனைப் பற்றிய காமநோய் என் தலைக் கேறியதால், நான் அவனுடைய கார்மேகவண்ண உருவைக் கண்டு இன்புறும் வரையில், அவன் எழுந்தருளியிருக்கும் திருத் தலங்கள் தோறும் சென்று, திருவேங்கட முதலாக வடமதுரை ஈறாக உள்ள அவன் ஆலயங்கள் ஒன்றும் விடாமல் எங்கும் புகுந்து. குவலயாபீடமென்ற ஒரு யானையின் கொம்பை முறித்தும், மற்றொரு யானையின் துன்பத்தைத் துடைத்த சிறப்பியல்புகள் பெற்ற சிவந்த கண்களையுடைய அந்த எம்பிரான் எனக்கு எட்டாதவனாய் தேன் கமழும் திவ்விய துளசிமாலையணிந்தவனாய் தாமரை மலர் போன்ற கண்களை யுடையவானன அந்த எம்பெருமானை எண்ணிக்கையற்ற நற்குணங்கள் குடிகொண்டுள்ளவனும் ஆகிய அவன் ஆயிரம் திருநாமங்களைப் பிதற்றிக்கொண்டே, ஊரின் பெரிய இராசவீதி வழியே ஊரில் உள்ள அனைவரும் என்னை இழித்து வசை பாடினாலும், நான் கண்ட அழகிய பனைமட்டையைக்கொண்டு மடலூர்வதை தவிர்க்கமாட்டேன். மடலூர்ந்தே தீருவேன் என்பதாம்.

'நான் அவனை' என்ற சொற்றொடருக்கும் முன்பே விளக்கம் கூறப்பட்டுவிட்டது. யாதுமறியாது பந்தாடிக் கொண்டிருந்த என்னைக் கவர்ந்திழுத்து பித்தேற்றிய அவனை என்றும் பித்தேறிய நான் என்பதுமாம். "வாராயோ" என் றார்க்கு என் வல்வினையால் சென்றேன். "கார்ஆர் மணிநிற மும் கைவளையும் நான் காணேன்" என்றது இங்கு நினைவு கூறுக. இங்கு "சென்றேன்" என்று கூறுவதும் "மணிநிறமும் கைவளையும் காணேன்" என்றதால் பரகாலநாயகி, "பாரோர் கள் எல்லாம் மகிழ, பறைகறங்க சீர்ஆர் குடம் இரண்டு ஏந்தி செழும் தெருவே ஆர்ஆர் எனச் சொல்லி ஆடும்" அந்தக்

கூத்தனைக் கண்டாளில்லை என்பது உண்மையானது அவனைக் காணுமுன் அவள் நீலமணி நிறமும் வளையும் போன மாயம் தெரியாது திகைத்து நின்றாள் ஆதலின். அவனைக் காணவில்லை. அவனைக் காணமுடியாத ஏக்கம் இங்கு எரிமலையாக வெடித்துச் சிதறுகிறது. ஆதலின் அவன் எழுந்தருளியிருக்கும் திருத்தலங்களிலேயே அவனைச் சந்திக் கிறேன் என்று சவால் விட்டுக் கிளம்புகிறாள். அவள் செல்லும் திருத்தலங்களாவன:- திருவேங்கடம் - திருப்பதி திருமலை, தன்னையடைந்தார். பாவங்களனைத்தையும் அழிப்பதனால் இது வேங்கடம் எனப் பெயர் பெற்றது. ஸ்ரீசைலத்தின் மேற்கிலுள்ள நந்தனபுரமென்னும் சிற்றூரில் புரந்தரனென் னும் அந்தணன் மகனாகிய மாதவனென்பான் தன் மனைவி யாகிய சந்திரரேகை யென்பாளோடு உல்லாசமாக மலர்ச் சோலையில் விளையாடிக் கொண்டிருக்கையில் மாலினியென்னு மோர் விலைமாதின் கட்டழகைக் கண்டு காமுற்று அவளோடு சேர்ந்து மனையாளைக் கைவிட்டு கைப்பொருள் இழந்து வழிப்பறி கொலை கொள்ளை பல செய்து பொருள் சேர்த்து அவளுக்குக் கொடுத்தும் பின் வறியனாகி நோயுற்று அவளால் அகற்றப்பட்டு, பித்தன்போல் அலைந்து திரிந்து இத்திருமலையை அடைந்தவுடன் தன் தீவினையனைத்தும் நீங்கக்கண்டு முன்பிருந்த உருப்பெற்று, நல்லறிவும் அடைந்து திருமாலைச் சேவித்து வழிபட்டுப் பரமபதமடைந்தா னாதலால் இத்திருத்தலம் "வேங்கடாசலம்" எனப் பெயர் பெற்றது என்று வடநூல் புராணங்கள் இரண்டு இயம்புதல் காண்க. "வேம்" என்பது அழிவின்மை. "கடம்" என்பது செல்வம். அழிவில்லாத செல்வம் தரும் தலமாதலால் வேங்கட மெனப் பெயர் கொண்டது எனவும் வராக பூரணம் கூறும். இது வடநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. தமிழ்நாட்டுக்கு வடக்கெல்லையாயமைந்தது என்பதுவாம். பெரியாழ்வார், ஆண்டாள், குலசேராழ்வார், திருமழிசையாழ்வார், திருப்பா ணாழ்வார், திருமங்கையாழ்வார், தம்மாழ்வார் மங்களா சாசனம்.

திருக்கோவலூர்:—கோபாலன் எனப்படும் ஆயனார் எழுந்தருளியிருக்கும் திருத்தலமாதல்பற்றி இதற்கு இப்பெயர் பெற்றது. வடமொழியில் இது "கோபாலபுரம்" எனப்படும். முதலாழ்வார் மூவரும் ஒருவரையொருவர் சந்தித்து அந்தாதி பாடின திருத்தலம். திருமங்கையாழ்வார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார் மங்களாசாசனம்.

அத்திகிரி:—பேரருளாளப் பெருமாள், வரதராஜப் பெருமாள், பெருந்தேவித்தாயார்.

மதிட்கச்சி:—திருக்கச்சி. கச்சி - காஞ்சீ என்னும் வடசொல்லின் சிதைவு. பிரமனால் பூசிக்கப்பட்ட தலம் என்பது பொருள். பூமிப்பிராட்டிக்கு அரையில் அணியும் அரை நூல் மாலைத் தானத்திலுள்ளது பற்றிவந்த பெயரென்று கூறுவாருமுளர். நெடுநாள் தவம் செய்தும் மனத்தூய்மை பெறாத பிரம்மதேவன் ஆகாயவாணி கூறியபடி பூலோகத்தில் புண்ணிய தலங்கள் எல்லாவற்றிலும் உத்தமமானது. ஆயிரமாகப் பலன் தருவதுமாகிய சத்தியவிரச சேத்திரத்தை அடைந்து அங்கு அநந்தசரசின் கரையிலுள்ள அத்திரியை உத்தரவேதியாகக் கொண்டு யாகசாலை அமைத்து அசுவமேத யாகம் செய்து அதனால் நாராயணனை ஆராதிக்க அந்த யாகத் தீயினின்றும் எழுந்த புண்ணியகோடி விமானத்தில் தேவராஜனான திருமால் தோன்றினரென்றும் அந்த வரதராஜசாமியைப் பின்பு கஜேந்திராழ்வான் பூசித்து முதலையினாலாகிய துயர் தீர்த்து மேன்மை பெற்றதென்றும், தெய்வ தச்சரில் ஒருவனான யமன் என்பவன் பிரமன் கட்டளைப்படி அங்கு எம்பெருமானுக்குத் திருக்கோயில் கட்டினான் என்பதாம், இந்திரன் யானையான ஐராவதம் நெடுநாள் தவம் செய்து மலை வடிவங்கொண்டு எம்பெருமானைத் தரிசித்ததால் அம்மலைக்கு 'அத்திரி' என்று பெயர்.

திருவூரகம்:—உலகளந்தபெருமாள் கோவில். உலகளந்த பெருமாள் அமுதவல்லி நாச்சியார், இத்தலததில் திருமால் உரகரூபியாய்ச் சேவை சாதிப்பதுபற்றி இத்திருப்பதிக்கு

  

ஊரகம் என்னும் திருநாமம் பெற்றது போலும். உரகம் - பாம்பு.

பேரகம்:—திருப்பேர்நகர். அப்பக்குடத்தான் கமலவல்லித் தாயார்! இந்திர தீர்த்தம், இந்திர விமானம், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார் மங்களா சாசனம்.

பேராமருதிறுத்தான்:—இது கண்ணபிரான் இரு மருத மரங்களைச் சாய்த்த செய்தியைக் குறிப்பதாகும். பேரா என்ற பேராத என்பதாம். செய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சமாகக் கொண்டு பேர்த்த என்ற பொருளிலும் வருவது. மருதிருத்த செய்தி. கண்ணன் செய்த லீலைகளால் கோபம் கொண்ட அன்னை அசோதை கண்ணன் திருவயிற்றில் ஒரு கயிற்றால் கட்டி அதனை ஒரு ஒரு உரலில் பிணித்து விட, கண்ணன் அந்த உரலை இழுத்துக்கொண்டு இரட்டை மருதமரத்தின் நடுவே எழுந்தருளிய பொழுது அவ்வுரல் இரு மரங்களுக்கும் மத்தியில் சிக்குண்டு இழுக்கப்பட்டபடியால் அம் மரங்கள் இரண்டும் முறிந்து விழுந்தவுடன், முன் நாரதர் இட்ட சாபத்தால் அம்மரங்களாகக் கிடந்த நளகூபரன், மணிக்ரீவன் என்னும் குபேரன் புத்திரர்கள் முன்பு ஒரு காலத்தில் அப்சரப் பெண்களுடன் ஆடையில்லாமல் நீரில் உல்லாசமாக விளையாடிக் கொண்டிருக்கையில் நாரதமுனிவர் அங்கு வந்ததும் மங்கையர் அனைவரும் நாணங்கொண்டு ஆடை அணிந்து நீங்க, இவ்விருவர் மட்டும் குடிமயக்கத்தில் ஆடையின்றியிருக்கக் கண்ட நாரத முனிவர் மரங்களாகச் சபித்தார். அவர்கள் சாப விமோசனம் வேண்ட திருமால் உங்களிடம் வரும் சமயம் நீங்குமென அதன்படியே கண்ணன் அங்கு தோன்றியதால் சாபம் நீங்கப் பெற்றனர்.

திருவெள்ளறை:—புண்டரீகாட்சன், பங்கயச்செல்வி, செண்பகவல்லி. விமலாக்ருதி விமானம். பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களா சாசனம், உய்யக்கொண்டார்

அவதார தலம். வெள்ளறை - வெண்மையான பாறைகளா லியன்ற மலை.

திருவெஃகா:—சொன்ன வண்ணஞ் செய்த பெருமாள். கோமளவல்லி நாச்சியார். பொய்கையாழ்வார் அவதரித்த தலம். ஒருமுறை பிரம்மதேவன் செய்த வேள்வியை அழிக்க வந்த வேகவநதியைத் தடுத்தற்பொருட்டு அதற்கு அணை யாகக் குறுக்கிற் பள்ளிகொண்டருளினவனாதலால் அப்பிரா னுக்கு வடமொழியில் "வேகாசேது" என்று பெயர். அது தமிழில் "வேகவணை" என மொழிபெயர்த்து "வேகணை" என விகாரப்பட்டு, பின்பு வெஃகணை எனத் திரிந்து, தனி யாகுபெயராய்த் தலத்தைக் குறித்து "வெஃகா" என மருவி வழக்கில் வந்தது.

திருவாலி:—வயலாலிமணவாளன் அம்ருதகடவல்லி. எம்பெருமானைத் திருமகள் ஆலிங்கனஞ் செய்துகொண்ட தலம் ஆதலின் இதற்கு "திருவாலி" எனப் பெயர் பெற்றது. இதனையே பெரிய திருவாலிநகர் எனச் சிறப்பித்தனர் போலும்.

திருத்தண்கால்:—அப்பன், தண்காலப்பன். அன்னநாயகி, அநந்தநாயகி நாச்சியார் நால்வர். திருமங்கையாழ்வார், பூதத்தாழவார் மங்களா சாசனம்.

திருநறையூர்:—நம்பி, நம்பிக்கை நாச்சியார். திருமங்கை யாழ்வார் மங்களா சாசனம். நறுமணம் மிக்க தலமாதலின் "நறையூர்" எனப் பெயர் பெற்றது. இங்கு எம்பெருமான் நாச்சியாருக்குப் பிரதாணியத்தை அளித்ததால் நாச்சியார் கோயில் என்ற ஒரு பெயர் வழங்குகின்றது. இத்தலத்தில் மேதாவி முனிவரின் கன்னிகையை பலியென்னும் அசுரன் கவர்ந்து செல்ல அவனை எம்பெருமான் சபித்து அக் கன்னிகையை அம்முனிவருக்கு அருள் செய்தார் என்பது தெரிகிறது.

  

திருப்புலியூர்குட்டுநாடு:—மாயப்பிரான் பொற்கொடி நாச்சியார். திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் மங்களா சாசனம்.

திருவரங்கம்:—திருஅரங்கநாதன். நம்பெருமாள் திருவ ரங்கநாச்சியார். திருமாலின் திவ்ய தலங்கள் நூற்றெட்டனுள் தலையாயது "கோயில் திருமலை பெருமாள் கோயில்" என்று பிரதானமாக எடுத்துக் கூறப்படும் மூன்று தலங்களுள் முதலாவது. "கோயில்" என்றும் "பெரிய கோயில்" என்றும் பெயருடையது. "பூலோக வைகுண்டம்" எனப்படும் பெருமை யுடையது. "போக மண்டபம்" எனப்படுவதுமாகிய தலம். ஆதிசேஷசயனத்திற் பள்ளிகொண்டருளும் திருமால். ஆதியில் சத்தியலோகத்தில் பிரமனது திருவாராதனைத் திருவுருவமா யிருந்தான். பின்பு சூரியகுலத்து மநுகுமாரனான இலட்சவாகு அரசன் பிரமனைக் குறித்து பலகாலம் தவம் செய்து அத்தேவன் அருளால் அப்பெருமானைத் தான் பெற்றுத் திருஅயோத்திக்கு எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்து பிரதிஷ்டித்துத் திருவாராதனஞ் செய்து வந்தனன். அந்த திருஅரங்கநாதனே இட்ச்சுவாகு முதல் இராமபிரான் வரையி லுள்ள இரவிகுல மன்னரெல்லார்க்கும் குலதெய்வமாக விளங்கி னான். இவ்வாறு மனித உருக்கொண்ட பெருமாளாகிய இராமபிரானால் வணங்கப்பட்டமைபற்றி ரங்கநாதனுக்கு, பெரிய பெருமாள் எனும் திருநாமம். இராமர் பட்டாபிசேகம் செய்துகொண்டபின், திருவரங்கநாதனைத் தனக்கு மிகவும் பிடித்தவனான விபீடணாழ்வாரிடம் கொடுத்து ஆராதித்து வரும்படி கொடுத்தனுப்ப, இலங்கையை நோக்கிச் செல்லும் வழியில் உபயகாவேரி மத்தியில் பெருமான் புடைபெயராது விமானத்துடனே நிலை நின்றருளினார். அவ்வாறு திருமால் திருவுள்ளமுவந்து அமர்ந்த இடமே திருஅரங்கமெனப்படுவது.

திருக்கண்ணமங்கை:—பக்தவச்சலப்பெருமாள். பூமிதேவி நாச்சியார். விண்ணகரென்பது தேவலோகம் போன்றதென்ற காரணம்பற்றி வந்த பெயரென்பர், இதுவே உப்பிலியப்பன் சந்நதியெனப்படுவது. ஒப்பிலியப்பன் என்றும் வழங்குவர்,

மிருகண்டுமுனிவர் பத்தினியின் விருப்பப்படி உப்பில்லாத பிரசாதங்களையே அமுது செய்கின்றனர் என்பதறிக. திருமங்கையாழ்வார், பொய்கையாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் மங்களா சாசனம்.

திருக்கண்ணபுரம்:—சௌரிராஜன். கண்ணபுர நாயகி. இது கண்ணபிரானின் ஐந்து தலங்களுள் ஒன்று. இதற்கு கண்வபுரம் எனவும் பெயர். மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான் என்று நம்மாழ்வார் மங்களா சாசனம் செய்தது. பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் மங்களா சாசனம்.

திருச்சேறை:—சாரநாதன், சாரநாயகி. இத்தலத்தில் எம்பெருமான், நாச்சியார், விமானம், தீர்த்தம், நிலம் என்று ஐந்து சாரமுள்ள பொருட்கள் அமைந்திருத்தலால் இப்பெயர் வந்தது. இத்தலத்தில் காவேரி நதி தவம் செய்து கங்கா நதியைக் காட்டிலும் சிறப்புப் பெற்றது என்பர்.

தேரழுந்தூர்:—இதுவே திருவழுந்தூர். ஆமருவியப்பன், செங்கமலவல்லித்தாயார். உபரிசரவசு என்னும் அரசன் தன் தப வலிமையால் விமானத்துடன் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் தன்மையான இவன் தேவர்கட்கும் முனிவர்கட்கும் நடந்த விவாதத்தில் பாரபட்சமாகத் தீர்ப்புக் கூறியதால், முனிவர்களால் சபிக்கப்பட்டு பூமியில் விழுகையில் அவனது தேர் அழுந்தப் பெற்ற இடமாதலின் தேரழுந்தூர் என்ற பெயர் பெற்றது. திருமங்கையாழ்வார் மங்களா சாசனம்.

திருக்குடந்தை:—சாரங்கபாணிப்பெருமாள், ஆராவமுதன் கோமளவல்லி. பெரியாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் மங்களா சாசனம்.

திருக்கடிகை:—சோளசிம்மபுரம். யோகாநருசிம்மர் அம்ருதவல்லி நாச்சியார். ஒருவர் ஒரு கடிகைப்பொழுது இத்

தலத்தில் இருந்தாலும் அவருக்கு முக்தி கிடைக்குமாதலின் இத் தலத்திற்குக் கடிகையென்று திருநாமம். நரசிம்மமூர்த்தி உறைதற்கு இடமாயிருத்தல்பற்றி சோளசிம்மபுரமெனவும் வழங்கப்படுவது.

திருக்கடல்மல்லை:—மகாபலிபுரம். தலைசயனத்துறைவார் நிலமங்கை நாச்சியார், பூதத்தாழ்வார் திருஅவதாரத் தலம்.

திருவிடவெந்தை:—நித்யகல்யாணர். கோமளவல்லி நாச்சியார். இத்தலத்துள்ள வராகப்பெருமாள் தமது தேவியை இடப்பக்கத்தில் கொண்டிருத்தலால் இத்தலத்திற்கு திருவிடவெந்தையென்று திருநாமமாயிற்று.

திருநீர்மலை:—நீலமுகில்வண்ணன். அணிமாமலர் மங்கைத்தாயார். சக்கரவர்த்தித் திருமகன், உலகளந்த பெருமாள், அழகியசிங்கர் இவர்கள். திருமங்கையாழ்வார் பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் மங்களா சாசனம்.

திருமோகூர்:—காளமேகப் பெருமாள். திருமோகூர்வல்லி. மேகவல்லி நாச்சியார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் மங்களா சாசனம்.

பத்ரிகாச்ரமம்:—வதரியாச்சிரமம் எனவும் பெயராம். பதரீநாராயணன். அரவிந்தவல்லி, இலந்தைமரத்தின்கீழ் பத்மாசனங்கொண்டு ஞான முத்திரை கொண்டு நரனுக்கு மந்திரோபதேசம் செய்தவர். பெரியாழ்வார், திருமங்கை யாழ்வார் மங்களா சாசனம். பத்ரி - இலந்தைமரம். இலந்தை மரங்களடர்ந்த ஆசிரமம் என்பது.

வடமதுரை:—கோவர்த்தநேசன், சத்தியபாமை. கண்ண னுக்கு மதுரமாயிருத்தலாலும், மது என்ற அசுரனை அழித்த இடமாதலாலும் இதற்கு மதுரையெனப் பெயர் வந்ததென்பர்.

''ஓர்ஆய எல்லாம் ஒழியாமே'' என்றதால் மேலே சொன்ன திருத்தலங்கள் அல்லாமல் நூற்றெட்டுத் திருத்தலங்கள் அனைத்தும் சென்று என்றானது.

'ஓர் ஆனை கொம்பு ஒசித்தது' என்றது கிருஷ்ண பலராமர் மதுரைக்கெழுந்தருளிய பொழுது கம்சனால் ஏவப் பட்ட யானையின் கொம்புகளை ஒடித்து யானையை அடித் தழித்தது என்பதாம். திருமாலுக்கு செங்கண்ணன் எனவும் தாமரைக் கண்ணன் எனவும் அடைமொழி கொடுத்து விளித் திருத்தல் காண்க. "எண் அருசீர் பேர்ஆயிரம் பிதற்றி" என்றது அவன் திருநாமங்களை சதா செபித்துக்கொண்டு என்பதாம். பெருதெருவே என்றதால் தான் செய்யப்போகும் செயல் ஊரார் அனைவரும் வந்து தன் நிலையைக்கண்டு காண வேண்டுமென்பதால். "ஊரார் இகழிலும்" என்றது தன் நிலை கண்டு ஊரார் வாழ்த்துதற்கு பதிலாகஇகழ்ந்தாலும் என்றபடி. பெண்ணை என்பது பனைமரம். வார்ஆர் பூபெண்ணை என்றதால் நீண்ட அழகிய பனைமட்டை. பூம்பெண்ணை யென்றது அதன் சிறப்பு கருதி.

மடல் என்பது பனங்கருக்கால் செய்யப்பெற்ற குதிரை யைக் குறிக்கும். இக்குதிரைக்கு ஆவரம் பூமாலையும் மணியும் அணிவித்து எந்தப் பெண்ணை ஒரு ஆடவன் காதலிக் கிறானோ அந்தப் பெண்ணின் உருவை வரைந்து குதிரையின் முகப்பில் தொங்கவிட்டுக் கொள்வன். தன் உடம்பு முழுதும் நீறு பூசிக்கொண்டு, எலும்பு மாலையைக் கழுத்தில் அணிந்து கொண்டு, தலையில் எருக்கமாலை சூடிக்கொண்டு மடல் குதிரைமேல் ஏறித் தெருவில் வருவான். குதிரையைச் சிலர் தெருவில் இழுத்துக் கொண்டு வருவர். கூர்மையான பனங் கருக்குக் குத்திக்குத்தி ஒழுகும் இரத்தம் கண்டோர் மனம் இரங்குவர். பெற்றோரைக் குறைகூறுவர். ஊரார் கூறுவது கேட்டுத் தன் பெண்ணைக் கொடுக்கப் பெற்றோர் முன் வருவர். இதுவே மடலூர்தல் அல்லது மடலேறுதல் என்பதாம்.

மடலூர்தல் ஆடவர்க்கே சிறப்பு. ஆனால் இங்கு நம் பரகாலநாயகி மடலூர்வேன் என்று துணிதல் கண்டு இறைவன் மனம் மகிழ்ந்து வந்து அவளுக்கு அருள்வான் என்பதே இதன்

சித்தாந்தம். இறைவனை இவ்வுலகிலே கண்டு இன்புற்று சுவர்க்கத்தை இங்கேயே ஆழ்வார்கள் கண்டுகளித்திட வேண்டு மென்பதே திருமங்கையாழ்வார் திருவுள்ளம் உணர்த்துவதாம்.

சிறிய திருமடல் முற்றும்

ஒரு தனிப் பாடல்
(கம்பர் பாடியது)
நேரிசை வெண்பா

உரா தொழியே னுலகறிய வொண்ணுதலீர்
சீரார் முலைத்தடங்கள் சேரளவும்—பாரெல்லாம்
அன்றோங்கி நின்றளந்தான் நின்ற திருநறையூர்
மன்றோங்க வூர்வன் மடல்.

அ - ரை:- உராது - மடலூராது. ஒழியேன் - இருக்க மாட்டேன், செத்தாலும் ஓயமாட்டான், இறந்துபடமாட்டேன், செத்தாலும் செய்து முடிப்பேன் என்றபடி. ஒண்ணுதலீர் - ஒள்நுதலீர், ஒளிவீசும் நெற்றியையுடைய மகளீர். சீரார் - சீர்மிகு. சிறந்து நன்கு வளர்ந்த. முலைத் தடங்கள் - முலைகளின்மேல். சேரளவும் - எம்பெருமான் தன் மார்பில் அழுத்திச் செருமளவும். பாரெலாம் - உலகெலாம் அன்றோங்கி நின்றளந்தான் - அன்று வாமன அவதாரத்தில் ஓங்கி வளர்ந்த உலகங்களையெல்லாம் அளந்த. நின்ற - எழுந் தருளியுள்ள. திருநறையூர் - திருநறையூரிலுள்ள. மன்றோங்க - பொது இடங்கள், நாற்சந்தி ஆகிய இடங்களில் யாவரும். அறிய. ஊர்வன மடல் - மடல் ஊர்வன்.

வி - ரை :- ஒளிரும் நெற்றியையுடைய மகளிர், எம் பெருமான், நன்கு வளர்ந்து பெருத்த என் முலைகளின்மேல் தன் மார்பை அழுத்தி இன்பம் துய்த்திடானாகில், முன்பொரு காலத்தில் ஓங்கி வளர்ந்து உலகெலாம் அளந்த பெருமான் எழுந்தருளியிருக்கும் திருநறையூரிலுள்ள பொது இடங்கள் நாற்சந்திகள் எங்கும் பலரும் அறிய மடலூராது ஒழியேன். மடலூராது என் உயிர் நீங்காது. இதனால் ஆழ்வார்

திருவுள்ளம் நிருநறையூரையே மடலூர்தற்கு சிறந்த திருத்தலமாகக்கொண்டதாகத் தெரிகிறது. பெரிய திருமடலிலும் மற்ற திருத்தலங்களைக் கூறியிருந்தும்,

"கண்ணனைக் கண்ண புரத்தானைத் தென்னறையூர்
மன்னு மாணிமாடக் கோவில் மணாளனை"

என்று கடைசியாக திருநறையூரையே அருளிச் செய்தமையாலும் இது புலனாகிறது, பெரிய திருமடலின் தனியனில் "நம்பிநறையூரர்" என வருதலும் காண்க.

சிறிய திருமடல் தனிப்பாடல் உரை முற்றும்

# பெரிய திருமடலின்
# தனியன்

(பிள்ளை திருநறையூரரையர் அருளியது)

நேரிசை வெண்பா

பொன்னுலகில் வானவரும் பூமகளும் போற்றிசெய்யும்
நன்னுதலீர் நம்பிநறையூர்—மன்னுலகில்
என்னிலைமை கண்டு மிரங்காரே யாமாகில்
மன்னு மடலூர்வன் வந்து.

அ - ரை :- பொன்னுலகில் - தேவருலகில், பரமபதத்தில், வானவரும் - நித்திய சூரிகளும், பூமகள் - தாமரை மலரி னின்றும் பிறந்த பிராட்டி, போற்றி - துதித்திடும், நறையூர் - திருநறையூரில் எழுந்தருளியிருக்கும், நம்பி - திருக்கல்யாண குணங்களையுடைய எம்பிரான். மன்உலகு - இவ்வுலகு, பூமி. என் நிலைமை கண்டு - எம்பெருமானை அடைந்திட வேண்டு மென ஏங்கும் என் நிலைமை கண்டு, இரங்கார் ஆகில் - அருள் செய்யாவிடில், வந்து - எம்பெருமான் எழுந்தருளி யிருக்கும் திருப்பதிகள் ஒன்றும் விடாமல் வந்து, மன்னும் மடல் ஊர்வன் - தினமும் எப்பொழுதும் மடல் ஊர்ந்து கொண்டேயிருப்பேன்,

வி - ரை :- மிகச் சிறந்த நெற்றியையுடைய மகளீர், தேவர் உலகிலும், பரமபதத்திலுமுள்ள நித்திய சூரிகளும் தாமரை மலரினின்றும் பிறந்த பிராட்டியும், போற்றிப் பாடும் திருநறையூரில் எழுந்தருளியிருப்பவனும் சகல கல்யாண குணங் களுமுடையவனான எம்பெருமான் என்றும் நிலைத்திருக்கும் இவ்வுலகில், எம்பெருமான்மேல் நான் கொண்டிருக்கும் காதல் நிலை கண்டும், எனக்கு அருளானேயாகில், அவன் அருள்

கூர்ந்து எழுந்தருளியிருக்கும் திருப்பதிகள் தோறும் வந்து தினமும் மடலூர்ந்து கொண்டேயிருப்பேன்.

இந்த வெண்பா ஆழ்வார் திருவாய் மலர்ந்தருளிய பாவனையாகவே அமைந்தது. ஆழ்வார் திருவுள்ளம் என்ன இத்திருமடலில் பேச இருக்கிறது என்பதை ஒரு வெண்பாவில் நிறைவு செய்கிறார் பிள்ளை திருநரையூரரையர். தான் குடியிருக்கும் திருநறையூர் எம்பிரான்மேல் எழுந்த காதலை ஆழ்வார் மனம் செல்லும் வழி சென்று பாடியிருத்தல் காண்க. 'என் நிலைமை கண்டும்'' என்றதில் எம்பெருமானைச் சேர்ந்து விட வேண்டுமெனத் துடிக்கும் என் நிலைமை கண்டும் என்பதாம். ''இரங்கார் ஆகில்'' என்றது அருள்கூர்ந்து என்னை ஏற்று தன் மார்பில் சேர்த்து இன்பம் துய்க்கானாகில் என்பதாம். ''வந்து'' என்ற சொல் அவன் எழுந்தருளியிருக்கும் நூற்றெட்டு திருப்பதிகள் தோறும் வந்து என்பதாம்.

பெரிய திருமடல்
தனியன் உரை முற்றும்

திருமங்கைமன்னர் திருவாயமுதுதிர்த்த

# பெரிய திருமடல்

இருநூற்றுத்தொன்னூற்றேழு அடிகள் கொண்ட
கலிவெண்பா

*(நாதநாமக்கிரியை ராகம்—ஆதிதாளம்)*

மன்னிய பல்பொறிசே ராயிரவாய் வாளரவின்
சென்னி மணிக்குடுமித் தெய்வச் சுடர்நடுவுள்
மன்னிய நாகத்தணைமேலோர் மாமலைபோல்
மின்னு மணிமகர குண்டலங்கள் வில்வீசத்
துன்னிய தாரகையின் பேரொளிசே ராகாசம்
என்னும் விதானத்தின் கீழால்—இருசுடரை
மன்னும் விளக்காக வேற்றி மறிகடலும்
பன்னு திரைக்கவரி வீச—நிலமங்கை
தன்னை முனநா ளளவிட்ட தாமரைபோல்
மன்னிய சேவடியை வானியங்கு தாரகைமீன்
என்னும் மலர்ப்பிணைய லேய்ந்த—மழைக்கூந்தல்
தென்ன னுயர்பொருப்புந் தெய்வ வடமலையும்
என்னு மிவையே முலையா வடிவமைந்த
அன்ன நடைய வணங்கே—அடியிணையைத்
தன்னுடைய வங்கைகளால் தான்தடவத்தான்
கிடந்தோர்

உன்னிய யோகத் துறக்கந் தலைக்கொண்ட
பின்னைத் தன்னாபி வலயத்துப் பேரொளிசேர்
மன்னிய தாமரை மாமலர்பூத் தம்மலர்மேல்
முன்னந் திசைமுகனைத் தான் படைக்க மற்றவனும்
முன்னம் படைத்தனன் நான்மறைகள் '

அரும்பதவுரை:- மன்னிய - பொருந்திய, மன்னுதல் பொருந்துதல். பல் - பல. பொறி - புள்ளிகள். சேர் - சேர்ந்த. ஆயிரவாய் - ஆயிரம் வாய்களையுடைய; ஆயிரம் தலைகளையுடைய. வாள்அரவு - ஒளி வீசும் அரவு. சென்னி - தலை, மணிக்குடுமி - மாணிக்கங்கள் பதிந்த தலையின் உச்சிப் பாகம். தெய்வச்சுடர் நடுவுள் - மாணிக்க ஒளிகள் பாய்ந்து தங்கும் நடுபாகத்துள். மன்னிய - தங்கிய. நாகத்தணை - அந்தத் திருவனந்தாழ்வானாகிய சயனத்தின்மேல். மாமலை போல் - ஒரு பெரும் கரிய மலைபோல், மணிமகர குண்டலங்கள் - இரத்தினங்கள் பதித்த குண்டலங்கள். வில்வீச - ஒளி வீச. துன்னிய - அடர்ந்து விளங்கிய, நெருங்கிய. தாரகை - விண்மீன்கள். பேர்ஒளி - மிகுந்த ஒளி, சேர் - சேர்ந்த ஆகாசம் என்னும் விதானம் - ஆகாயம் என்னும் மேற்கட்டி. கீழால் - கீழே, இருசுடர் - திருவாழி திருச்சங்குகளாகிய இரு சுடர்கள், சந்திர சூரியர் எனினுமாம். மன்னும் - என்றும் அணையாத விளக்கு. ஆகஏற்றி - விளக்குகளாக ஏற்றப் பெற்று. மறிகடல் - அலைமோதும் கடல். பன்னுதிரை கவரி - ஒலிக்கும் அலைகள் கவரியாக. வீச - வீசப்பெற்ற. நிலமங்கை - பூமிப்பிராட்டி. முனநாள் - முன் ஒரு காலத்து. அளவிட்ட தாமரை - அளந்த திருவடித் தாமரை. மன்னிய சேவடி - பதிந்த திருவடிகளை. வான் இயங்கும் - ஆகாயத்தில் இயங்கும். தாரகைமீன் - நட்சத்திர மீன்கள். மலர் பிணையல் ஏய்ந்த - மலர்மாலை அணிந்த. மழைகூந்தல் - மழைமேகம் போன்றும் கரிய கூந்தல், தென்னன் உயர் பொருப்பு - திருமாலிருஞ்சோலைமலை. வடமலை - திருவேங்கடமலை. இவையே - இவை இரண்டுமே. முலையா - முலைகளாக, வடிவமைந்த - உருவம் அமையப்பெற்ற. அணங்கு -

தெய்வமகள், பூமிப்பிராட்டி. அடியிணை - இணையடிகள், இருபாதங்கள். வங்கைகள் - வளை கைகள். தான்தடவ - பாதங்களைத் தடவிக் கொடுக்க. தான்கிடந்து - மலைபோல் கிடந்த. ஓர் உன்னிய யோகம் - ஓர் எண்ணிய யோகம். உறக்கம் - யோக நித்திரை. தலைக்கொண்ட - மேற்கொண்ட. பின்னை - பின்பு. தன்நாபி - தன் நாபியில், தொப்புழில். வலயம் - வட்டம். பேரொளி சேர் - ஒளி மிகுந்த. மன்னிய - நிலைத்த, என்றும் நீங்காத. மாமலர் - பெரிய மலர். பூத்து - பூக்க வைத்து. முன்னம் - முதன் முதலாக. திசைமுகன் - நான்குமுகக் கடவுள், தான் படைக்க - மகாவிட்டுணு படைக்க. மற்றவனும் - மற்று அந்தப் பிரமனும், முன்னம் - முதலில். நான்மறைகள் - நான்கு வேதங்கள்.

விளக்கவுரை:- பொருந்திய பல புள்ளிகளையும் ஆயிரம் வாய்களையும் அதாவது ஆயிரம் தலைகளையும் உடைய பாம்பின் தலையில், படமெடுத்த தலையில் சுடர்விட்டு ஒளிக்கும் மாணிக்கங்களினின்றும் பரவும் ஒளிக் கதிர்கள் பாயும் ஒளிப் பிழம்புக்கு மத்தியில், மின்னிப் பிரகாசிக்கும் ரத்தின மணிகள் பதித்த மகர குண்டலங்கள் ஒளியைப் பொழிய, திருவாழி திருச்சங்குகள் ஒளி வீசும் விளக்குகளாக ஏற்றி, அலை வீசும் கடலும், முன்னொரு அவதாரத்தில் பூமிப்பிராட்டியை அளந்த திருவடித் தாமரையை நோக்கி வீசும் அலைகளாகிய சாமரங்களையும், வானில் இயங்கும் நட்சத்திரக் கூட்டங்களை மலராக அணிந்துள்ளவளும், கரிய மழை மேகங்களை கூந்தலாகவும், திருமாலிருஞ்சோலையும், திருவேங்கடமும் முலைகளாக அமைந்த அன்ன நடையினள், தெய்வப்பாவை பூமிப்பிராட்டி தன் வளைகைகளால் தடவிக் கொடுக்க, அந்தத் திருவனந்தாழ்வானாகிய நாகசயனத்தின்மேல் ஒருபெரும் மலைபோல் சாய்ந்தாற்போல் பள்ளிகொண்டருளும், ஓர் உயர்ந்த நோக்குக்காக யோக நித்திரையை மேற்கொண்ட பின்பு, தனது நாபி மண்டலத்தில் பேர் ஒளி மிக்க என்றும் நிலைத்து நிற்கும் தாமரை மலர் ஒன்றை பூக்க வைத்து, அந்தத் தாமரை மலரில் முதன் முதல் நான்முகனாம் பிரமனைப் படைப்பித்து, அந்தப்

பிரமனும் முதன் முதலில் நான்கு வேதங்களைப் படைத்து வெளிப்படுத்தினான்.

இப்பாசுரத்தின் முதற்சொல் 'மன்னிய' என்ற சொல்லுக்கு "வாழிய" என்றும், வியங்கோல் வினைமுற்றாகக் கொண்டும் பொருள் கொள்ளலாம். தொடர்ந்து வரும் சொல் "பல் பொறி" என்றதால் "பொருந்திய" எனப் பொருள் கொள்ளப் பட்டது. பல்பொறிகள் பொருந்திய என்பதாம். இப்பகுதி திருமால் பள்ளிகொண்டுள்ள காட்சியை ஆழ்வார் பெருந்தகை படம் பிடித்துக் காட்டுகிறார். எம்பெருமானார் பள்ளிகொண் டிருப்பது "நாகத்து அணைமேல்" அது பல்பொறிசேர் ஆயிரம் வாய்களையுடையது. அதன் தலைகளிலிருந்து ரத்தின ஒளிப் பிழம்பு பாய்ந்து கொண்டிருக்கிறது. அந்த ஒளிப் பிழம்புக்கு மத்தியில் மகரக் குண்டலங்கள் ஒளி வீச பரமன் பள்ளிகொண் டுள்ளார். மேலே நட்சத்திரக் கூட்டம் கவிழ்ந்து முத்துப் பந்த லெனக் காட்சியளிக்க கீழே திருவாழி, திருச்சங்குகளால் அமைந்த விளக்கு ஒளிப் பரப்பிக் கொண்டிருக்கிறது. கடல் அலைகள் சாமரங்கள் என பூமிப்பிராட்டியை அளந்த அந்த எம்பெருமான் திருவடித் தாமரையை நோக்கி வீசப்படுகிறது என்பதை "மறிகடலும் பன்னுதிரைக் கவரி" என்கிறார். பூமிப் பிராட்டிக்கு மழை மேகங்கள் கூந்தல் தாரகை மீன்களே மலர் கள் என்பதனை, "வானியங்கு தாரகை மீன் என்னும் மலர் பிணையலேய்ந்த மழைக் கூந்தல்" என்கிறார். அவளுக்கு முலைகள் தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலையும். எம்பெருமான் பள்ளிகொண்டிருப்பது "ஒரு மாமலைபோல்" அவன் உறக்கம் கொள்ளவில்லை. அது ஒரு "யோகத் துறக்கம்" பூமிப்பிராட்டி, திருவடிகளை வருடிக் கொண்டிருக் கிறாள். அந்த யோகத்துறக்கம் தந்ததுதான், "தன் நாபி வலயத்துப் பேரொளி சேர் மன்னிய தாமரை" அம்மலர் மேல் திசைமுகன். திசைமுகன் படைத்தது வேதங்கள் நான்காகும். இவையனைத்தும் எம்பெருமான் யோகத்துறக்கம் தந்தவையே என்பதை இந்நூலைக் கற்போர் உணர வேண்டும். இதனால் உலகில் உயிரினங்கள் படைக்கப்படுவதற்குமுன் அவ்வுயிரினங்

களைக் காத்தருள வேதம் படைக்கப்பட்டது என்பதும் காண்க.

எம்பெருமான் நாகத்தணை மேலோர் மாமலைபோல் பள்ளி கொண்டிருக்கிறார் என்பதனை மன்னிய நாகத்தணை என அடைகொடுத்துப் பாடுகிறார். "மன்னிய" என்பது இங்கும் "பொருந்திய" என்ற பொருளில் வருவது. நாகத்தணை எப்பொழுதும் அவனுக்கென்றே இருப்பது ஆதலின் மன்னிய என்றனர். அவன் படுத்திருப்பது "மாமலைபோல்", "மா" என்றது பெரிய என்ற பொருளில் வருவது. அந்தக் கருமையான உருவம் மலையெனக் கிடந்தது என்றபடியுமாம். "மா" என்ற சொல் பெருமைக்குரிய எனினுமாம். ஆதலின் பெருமைக்குரிய உருவம் அதில் பள்ளிகொண்டுள்ளது என்பதுவுமாம். இங்கு கூறப்பட்ட இரு சுடர்கள் சந்திர சூரியர்களை யெனினுமாம். மகா குண்டலம், தாரகா, ஆகாசம், விதானம் ஆகிய வடசொற்கள் கையாளப்பட்டிருத்தல் காண்க. கவரி என்றது கபரீ எனும் வடசொல்லின் திரிபு. வானியங்கு தாரகை மீன் என்ற சொற்றொடரில் தாரகா என்ற வடசொல்லும் மீன் என்ற தமிழ் சொல்லும் ஒரே பொருள் கொடுப்பவை. என்றாலும் திருமங்கையாழ்வார் தாரகை மீன் என்று பாகுபடுத்தி இருவகை நட்சத்திரக் கூட்டங்களை கூறியிருக்கிறார் என்பதாம். தென்னனுயர் பொருப்பு என்றது 'திருமாலிருஞ்சோலை' இதனைப் பெரியாழ்வாரும்

"மன்னர் மறுக மைத்துனன் மார்க்கு ஒருதேரின் மேல்
முன்னங்கு நின்று மோழையெழுவித்தவன் மலை
கொன்னவில் கூர்வேற்கோன் நெடுமாறன் தென் கூடற்கோன்
தென்னன் கொண்டாடும் தென்திருமாலிருஞ்சோலையே"

என்று வியத்தலும் காண்க. அங்கு தென்னன் என்றது மலயத்வஜனென்னும் பாண்டிய அரசனை. இதனைத் தென்நன் என்று பிரித்தும் பொருள் கொள்க. தெற்கில் உள்ள நல்ல

மலை என்பதாம். தென்னனுயர் பொருப்பும் திருவேங்க மலையும் பூமிப்பிராட்டிக்கு முலைகள். நாயகன் இத்திருமலை களிலும் விரும்பிப் படுகிடையாய்க் கிடைக்குமிடமே முலை களாகிய இம்மலைகள் என்றபடி.

"உன்னிய யோகத் துறக்கம்" ஆய்ந்த சிந்தனை உறக்கம். தூங்குபவன்போல் கிடத்தல். நாபிவலயம் வடசொல். "பூத்து" என்றது பூக்க எனும் எச்சத் திரிபு.



'மற்றவனும் முன்னம் படைத்தனன் நான் மறைகள் என்றதால் வேதங்கள் பிரம்மனால் படைக்கப்பட்டது என்றா னது. வேதங்கள் தான் தோன்றியாதலின் இது பொருந்தாத தாகக் கருதப்படினும் அவை பிரம்மனின் வாக்கில் நின்றும் வெளிவந்தது என்றே பொருள் கொள்ளல் வேண்டும். வேதங் கள் ருக்கு, யஜுஸ், சாமம், அதர்வணம் என நான்குமாம். எம் பெருமான் பிரம்மனைப் படைத்து வேதங்களைச் சொல்ல வைத்தான் என்றபடி.

… … … … … … … …அம்மறைதான்
மன்னு மறம்பொரு ளின்பம்வீ டென்றுலகில்
நன்னெறி மேம்பட்டன நான்கன்றே—நான்கினிலும்
பின்னையது பின்னைப் பெயர்தரு மென்பதோர்
தொன்னெறியை வேண்டுவார் வீழ்கனியு மூழிலையும்
என்னு மிவையே நுகர்ந்துடலம் தாம்வருந்தித்
துன்னு மிலைக்குரம்பைத் துஞ்சியும்—வெஞ்சுடரோன்
மன்னு மழல்நுகர்ந்தும் வண்தடத்தி னுட்கிடந்தும்
இன்னதோர் தன்மையரா யீங்குடலும் விட்டெழுந்து
தொன்னெறிக்கட் சென்றா ரெனப்படுஞ் சொல்லல்லால்
இனனதோர் காலத் தினையா ரிதுபெற்றார்
என்னவும் கேட்டறிவதில்லை—உளதென்னில்
மன்னுங் கடுங்கதிரோன் மண்டலத்தி னன்னடுவுள்
அன்னதோ ரில்லியினூடுபோய்—வீடென்னும்

தொன் னெறிக்கண் சென்றாரைச் சொல்லுமின்கள்
சொல்லாதே
அன்னதே பேசு மறிவில் சிறுமனத்து ஆங்கு
அன்னவரைக் கற்பிப்போம் யாமே—அதுநிற்க 35

அ-ரை :- அம்மறைதான் - அந்த நான்கு வேதங்கள்தான் மன்னும் - நிலைப்படுத்திய. ஏற்றுக் கொள்ளப்பட்ட. உண்மையென்று உணர்த்துவதாகிய. அறம் - அறத்தின் வழி நிற்றல், ஈகை முதலிய குணங்கள். பொருள் - அறத்தின் வழி நின்று பொருளீட்டல். இன்பம் - இன்பம் துய்த்தல். அறத்தின் வழி நின்று பொருளீட்டி இன்பம் துய்த்தல் அல்லது இன்பம் துய்த்திட வேண்டி அறத்தின் வழி நின்று பொருளீட்டல் இது காம இன்பமே மேலோங்கிய செயல் என்பதாம். வீடு - இவ்வுலகத் துன்பங்களினின்றும் விடுபட்டு வீட்டை அடைதல். இறந்தபின் ஆன்மா அடையும் ஒரு நிலை. சுவர்க்கம், மோட்சம். நன்னெறி - நல்வழி. மேம்பட்டன - மேன்மையாகக் கருதப்படும் பேறு. ஒருவன் அடையும் பேறு. நான்கன்றே - இந்நான்குமாம். அறம் பொருள் இன்பம் வீடு எனும் நான்கு மாம். நான்கினிலும் - இந்த நான்கு பேறுகளிலும். பின்னையது - கடைசியில் சொல்லப்பட்ட வீடு. பின்னை - இவ்வுலக வாழ்வை நீத்த பின்பு. உடலை விட்டு உயிர் நீங்கிய பின்னை. பெயர்தரும் - புகழ்தரும். பெருமை சேர்க்கும். மோட்சம் அடைந்தனன் எனும் பெயர் புகழ் சேர்க்கும் என்பது - சாத்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது என்பது; என்னும். ஓர் தொல்நெறி - ஒரு பழைய, என்றுமுள்ளதாக கருதப்பட்டு வந்த ஒரு வழி, மார்க்கம். வேண்டுவோர் - வேண்டி நிற்பவர்கள். மோட்சம் அடைய வேணும் என வேண்டி நிற்பவர்கள். வீழ்கனி - தானே மரத்தில் பழுத்து விழும் பழங்கள். ஊழ் இலை - பழுத்து விழுந்த இலைகள். முதிர்ந்து வாழ்நாள் முடிந்த இலைகள். சருகுகள். நுகர்ந்து - உண்டு. உடலம் வருந்தி - உடல் வருந்தி. துன்னும் - பொருந்தும். இலைக் குரம்பை - இலைகளாலான குடிசை. குரம்பை - குடிசை. துஞ்சியும் - தூங்கியும் வசித்தும், வெஞ்சுடரோன் - கதிரவன். மன்னும் அழல் -

அழல் என்னும் காய்ச்சும் வெயில். நுகர்ந்தும் - வெய்யிலில் காய்ந்தும். வண்தடம் - வளம் மிக்க நீர் நிலைகள். கிடந்தும் - மூழ்கிக் கிடந்தும். இன்னது - இதுபோன்ற. ஓர் தன்மையர் ஆய் - ஒரே நிலையை உடையவராய். இந்த நிலையின்றி வேறு எதுவும் தெரியாதவராய் ஈங்கு - இவ்வுலகில். உடலம் - உடல். விட்டெழுந்து - நீக்கி எழுந்து. தொல் நெறிக் கண் - பரமபதத்தை அடைந்தார். பழைய நூல்களில் கூறப்பட்ட நெறி வழி சென்றார். எனப்படும் சொல்லல்லால் - என்று கூறப்படும் சொற்களேயல்லாது, வெறும் வீண் பேச்சுக்களே யல்லாது. இன்னது ஓர் காலத்து - இவ்விதமாத் இந்தக் காலத் தில். இனையார் - இது போன்றோர். இது பெற்றார் - மோட்ச்சத்தை அடைந்தார். எனவும் - என்று சொல்லவும். கேட்டறிவதில்லை - கேட்டுத் தெரிந்து கொள்ளவில்லை. சொல்லக் கேட்டதில்லை. சொல்லுவார் யாருமில்லை. மோட்ச்சத்திற்கு சென்றார் என அறுதியிட்டுக் கூறுவார் யாருமில்லை. மோட்ச்சம் என்றதோர் உலகம் இல்லை. எனும் என் கூற்றை மறுப்போரும் இல்லை என்றபடி. உள தென்னில் - அப்படி மோட்ச்சம் என்பதொன்று உண்டெனில் மன்னும் கடுங்கதிரோன் - கடுங் கதிர்களைத் தன்னிடத்தே கொண்ட கதிரவன். மண்டலம் - சூரியமண்டலம். நல்நடுவுள் - மண்டலத்தின் நட்ட நடுவே. உயிர் பிரிந்து நேராகச் செல்லு மாதலின் "நல்நடு" என்றனர் எனலாம். அன்னது - அப்படிப் பட்டது. ஓர் இல்லியின் - ஒன்றும் சொல்ல முடியாத அந்தச் சூரியமண்டலத்தின். ஊடுபோய் - ஊடுருவிச் சென்று. வீடு - மோட்சம், சுவர்க்கம். இவ்வுலகத் துன்பங்களினின்றும் விடு படுவது வீடு. வீடு சென்றார் என்றால் விடுபட்டார் என் பதே பொருள். தொல்நெறிகண் - தொன்மையாகிய நெறி யின் வழி வரும் மோட்சம், சென்றாரை - சென்றவர்களை. சொல்லுமின்கள் - சொல்லுங்கள். சொல்லாதே - இவர் மோட்சம் சென்றார் என்று கூறாமல். அன்னதேபேசும் - சொன்னதையே திரும்பத் திரும்பப் பேசும். மோட்சமுண் டென்று சாத்திரத்தில் சொல்லியிருக்கிறது என்று சொல்லிக் கொண்டு திரியும். அறிவு இல்சிறு மனத்து - அறிவு இல்லாத

குறுகிய மனத்தினர். அன்னவரை - அப்பேர்ப்பட்டவரை, அத்தகு குறுகிய மனத்தினருக்கு. கற்பிப்போம் யாமே - அவர்கள் தெளிவுபட எடுத்துக் கூறுவோம். அவர்கட்கு உண்மை என்னவென்பதை உணரக் கூறுவோம். அதுநிற்க - அந்த மோட்சமெனும் வார்த்தை சொல் அப்படியே இருக் கட்டும்.

வி - ரை :- அந்த வேதங்களான நான்கும் அறம், பொருள், இன்பம், வீடு என்று உலகில் நல்நெறியில் நின்ற நான்குபேறுகள் என்பதாம். இந்நான்கினுள் கடைசியாக வரும் வீடானது, இவ்வுயிர் உடலைப் பிரிந்த பின் அடையும் பேறு ஆகும். அதை அடைய விரும்புகிறவர்கள் காட்டில் சென்று தானாக பழுத்து விழும் பழங்களையும் முதிர்ந்து விழும் இலை தழைகளையும் தின்று உடல் வருந்தி, இலைகளால் அமைந்த குடிசையில் வாழ்ந்து, வெய்யிலின் கொடுமையையும் தாங்கிக் கொண்டு, அழகிய நீர் நிலைகளில் நீராடிக் கிடந்தும் ஆகிய இத்தகு பழக்கவழக்களைக் கொண்டவராய், இவ்வுலகில் உடலைவிட்டு நீங்கி திரும்ப வருதலில்லாத ஒரு இடத்திற் சென்றார்கள் என்பது தவிர, இவர்கள் இன்ன தினத்தில் மோட்ச்சம் சென்றடைந்தனர் என்று விளக்கமாகச் சொல்லக் கேட்டதில்லை. மோட்சம் என்ற ஒன்று இல்லையெனும் என் கூற்றுக்கு எதிராக மோட்ச்சம் உளது எனின், அது சூரியமண் டலத்தின் நட்ட நடுவே புகுந்து சென்று, திரும்பி வந்தவர் களைக் காட்டுங்கள். அப்படிக் காட்டாமல் மோட்ச்சம் உண் டென்று சாத்திரங்களில் சொல்லப்பட்ட பழம் பாட்டையே பாடிக்கொண்டிருக்கும் இவர்கள் அறிவற்றவர்களாகவும் குறு கிய மனநிலையுடையவர்களாகவும் இருக்கிறார்கள். அவர் களுக்கு புத்தி தெளிவிக்க நாம் பாடம் கற்பிப்போம். அந்த மோட்சமென்பது அப்படியே இருக்கட்டும்.

இவ்வுலகில் மாந்தராய் பிறந்தோர் அடைய இருக்கும் பேறுகள் நான்கு. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பன. இவை வேதங்கள் நமக்கு உணர்த்துகின்றன என்

பதை, "அம்மறைதான் மன்னும் அறம், பொருள், இன்பம், வீடு" என்றனர், இந்நான்கினுள் வீடு என்பது ஒருவன் இறந்தபின் அடையும் பேறு. ஆதலின் "பின்னையது பின்னைப் பெயர்தரும்" என்றனர். எதிர்காலம் நம் கையில் இல்லை. ஆதலின் பின்னைப் பெயர்தரும் என்பது ஒரு ஏமாற்றுவித்தை யென்பதுபோல் ஆழ்வார் பெருந்தகை தொடர்கிறார். வீடு பேற்றை பெற விரும்புவோர் இல்லறம் நீத்து காடு சென்று கனிகள் இலை தழைகள் உண்டு இலைவேய்ந்த குடிசையில் தங்கி வெய்யிலில் காய்ந்து நீரில் மூழ்கிக் கிடந்து தவமியற் றுவர். இத்தனை துன்பங்கள் பட்டு இவ்வுடலை விட்டெழுந்து மோட்சமடைவர் என்று கூறப்பட்டிருப்பினும் அப்படிச் சென்றார் யார் என்பது தெரியாது என்பதனை "இன்னதோர் காலத்தினையா ரிதுபெற்றார் என்னவுங் கேட்டறிவதில்லை' என்கிறார். வெறும் வாய்ச் சொல்லால் ஒருவன் மோட்சம் சேர்ந்தான் என்பதை ஏற்பதற்கில்லை என்றபடி. "ஈங்கு உடலம் விட்டு எழுந்து" என்றது இவ்வுடலின் தன்மையை உணராது உடலை வருத்தி அதனின்றும் விட்டெழுந்து என்றபடி. இவ்வுடல் எம்பெருமானுக்கானது. அவனுடன் இன்பம் துய்த்து மோட்சமென்பதனை இங்கேயே காண் பதனை விடுத்து இவ்வுடலை பாழாக்கும் பாவிகாள் என்றபடி. "மோட்சம் போய்ச் சேருவோம்" என்பது வெறும் வாய்ப் பேச்சு என்பதனை உணர்த்தவே "சொல் அல்லால்" என்றனர். மோட்சமென்பது உண்டெனின் அப்படிச் சென்ற ஒருவரைக் காட்டுங்கள் என்பதனை, "வீடு என்னும் தொல் நெறிகண் சென்றாரை சொல்லுமின்" என்பது அவரது அணித்திறமான வாதத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு, இறைவனை இவ்வுலகி லேயே, இவ்வுடல் கொண்டே அனுபவித்துவிட வேண்டும் என்ற சித்தாநதத்திற்கு இக்கேள்வி மிகச் சிறந்ததாகிறது. இவ்வாறு மோட்சம் என்று பேசும் மக்களை, "அறிவு இல்சிறு மனத்து", "அன்னவரை" என்கிறார். அவர்களின் பித்தம் தெளிய வைப்போம் என்பதனை "கற்பிப்போம் யாமே" என் பது ஆழ்வார் பெருந்தகையின் உள்ள எழுச்சியை எடுத்துக் காட்டுகிறது. அறிவில் சிறுமனத்தாருடன் வாதிடுவது என்பது

இயலாத ஒன்று. ஆதலின், அவர்கள் சொல்லுகிறபடி சொல்லட்டும். குறுகிய மனத்தாருக்கு இந்தச் சித்தாந்தம் சிந்தையில் ஏறாது என்பதுபோல் "அன்னவரைக் கற்பிப்போம் யாமே" என்பது காண்க.

இப்பகுதியை நன்கு உணர்ந்து பொருள் கொள்ளல் வேண்டும். சாத்திரங்கள் கூறும் மோட்ச்சம் என்பது இல்லையென்றே ஆழ்வார் கூறிவிடுகிறார் என்பது போன்று அமைந்த பகுதி. ஆனால் உண்மை அதுவன்று. மோட்ச்சம் செல்வதற்கான வழி இன்னது என தெளிவுபடுத்துகிறார். இனிவரும் பகுதியில் மோட்ச்சத்தில் சென்று அனுபவிக்கும் இன்பங்கள் எத்தகையன என்பதை விளக்கிக் காட்டுகிறார். இவ்வுடல் இருப்பது உண்மை. இந்த உடலும் உள்ளமும் சேர்ந்து இறைவனைக் காணத் துடிக்கிறது. ஆக இவ்வுடல் நீங்கியபின் இறைவனைக் காண்பது ஒரு மாயை, ஆவி எல்லா இன்பங்களையும் மோட்ச்சத்தில் அனுபவிக்கிறது என்பதும் மாயை. சுவரை வைத்துத்தான் சித்திரம் எழுத வேண்டும். சுவர் இன்றி எங்கே சித்திரம் எழுதுவது என்பது கேள்வி. இந்தக் கேள்வியைத்தான் ஆழ்வார் பெருந்தகை ஈங்குடலும் விட்டெழுந்து எனும் ஐயத்தை எழுப்புகிறார். இந்த உடலால் இறைவனை அடைய முடியாவிடில் ஆவி சென்று அடைகிறது என்பது மாயை என்பதாகக் கூறிவிடுகிறார், இதுபற்றி விரிவான விளக்கம் உரையாசிரியரின் ஆய்வுரையில் முன்னமே கூறப்பட்டிருப்பதை மறுபடியும் காண்க.

முன்னநான் சொன்ன அறத்தின் வழிமுயன்ற
அன்னவர்தாங் கண்டீர்க ளாயிரக்கண் வானவர்கோன்
பொன்னகரம் புக்கமரர் போற்றி செப்பப்—

பொங்கொளிசேர்
கொன்னவிலுங் கோளரிமாத் தான்சுமந்த கோலஞ்சேர் 40

மனனிய சிங்கா சனத்தின்மேல்—வாணெடுங்கண்
கன்னியரா லிட்ட கவரிப் பொதியவிழ்ந்தாங்கு
இன்னி ளம்பூந் தென்ற லியங்க—மருங்கிருந்த
மின்னனைய நுண்மருங்குல் மெல்லியலார் வெண்முறுவல்
முன்னம் முகிழ்த்த முகிழ் நிலா வந்தரும்ப
அன்னவர்தம் மானோக்க முண்டாங் கணிமலர்சேர்
பொன்னியல் கற்பகத்தின் காடுடுத்தமாடெல்லாம்
மன்னிய மந்தாரம் பூத்தமதுத்திவலை
இன்னிசை வண்டமரும் சோலைவாய் மாலைசேர்
மன்னிய மாமயில்போல் கூந்தல்—மழைத்தடங்கண்
மின்னிடையாரோடும் விளையாடி வேண்டிடத்து
மன்னு மணித்தலத்து மாணிக்க மஞ்சரியின்
மின்னி னொளிசேர் பளிங்கு விளிம்படுத்த
மன்னும் பவளக்கால் செம்பொன்செய் மண்டபத்துள்
அன்ன நடைய வரம்பையர்தங் கைவளர்த்த
இன்னிசையாழ் பாடல்கேட் டின்புற் றிருவிசும்பில்
மன்னு மழைதவழும் வாணிலா நீண்மதிதோய்
மின்னி னொளிசேர் விசும்பூரும் மாளிகைமேல்
மன்னு மணிவிளக்கை மாட்டி—மழைக்கண்ணார்
பன்னு விசித்திரமாப் பாப்படுத்த பள்ளிமேல்
துன்னிய சாலேகஞ் சூழ்கதவந் தாள்திறப்ப
அன்ன முழக்க நெரிந்துக்க வாணீலச்
சின்ன நறுந்தாது சூடியோர் மந்தாரம்
துன்னு நறுமலரால் தோள்கொட்டிக் கற்பகத்தின்
மன்னு மலர்வாய் மணிவண்டு பின்தொடர
இன்னிளம் பூந்தென்றல் புகுந்தீங் கிளமுலைமேல்
நன்னறுஞ் சந்தனச்சே றுள்புலர்த்தத்—தாங்கருஞ்சீர்
மின்னிடைமேல் கைவைத் திருந்தேந் திளமுலைமேல்
பொன்னரும் பாரம் புலம்ப வகங்குழைந்தாங்கு
இன்ன வுருவி னிமையாத் தடங்கண்ணார்

அன்னவர்தம் மானோக்க முண்டாங் கணிமுறுவல்
இன்னமுதம் மாந்தி யிருப்பர்—இதுவன்றே
அன்ன வறத்தின் பயனாவ தொண்பொருளும்
அன்ன திறத்ததே யாதலால்—காமத்தின்
மன்னும் வழிமுறையே நிற்றுநாம்... 75

அ - ரை :- முன்னம் நான் சொன்ன - முதலாவதாக நான் சொன்ன. அறத்தின் வழி முயன்ற - அறநெறியினின் றும் பிறழாது நின்ற. அன்னவர்தம் - அறத்தின் வழி நின்ற வர்தாம். ஆயிரம் கண்வானவர் கோன் - இந்திரன். பொன்ன கரம் - தேவர் உலகு. புக்க - புகுந்து. அமரர் - தேவர்கள். போற்றி செப்ப - புகழ்ந்து பேச. துதி பாட. பொங்கொளி சேர் - பொங்கு ஒளி மிகுந்த. கொல் நவிலும் - கொல்லும் தொழில் செய்யும். கோள் அரிமா - வலிமை மிக்க சிங்கம். கோள் - வலிமை. கோலம் சேர் - அழகு சேர்க்கும். மன்னிய - பொருந்திய. சிங்க ஆசனம் - சிம்மாசனம். சிங்க உருதாங்கிய ஆசனம். வாள் நெடுங்கண் - வாள் போன்றும் நீண்டு பாயும் அகன்ற விழிகள். கன்னியரால் இட்ட - கன்னியரால் வீசப் பட்ட. கவரிபொதி அவிழ் ந்து - சவரியின் சட்டு அவிழ்ந்து பொதி - மூட்டை, கட்டு. ஒரு முகத்தல் அளவை. பொதிய விழ்தல் - மலர்தல். அரும்பு முறுக்கவிழ்தல். இன்இள பூ தென்றல் - இனிய இளமையான மலர் தென்றல். இயங்க - வீச. மருங்கு - அருகில். மின் அனையநுண் மருங்கு - மின்னல் போன்ற மெல்லிய இடை. மெல்லியலார் - மென்மையான பெண்டிர், இயல்பால் மென்மையானவர்கள். வெண்முறுவல் - புன்முறுவல், வெண்மையான பற்கள் சிந்தும் ஒளி. முன்னம் - முன்பு. முகிழ்த்த - தோற்றுவித்த. முகிழ்நிலா - அரும்பு நிலா. மூன்றாம் பிறைச் சந்திரன். வந்து அரும்ப - வந்து எட்டிப் பார்க்க. இளம்பிறை தோன்றிக் கொண்டிருக்க. அன்னவர்தம் - அத்தகைய மகளிரின். மான் நோக்கம் - மான் போலும் மருண்ட பார்வை. உண்டு - அந்தப் பார்வையை மகிழ்ந்து கண்டு. அணி மலர்சேர் - அழகிய, அலங்கார மலர் கள் சேர்ந்த நிறைந்துள்ள. பொன் இயல் - பொன் நிறமான

கற்பகத்தின் காடு - கற்பக மரங்களின் கூட்டம், கற்பக மரங்களால் அமைந்த காடு. மாடெல்லாம் - செல்வமனைத்தும். மாடு - செல்வம். மன்னிய - நிலைபெற்ற, பொருந்திய. மந்தாரம் - மந்தார மலர்கள். மதுதிவலை - மகரந்தத் துளி. தேன்துளி எனினுமாம். இன் இசை வண்டு - இசைபாடும் வண்டினம். அமரும் சோலை - தங்கியிருக்கும் சோலை. சோலைவாய் - சோலையில். மாலைசேர் - மலர் மாலையணிந்த. மாமயில் போல் கூந்தல் - மயில் தோகை விரித்தது போன்ற கூந்தல். மழைத் தடங் கண் - குளிர்ந்த அகன்ற விழிகள். மின் இடை - மின்னல் போன்று ஒளி வீசும் இடை. மகளிர் இடைக்கு ஆடவரைக் கவர்ந்திழுக்கும் ஆற்றல் உள்ளதால் மின் இடை என்றனர். மின் ஒளி போன்று கண்களைக் கூசச் செய்யும் இடை என்றவாறு. மின்னல் போன்ற நுண் இடை எனினுமாம். வேண்டித்து - வேண்டியபடி. தேவர் உலகம் ஆதலின் அங்கு இன்பம் துய்ப்பதில் தடையிருக்கக் கூடாது என்பதால் வேண்டித்து விளையாடி என்றனர். விரும்பியபடி அம்மகளிரை விரும்பிய இடங்களில் தொட்டும் அனுபவித்தும் விளையாடி. மன்னும் மணித்தலம் - இரத்தின மணிகள் பொதிந்த தலம். மாணிக்க மஞ்சரி - மாணிக்கங்கள் போன்ற மலர் கொத்துக்கள். மின்னின் ஒளி சேர் பளிங்கு விளிம்பு - மின்னி ஒளி சிந்தும் பளிங்குக் கற்களாலான விளிம்பு. திண்ணை ஓரங்களில் இவ்வாறு பளிங்குக் கற்கள் மின்னப் பதித்திருக்கின்றனர். மன்னும் பவளக்கால் - பவளங்கள் பதித்த தூண்கள். செம்பொன் செய்மண்டபம் - செம்பொன்னாலான மண்டபம். அரம்பையர் வளர்த்த - அரம்பையர்தம் கையால் மீட்டி. இசையாழ் பாடல் - இனிய இசையெழுப்பும் யாழின் இன்ப ஓசை. இரு விசும்பு - அகன்ற ஆகாயம். மன்னு மழை தவழும் - மழை மேகங்கள் வந்து பொதிந்து. வாள்நிலா - ஒளி வீசும் நிலா. நீள்மதி - மதியம், பூரணச்சந்திரன், தோய் - நிலவொளி தோய்ந்து இருக்க. மின்னின் ஒளி சேர் - மின்னலின் ஒளி ஒருங்கு சேர்ந்ததே போன்று ஒளியுடையதும். விசும்பு ஊரும் - ஆகாயத்தில் ஊர்ந்து செல்லும். மாளிகை - ஆகாய மாளிகை. இப்போதுள்ள ஆகாய

விமானம் போன்றது. மழை கண்ணார் - குளிர்ந்த அழகிய கண்ணினார். மன்னு மணி விளக்கு - என்றும் அணையாத மணிகள் பதித்த விளக்கு. விசித்திரம் - அதிசயம், பேரழகு. பாப்படுத்த - பரப்பப் பெற்ற, விரிக்கப் பெற்ற. பன்னு பள்ளி மேல் - போற்றப்பன்னும் படுக்கை, புகழ்ந்துரைக்கச் செய்யும் படுக்கை. துன்னிய - நெருக்கமான. சாலேகம் - சன்னல்கள். சூழ் - மூடிய. கதவம் - சன்னல் கதவுகள், சன்னல் மூடிய பலகைகள். தாள் திறப்ப - தாள்கள் தானாகத் திறந்து கொள்ள. இன் இள பூ தென்றல் - இனிய இளம் மலர்களினின் றும் வீசும் மென் காற்று, மெல்லிய பூங்காற்று. அன்னம் உழக்க - அன்னப் பறவைகள் உழல்வதால். நெரிந்து - மிதி பட்டு, நெரிந்து. உக்க - சிதைந்த, உளுத்துப்போன. வாள் நீலம் - ஒளி வீசும் நீலோர்ப்பன மலர்கள். நறு - மணம். சின்னதாது - சிறிய மகரந்தங்களை. சூடி - சூடிக்கொண்டு. மந்தாரம் - மந்தார மரத்தினின்றும். துன்னு - நெருங்கிய. நறுமலர் - மணம்கமழ் மலர். தோள்கொட்டி - தோள்களில் அலங்காரமாக அணிந்துகொண்டு, கற்பகத்தின் - கற்பக மரத்தின். மன்னும் மலர் - பொருந்திய மலர், மணிவண்டு - நீலமணி போன்ற அழகிய வண்டுகள். இளமுலை - அரும்பும் முலைகள். நல்நறு சந்தனச்சேறு - மணம் வீசும் நல்ல சந்த னக்குழம்பு. உள்புலர்த்த - முழுமையாக உலர்த்த. தாங்கருசீர் மின்னிடை - முலைகளின் பாரத்தைத் தாங்க முடியாத அழகிய சீர்மிகு மின்னல் கொடி போன்றும் மென்மையான இடை. கைவைத்து இருந்து - அந்த இடையின்மேல் கைகளை வைத்து இன்புற்றிருந்து. ஏந்திளமுலை - தளராத நிமிர்ந்து நிற்கும் இளமை மிக்க முலைகள். பொன் அரும்பு ஆரம் - பொன்னா லான காசுமாலை ஒலிக்கும்படி அவர்களின் இளமுலைகளின் இன்பம் துய்த்து நிற்க. ஆங்கு - அந்த நிலைகண்டு. அகம் - உள்ளம். குழைந்து - நெகிழ்ந்து. இன்ன உருவின் - இத்தகைய வடிவமைந்த. இமையா - கண்களை இமைக்காத தேவமாதர். தடம்கண்ணார் - அகன்ற விழிகளார். அன்னவர்தம் - அந்த தேவமாதர் தம். மான் நோக்கம் உண்டு - மானின் மருண்ட பார்வை போன்ற அவர்களின் விழிகள் சொல்லும் மொழியில்

மூழ்கி. ஆங்கு - அத்துடன். அணிமுறுவல் - முறுவல் அணி அவர்களின் புன்னகையே அணிகலனாக அமைய. இன் அமுதம் - புன்சிரிப்பு என்னும் இனிய அமுதத்தை அருந்தி. அன்ன - அத்தகையது. அறத்தின்பயன் - அறநெறியில் நிற்பதின் பயனாம். ஆவது - அடையப் போவது. இது அன்றே - இதுவேயாம். ஒண்பொருளும் - சிறந்த பொருள் தரும். மேலும் அன்னதிறத்ததே - இதுவேயாம். காமத்தின் - காம இன்பத்தின். மன்னும் வழி முறையே - பொருந்தும் வழியாகிய காம மார்க்கத்தில். நிற்றுநாம் - நாம் நின்றோம் மன்னுதல் - நிலைபெறுதல்.

வி - ரை :- முன்பு நான் சொன்ன, சிறிய திருமடலில் சொல்லியபடியும் அறத்தின் வழி நிலைபெற்று அறவழியில் நிற்றலுக்கான செயல்களையே செய்து, ஆயிரம் கண்களையுடைய வானவர்கட்கு அரசனான இந்திரன் உலகு சென்று, ஆங்கு வதியும் அமரர்களால் போற்றப் பெற்று, அதாவது அறத்தின் வழி நின்று தேவர் உலகை அடைந்ததும் தேவர்கள் வரவேற்பு உபசாரங்கள் செய்து, பொங்கும் ஒளி சிந்தும். கொல்லும் தொழிலையுடைய வலிமை மிக்க சிங்கம் சுமக்கும் அழகிய மிகவும் பொருத்தமான ஆசனத்தில் அமர வைத்து, அமர்ந்து கொண்டு வாள் போன்றும் கூரிய அகன்ற விழிகளையுடைய தேவமகளிர் கவரி வீசப்பெற்று, இனிய மலர் மணம் கமழும் தென்றல் காற்று வீச, அருகிலுள்ள மின்னல் போன்றும் இடையையுடைய தேவமகளிர் தங்கள் வெண்பற்களால் புன்முறுவல் பூக்க, இளம் பால்நிலா வானத்தில் தோன்ற, அந்த தேவமகளிரின் மான் நோக்கு கண்டு இன்புற்று, ஆங்கு அழகிய மலர்கள் நிறைந்த பொன் மயமான கற்பகத்தின் நிலைத்த பாரிஜாத மரங்களின் மலர்களின் மகரந்தத்தில் இனிய இசை பாடும் வண்டுகள் தங்கியிருக்க, மலர்களை அணிந்து தோகை விரித்தாடும் மயில் போன்ற கூந்தலையுடையதும் குளிர்ந்த அகன்ற விழிகளையுடைய மின் போன்றும் நுண்ணிய இடையையுடையவர்களாய் இருக்கும் அப்சரச

சி—6

மகளிரின் உடலின் இன்பமான இடங்களை ரசித்து இன்புற்று, பொருந்திய நவரத்தின மணிகள் பதிந்த இடங்களில் மாணிக்கம் போன்ற மலர் கொத்துக்களையுடையதும், மின்னல் போன்று ஒளி வீசும் பளிங்குக் கற்களால் விளிம்புகள் அமைக்கப் பெற்றதும், சிறந்த பவழங்களால் அமைக்கப்பெற்ற தூண்களையுடையதும், செம்பொன்னால் அமைக்கப்பட்ட மண்டபத்தில், அன்னநடையுடைய அப்சரச மாதர்களின் கைகளால் மீட்கப்பட்ட இனிய இசையையுடைய பாட்டை ஆனந்தமாகக் கேட்டும், பரந்த ஆகாயத்தில் பொருந்திய மேகக் கூட்டங்கள் வந்து தங்கியிருக்க, அழகிய பெரிய முழுமதி வந்து அமையப்பெற்று மின்னலின் ஒளி போன்ற ஒளியையுடைய ஆகாயத்தில் சஞ்சரிக்கும் விமானத்தில், மழை போன்றும் குளிர்ந்த கண்களையுடைய மாதர்கள் என்றும் அணையாத மணிகள் பதித்த விளக்குகளைத் தொங்க விட்டு மிகுந்த வியப்பைத் தரும் மிகுந்து பாராட்டத்தகும் படுக்கையின்மேல், நெருங்கிய சன்னல்களின் கதவுகள் திறந்துகொள்ள அப்பொழுது இனிய இளம் மலர்மேல் மிதந்து வந்த தென்றல் வந்து வீச அன்னப் பறவைகளின் கால்கள் பட்டு நெரிந்து துகளாய்ப்போன அழகிய நீலோர்ப்ப மலரின் மணம் மிகு சிறிய மகரந்தங்களைப் பூசிக்கொண்டு, சிறந்த மந்தார மரத்தின் மணம்மிகு மலர்கள் தோள்களை அலங்கரிக்க கர்ப்பக மரத்தின் மலர்களிலே நீலமணிகள் போன்ற அழகிய வண்டுகள் பின்தொடர இளமுலைகளின்மேல் பூசப்பட்ட நறுசந்தனச் சேற்றை நன்கு உலர்த்த, முலைகளின் பாரத்தால் தாங்க முடியாத அழகிய முன்னல் போன்ற இடைகளின்மீது கையை வைத்துக் கொண்டிருந்து, ஏந்தும் இளமுலைகளின்மேல் உள்ள காசுமாலைகள் ஒலிக்க அவற்றில் விளையாடி, அத்தகு இன்ப நுகர்ச்சியைக் கண்டு மனமுருகி, இத்தகைய உருவ அமைப்பையுடைய தேவ மாதர்களின் இமையாத பெருமை மிக்க கண்களையுடைய தேவ மகளிரின், மான் போன்று நோக்குதல் கண்டு அதனை அனுபவித்து, அதனுடனே, அழகிய புன்சிரிப்பு எனும் இனிய அமுதத்தை அருந்தியிருப்பார்கள். இதுவே முன்பு சொன்ன அறத்தின் வழி நிற்பவர்கள் இறந்தபின்

தேவர் உலகில் அடையும் பெறும்பேறு என்பதாம். சிறந்த பொருள் தரும் பேறும் இது போன்றதே. இப்படி அறம் பொருள் இவ்விரண்டின் பேறுகளுக்கும், காமமே பயனாகப் பெறப்படுவதால் இன்பம் எனும் காமமே, நிலைபெற்று நிற்கத் தக்க வழிமுறையாகும். நாம் அதன்படி காமத்தின் வழி நின்றோம்.

'முன்ன நான் சொன்ன'' என்றது சிறிய திருமடலில் முன்பு சொன்ன என்பதுவுமாம். ''அறத்தின் வழி முயன்ற', என்றது இரண்டாம் திருமடலின்

''தொன்னெறியை வேண்டுவோர் வீழ்கனியு மூழிலையும்
என்னு மிவையே நுகர்ந்துடலம் தாம்வருந்தி
துன்னு மிலைக் குரப்பைத் துஞ்சும் வெஞ்சுடரோன்
மன்னுமழல் நுகர்ந்தும் வண்தடத்தினுட் கிடந்தும்''

என்பதை நினைவூட்டுவதாம். ஆயிரக்கண் வானவர்கோன் இந்திரன். பொன்னகரம் என்பது தேவர் உலகு இந்திரன் ஆட்சிக்குட்பட்டது. அறத்தின் வழி முயன்று பொன்னகர் புகுந்தோர் அடையும் இன்பத்தை இப்பகுதியில் ஆழ்வாரவர்கள் அடுக்கடுக்காய்க் காண்பித்து மகிழ்கிறார். 'ஈங்குடலம் விட்டெழுந்து', 'வானவர் கோன் பொன்னகரம் புக்க, அமரர் போற்றி செப்ப' என்றது பொன்னகரில் நுழைந்ததும் அமரர் வரவேற்பு ஒலி எழுப்புவதாம். வரவேற்று ''பொங்கொளி சேர் கொல் நவிலும் கோள் அரிமா தான் சுமந்த கோலம் சேர் மன்னிய சிங்க ஆசனத்தின்மேல்'', அமர்த்தியவுடன், வாள் நெடுங்கண் கன்னியர் கவரி வீசுவர். அப்பொழுது இனிய தென்றல் வந்து வீசும். மின்னின் இடை மங்கையர் தம் வெண் பற்களின் புன்முறுவல் பூக்க, அப்பொழுது இளம் பிறைச் சந்திரன் தோன்ற, அழகிய மானின் பார்வையுடைய மகளிரின் நோக்கும். பொன் போன்ற கற்பக மரத்தினின் மகரந்தத்தை யுடைய மலர்களில் தங்கி இசைபாடும் வண்டுகள் நிறைந்த மலர் சோலைகளில் மலர்களையணிந்த மயில் தோகை போன் றும் கூந்தலையுடைய மகளிர் குளிர்ந்த அகன்ற விழிகளையும்,

மின்னல் போன்ற இடையையுடைய அம்மகளிரிடம் வேண்டிய இடத்து அனுபவித்து இருத்தல். "மின் இடையரோடும் வேண்டிடத்து விளையாடி" என்பது தடையின்றி வேண்டியபடி பெண் இன்பம் அனுபவித்து என்பதாம். இங்கு சிம்மாசனத்தில் அமர்ந்ததும் அழகிய பெண்டிர் கவரி வீசுவதும், இளம் தென்றலும் வண்டுகளின் இன்னிசையும் மழை தட கண்ணாருடன் வேண்டியபடி விளையாடிட இன்பமூட்ட அமைந்த. தாகும்.

அடுத்து ஒரு நிலை. இரத்தினங்கள்பதித்த மண்டபம் அதன் விளிம்புகள் பளிங்குக் கற்களால் அமையப் பெற்று மின்னல் போன்று மின்ன, மண்டபங்களின் தூண்கள் பவழங்களால் அமையப் பெற்றதும் செம்பொன்னால் அமைந்தது மான மண்டபம். அதனுள் அன்ன நடையுடைய தேவமகளிர் வீணையினின்றும் இனிய இசையெழுப்புகின்றனர். அந்த இனிய யாழின் இசை கேட்டு இன்புற்றிருக்க, ஆகாயத்தின் மேகங்கள் படியப் பெற்றிருக்க, நிலவு தவழ்ந்து வர, மின்னல் போன்ற ஒளியுடையதும், ஆகாயத்தில் ஊர்ந்து செல்வதுமான விமானத்தில், குளிர்ந்த கண்களையுடைய மகளிர், என்றும் அணையாத மணிகள் பதித்த விளக்குகளைத் தொங்க விட்டு, மிகவும் வியக்கத்தகு படுக்கையை விரித்து விட அத்தகு படுக்கையில் படுத்தவுடன், சன்னல்களின் கதவுகள் தானாகவே திறந்து கொள்ள, அவ்வழியே இனிய அன்னங்கள் மிதிப்பதனால் துகளாய்ப் போன அழகிய நீலோற்ப மலர்களின் மகரந்தத்தை சூடிக் கொண்டும், கற்பக மரத்தில் சுற்றித் திரியும் மணி வண்டுகள் ஏவலர் போன்று பின் தொடரத் தென்றல் புகுந்தது. புகுந்த தென்றல் இளமுலைகளின் மேல் பூசப்பட்ட நன்மணமுடைய சந்தனச் சேற்றை உலர்த்த, முலைகளின் பாரத்தைத் தாங்க முடியாத அழகிய மின்னல் போன்ற தேவ மகளிரின் இடைகளின்மேல் கைவைத்து இன்புற்றிருந்து, முலையின்பம் அனுபவித்தலால் முலைகளின்மேல் அணிந்திருந்த காசுமாலைகள் ஒலிக்க அந்த இன்பத்தைக் கொடுக்கும்

அகன்ற விழிகளால் தேவ மகளிரின் மான் போன்ற நோக்கைக் கண்டு அழகிய புன்சிரிப்பை உதிர்க்க இனிய அமிர்தமென அம்மகளிர் தரும் இன்பத்தை அனுபவித்திருப்பர்.

திருமங்கையாழ்வாரவர்கள் பொன்னகர் இன்பத்தை இரு அடுக்காக அடுக்கியிருத்தல் காண்க. மன்னிய சிம்மாசனத்த மர்ந்ததும் பெரும் இன்பம் செம்பொன் செய் மண்டபத்துள் அமைந்த இன்பம். இவ்விரு அடுக்குகளிலும் அடையும் இன் பம் "அன்ன அறத்தின் பயன் ஆவது இது அன்றே" என் கிறார். அறத்தின் வழி முயன்றார் "காரார் புரவியேழ் பூண்ட தனியாழித் தேரார் நிறைகதிரோன் மண்டபத்தைக் கீண்டுபுக்கு" அடையும் இன்பம் இதுவே.

அடுத்து திசைமுகன் படைத்த நான் மறைகள் கூறும் அறம் பொருள் இன்பம் வீடு எனும் நான்கினுள் பொருள் தரும் இன்பமும் இதுவே என்பதனை "ஒண்பொருளும் அன்ன திறத்ததே" என்று கூறிவிடுகிறார். பொருளீட்டுவாரும் பொன் னகர் சென்றிடத் தாம் ஈன்ற பொருளை, ஏழைகட்கு ஈந்து தருமத்தைச் சம்பாதித்துக் கொள்வர். அவ்வாறு அறத்தையே நாடியவராய் அவர்கள் அடையும் இன்பமும் இதுவே.

ஆதலால் காமத்தின் மன்னும் வழி முறையே நிற்றும் நாம் என்றனர். தேவர் உலகில் சென்று அடையும் இன் பத்தை இவ்வுடலை நீத்து அடையும் இன்பத்தை இவ்வுடலா லேயே அடைந்திடுவதென்று நாம் தீர்க்கமாகக் கண்டு அதன் படி நின்றோம் யாம் என்கிறார். "அன்ன அறத்தின் பயனாவ தும், ஒண்பொருளும் அன்னதிறத்ததே." ஆதலால், "காமத் தின் மன்னும் வழி முறையே நிற்றுநாம்" என்பதனை நன்கு ஆய்ந்து மனதை ஊன்றிக் காண்க.

உலகில் உயிரினங்கள் வாழ்வது, உயிரினங்கள் நிலைத் திருப்பது தழைத்தோங்குவது காமத்தால் மட்டுமே. காமமே படைப்பதும் காப்பதும் அழிப்பதுமானது. காமம் இன்றேல் உயிரினங்கள் இல்லை. உயிர் வாழ்தல் இல்லை, உயர்ந்

தோங்குவதில்லை. காமம் அழிந்திடில் உலகம் அழிந்துவிடும், உயிர்கள் அற்ற உலகமாகிவிடும். அன்புக்கும், அறத்துக்கும், பொருளுக்கும் காமம் அடிப்படை.

"சேமநல்வீடும் பொருளும் தருமமும் சீரியநற்
காமமு மென்றிலை நான்கென்பர் நான்கினும் கண்ணனுக்கே
ஆமதுகாமம் அறம்பொருள் வீடிதற்கென்று ரைத்தான்
வாமனன்சீலன் இராமானுசன் இந்தமண் மிசையே"

என்று இராமானுச நூற்றந்தாதியில் வருவதும் காண்க.

திருமங்கையாழ்வாரின் திருவுள்ளம் என்ன உணர்த்து கிறது என்பதனை சிறிய திருமடலில் காண இயலாதது போன்று இருப்பது இங்கு நோக்குக.

"ஏரார் முயல்விட்டுக் காக்கை பின்போவதே" என்று கூறி விட்டு, "ஏராரிள முலையீர் என்றனக் குற்றதுதான்" என்று தனக்கு ஏற்பட்ட ஓர் அனுபவத்தைக் கூறிச் செல்லும் மன்னர் பிரான் தன் உள்ளத்தைத் தெளிவுபடுத்தாது இரண்டாம் திருமடலில் இப்பகுதியில் தெளிவுபடுத்தியிருத்தல் காண்க. இதன் காரணமாகவே சிறிய திருமடல், பெரிய திருமடல் இவ் விரண்டினையும் ஒரே செய்யுளாகக் கொண்டு பொருள் கொள் வதே தெளிவைக் கொடுக்கும் என்பதனை உணர வேண்டும்.

இப்பகுதியில் வேறு சில சுவையான செய்திகளையும் காண்போம். "பொன்னகரம் புக்கமரர் போற்றி செப்ப, பொங்கொளிசேர் கொன்னவிலுங் கோளரிமா தான்சுமந்த" என்ற சிம்மாசனத்தின் தோற்றத்தை உண்மையிலேயே உயி ருள்ள சிங்கம் ஒன்று சுமந்து நிற்பது போன்ற காட்சியை நம் கண்முன் வைக்கிறார். தோழியர் சாமரம் வீசுவதை, "கவரி பொதி அவிழ்ந்து" எனகிறார். பொதி என்பது ஒரு பெரும் மூட்டையைக் குறிக்கும். கவரி அவ்வளவு பொதிந்த மயிர் கொண்ட சாமரம் என்பதாம். சாமரம் வீசும் பொழுது கவரி பொதி அவிழ்ந்து விழுவது போன்று காட்சியளிப்பதாகக்

கூறுவது சிறப்பு. பொன்னகரின் செல்வச் சிறப்பை வலியுறுத்த "பொன்னியல் கற்பகத்தின் காடுடுத்த மாடெல்லாம்" என்கிறார். கேட்டதெல்லாம் கொடுக்கும் கற்பகமரம் ஒன்றிருந்தாலே போதும். ஆனால், இங்கு கற்பகக்காடு என்கிறார், காடுடுத்த மாடெல்லாம் என்று செல்வத்திற்கு மாடு உபமானமாகிறது என்று எண்ணிவிட வேண்டாம். மாடு என்றாலே செல்வம் என்பதே பொருள். ஒரு காலத்து எவ்வளவு மாடுகள் ஒருவன் வைத்திருந்தானோ அவ்வளவு பெருஞ் செல்வந்தன் என்பது பொருள். பொன்னகரில் செம்பொன் மண்டபம். அதில் மாணிக்க மயமான மலர்க் கொத்துக்கள் இருப்பதை, "மாணிக்க மஞ்சரி" எனும் வடசொல்லைக் கையாண்டு தெளிவுபடக் கூறுகிறார். மண்டபம் வடசொல். விளிம்புகளில் அழகு சேர்ப்பது வழக்கு. "மின்னி னொளிசேர் பளிங்கு விளிம்படுத்த" என்கிறார். மண்டபத்தின் தூண்கள் பவளத்தால் ஆனவை என்பதனை, "பவளக்கால்" என்கிறார். பவளம் என்பது ப்ரவாளம் எனும் வடசொல்லின் திரிபு. இன்றுள்ள ஆகாய விமானம் போன்று "விசும்பு ஊரும் மாளிகை"யில் இன்பம் துய்த்த செய்தியும் வந்திருத்தல் காண்க. அரசர்கள் மலைகளின்மேல் கோட்டைகள் அமைத்து அங்கு பாதுகாப்புக்காக வாழ்வர். அத்தகு மாளிகைகளும் விமானம் என அழைக்கப்பட்டு வந்தது. சன்னல்களுக்கு சாலேகம் என்ற சொல் பயன்படுத்தியிருத்தலும் நோக்கத்தக்கது. ஜாலகம் என்ற வடசொல்லின் திரிபு. சாலேகம் என்பது "பலகணி" எனவும் பொருள்படும். பூந்தென்றல் நீலோற்பலத்தின் மண்மிகு தாது சூடியும், மந்தார மரத்தின் மலர்களைத் தோள்களில் அலங்கரித்து நுழைவதுபோல் கூறியிருத்தலும் சிறப்பு. தேவமகளிர்தம் முலைகளின்மேல் பூசப்பட்டிருந்த சந்தனச் சேற்றை இளந்தென்றல் உலர்த்துகிறது என்பதனை, "சேறுஉள் புலர்த்த" எனக் கூறியிருத்தல் காண்க. தேவர்கள் கண் இமையார் என்பதனை இங்கு "இமையா தடங்கண்ணார்" என்றனர். இன்பம் அனுபவித்திருப்பதை "மாந்தி இருப்பர்" என்றனர் மாந்துதல் உட்கொள்ளுதல். "காமத்தின் மன்னும் வழிமுறையே நிற்றும் நாம்" என்று தனது உறுதிப்பாட்டை

வெளிப்படுத்தியிருப்பது "நிற்றும் நாம்" என்பதால் புலப் படும். இக்கூற்றை ஏற்பவர் ஏற்கட்டும், புழுதி வாரித் தூற்று பவர் தூற்றட்டும். நம் வழி இதுவே என்றுதான் கொண் டுள்ள கொள்கையில் உறுதியுடன் நிற்றலை உணர்த்து துமாகும். "ஆதலால் காமத்தின் மன்னும் வழிமுறையே" என்றது வைணவத்தின் வழிமுறை என்பதுவுமாம். இந்த சித்தாந்தம் அதாவது காமத்தின் வழிமுறையே நிற்றல் வேறு எந்தச் சமயத்திலும் காண இயலாத ஒன்றாகும். இதுவே வைணவம் மற்று எல்லா சமயத்திலும் தனித்து இயங்கும் ஒரு மதம் என்பதை எடுத்துக்காட்டுவதாய் அமைந்த ஒரு பகுதி யாகும் என்பதை இந்நூலை நன்கு கற்றோர் உணருவர் என்பது திண்ணம்.

... ... ... ... ... ... ...மானோக்கின்
அன்ன நடையா ரலரேச ஆடவர்மேல்
மன்னு மடலூரா ரென்பதோர் வாசகமும்
தென்னுரையிற் கேட்டறிவ துண்டதனை யாந்தெளியோம்
மன்னும் வடநெறியே வேண்டினோம்... 79

அ - ரை :- மானோக்கின் - மான் போன்ற மருண்ட பார்வையுடையவர். அன்னநடையார் - அன்னம் போன்ற அழகு நடை மகளிர். அலர் ஏச - பலரும் ஏச. பலரும் பழித்துப் பேச. அலர் - பலர் கூறும் சொல். ஏச - பழித்துச் சொல்ல. ஆடவர் மேல் - ஆடவரை மனதில் கொண்டு, ஆட வர்மேல் காதல் கொண்டு. மன்னும் மடலூரார் - விரும்பி மடலூர மாட்டார்கள். என்பதோர் - என்று சொல்லப்படுவ தாகிய. ஒரு வாசகம் - எழுதி வைக்கப்பட்ட ஒரு சொல். தென் உரை - தென் மொழியாம் தமிழ் மொழியில். கேட்டு அறிவது- கேள்விப்பட்டதுண்டு. தெளியோம் - அதுபற்றி தெளிவாக அறியோம். தெளிவாகறிந்து கொள்ளும் எண்ணம் இல்லை. மன்னும் - இதில் சிறந்த. வடநெறியே - வடவர்கள் கடை பிடிக்கும் வாழ்க்கை நெறியையே. வேண்டினோம் - வேண்டி அதன்படி நிற்க விரும்பினோம்,

வி - ரை :- மானின் மருண்ட பார்வையும், அன்னத்தின் நடையழகுடைய மகளிர் பழித்துத் தூற்றும்படி ஆடவரை விரும்பி, அவர்களை மனதில் ஏற்று அவருக்காக மடலூரு வேன் என்று மங்கையர்கள் கூறக் கூடாதென்னும் சொல் தென்னகத்து முதன்மொழியாம் தமிழில் கூறக் கேட்டிருக் கிறோம். அவ்வாறு கூறப்பட்டிருப்பதை நாம் தெளிவுடைய தாக ஏற்பதற்கில்லை. ஆதலின் வடமொழியாம் சமஸ்கிருத நூல்களில் கூறப்பட்டிருக்கும் வழிமுறையையே கைப்பற்று வோம்.

தென் உரையில் கூறப்பட்டுள்ள களவொழுக்கம் என்பது, தான் காதலிக்கும் பெண்ணைத் திருமணம் செய்திட விழைந் திடும் ஆடவன் தன் காதலியின் பெற்றோரிடம் கேட்டும், பெற்றோர் மறுத்து விடுவாராயின் அப்பொழுது மடல் ஏறப் போவதாகக் காதலன் கூறுவான். மடல் என்பது பற்றி சிறிய திருமடலில் கூறப்பட்டுள்ளதாதலின் அதுபற்றி மீண்டும் இங்கு விரித்தற்கில்லை. பெற்றோர் இசைந்து வராத நிலை யில் காதலியின் தோழியின் ஒத்துழைப்பு கிட்டாத நிலை யிலும் காதலன் மடலேறுவதாக அச்சுறுத்தி வருவானேயன்றி உடன் மடலேறி விடகூக்டாது என்பதும் தென்னகத்துத் தேன் மொழியாம் தமிழ் கூறும் களவொழுக்க நெறியாகும்.

"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை...

எனத் தொல்காப்பியம் காட்டுவது ஐந்திணை ஒழுக்கம், இதில்

......"தோழி
நீக்கலின் ஆகிய நிலைமையும் நோக்கி
மடல்-மா கூறும் இடனுமா உண்டே"

என்பது, காதலன் மடலேறுதல் பற்றிக் கூறித் திரியலாமே யொழிய மடலேறிவிடக் கூடாது. மடலேறி விட்டால் அது பெருந்திணையாகும்.

"ஏறிய மடல் திறம், இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதியும்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇ
செப்பிய நான்கும்-பெருந்திணைக் குறிப்பே"

என்று தொல்காப்பியம் பொருள் அதிகாரம் அகத்திணை இயல் குறிப்பிடுவதும் காண்க. முன்பு கூறிய இரு எடுத்துக் காட்டுகளும் இதே அதிகாரம் களவு இயல் காட்சிகள்.

இவ்வாறு தமிழர் தமது காதல் நெறியை வகுத்து விட்டனர்.

"கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்கதில்"

என்பது வள்ளுவம். மடலேறுதலை ஆடவர்கட்கே உரித்த தாக்கியது போன்று,

"காம முழந்து வருந்தினார்க்கே
மடலல்ல தில்லை வலி"

என்று வலியுறுத்திக் கூறுவதும் வள்ளுவமே. இது ஆண்பாற் காமத்தைப் பற்றியது.

இவ்வாறு மடலேறும் உரிமையை ஆடவர்கட்கு மட்டும் வழங்கிவிட்டுப் பெண்டிர்க்கு அது மறுக்கப்படுவதால் அதனை நாம் தெளிவுடையதாகக் கருத மாட்டோம். தமிழர்கள் வகுத்த நெறி அப்படியே இருக்கட்டும். அதனை மாற்றும் நோக்கமும் நமக்கில்லை. நம் எண்ணத்திற்கேற்ப வடநெறி ஏற்புடையதாக விளங்குகிறது.

"கண்ணொடு கண்ணினை கவ்வி யொன்றை யொன்
றுண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
அண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள்"

இது சீதாபிராட்டியார் இராமபிரான் இருவர் கட்டுண்ட காட்சியை கம்பன் தன் கற்பனைக் காமிராவில் பிடித்து நமக்

குக் கட்டுவான். இது வடநெறிக்கு ஓர் எடுத்துக்காட்டு என லாம். இராமபிரான் நோக்கும்பொழுது நிலம் நோக்கா சீதையை இங்கு காண்பிக்கிறார். இதற்கான விளக்கம் உரை யாசிரியரின் நறுந்தொகை விருந்து பெண்டிர்க்கழகு பகுதி கற் றோர் நன்குணர்வர். ஆனால் இந்த இடத்திற்கு இங்கு கூறப் பட்டுள்ள விளக்கமே பொருந்தும்.

மகாபாரதத்தின் ஆதிபருவத்தில் விதவையான மருமகளிர் அம்பிகை அம்பாலிகை இருவரையும் தன் தலைப்புதல்வன் வியாச முனியைக் கூடி மகப்பேறு பெற்றுத் தர வேண்டிய மச்சகந்தி பரிமள கந்தியாகப் பராசரனைக் கூடிய செய்தியை, வில்லிப்புத்தூரார் ஒரே செய்யுளில் அள்ளித் தருகிறார்.

"பரிதி தந்த மாந்தி மருங்கொரு பகற்பராசரன் மகப்பேறு
கருதிவந்து கண்டென்னையுமெனது மெய்க்கமழ் புலவை
யுமாற்றிச்
சுருதி வாய்மையின்யோசனை பரப்பெழு சுகந்த முமென்க்
கீந்து
வருதி நீயெனப் பணியினான் மறைத்தொரு வண்டுறைக்
குறை சேர்ந்தான்"

இது போன்று மடவர் ஆடவர்பால் காமுற்று இன்பம் நுகர்ந்த செய்திகள் மலிந்துகிடப்பதால்"வடநெறியே வேண்டி னோம்" என்றனர்.

மடலூர்தல், மடலேறுதல் என்பது தமிழகத்துக்கே சிறப் பானதொரு வாழ்க்கை நெறியாகும். ஆழ்வார் திருவுள்ளம் வடநெறியே வேண்டினோமென்றாலும் வடநெறியில் மட லேறுதல் என்பது இல்லாத ஒன்று. என்றாலும் ஆழ்வார் திரு வுள்ளம் வடநெறியை வேண்டியதின் காரணம் யாது எனின் பெண்மை ஆண்மையின்பாற் கொண்டுள்ள பற்று காரண மாகவே எழுந்ததாகும். ஆண்மையில் கலந்து விடத் துடிக்கும் பெண்மையை இங்கு ஆழ்வார் ஆன்மா எம்பெருமானிடம் கலந்து விடத் துடிப்பதையே இங்கு காட்டுகிறார். ஆண்மை பெண்மையிடம் சேர்ந்திடத் துடிக்கிறது என்பதும் உண்மை,

ஆனால் பெண்மை தன் இயல்பான அச்சம், நாணம், மடம் இவற்றால் ஆண்மையில் கலந்திடத் துடிக்கும் துடிப்பு, எத்தகையதென்று சொல்லுதற்கரிது. பெண்மையின் உணர்வுகளை ஒரு பெண்ணால் மட்டுமே உணர முடியும். ஆதலின் இறைவனை ஆணாகவும் அவனைச் சேர்ந்திடத் துடிக்கும் பெண்ணாகவும் தங்களைப் பாவித்து ஆழ்வார்கள் எம்பெருமானை இவ்வுடலுடன் சேர்ந்திடத் துடிக்கும் நிலையை உலகுக்கு உணர்த்த எழுந்தவையே ஆழ்வார்கள் அருளிய பிரபந்தங்கள். திருமடல் இரண்டும் ஆழ்வார்களின் இத்தகு இன்பத்தவிப்பின் எல்லையை உணர்த்தப் படைக்கப்பட்டவையாகும். பெண்ணே தன் ஆசையைப் பேசுதல் உண்டோ என்பது தென்நெறி. பெண்ணும் தன் ஆசையைப் பேசும் என்பது வடநெறி. ஆதலின் "வடநெறியே வேண்டினோம்"என்றனர் என்பதாம்.

... ... ... ... ... ... ...வேண்டாதார்
தென்னன் பொதியில் செழுஞ்சந்த னக்குழம்பின்
அன்னதோர் தன்மை யறியாதார்—ஆயன்வேய்
இன்னிசை யோசைக் கிரங்காதார் மால்விடையின்
மன்னு மணிபுலம்ப வாடாதார—பெண்ணைமேல்
பின்னுமவ் வன்றில் பெடைவாய்ச் சிறுகுரலுக்கு
உன்னி யுடலுருகி நையாதார்—உம்பர்வாய்த்
துன்னு மதியுகத்த தூநிலா நீணெருப்பில்
தம்முடலம் வேவத் தளராதார்—காமவேள்
மன்னுஞ் சிலைவாய் மலர்வாளி கோத்தெய்யப்
பொன்னெடு வீதி புகாதார்—தம்பூவணைமேல்
சின்ன மலர்க்குழலு மல்குலு மென்முலையும்
இன்னிள வாடை தடவத்தாங் கண்டுயிலும்
பொன்னனையார் பின்னுந் திருவுறுக...

அ - ரை :- வேண்டாதார் - வடநெறியை வேண்டாதார். தென்னன்பொதி - தென்நாட்டிலுள்ள பொதியமலை,

செழுஞ் சந்தனக்குழம்பு - செழுமையாக வளர்ந்த சந்தன மரத்தினின்றும் உண்டாக்கப்பட்ட மணம் கமழ் குழம்பு, சந்தனச் சேறு, அன்னது ஓர் தன்மை - சந்தனக் குழம்பின் தனித் தன்மையை. ஆயன் - இடையர். வேய் - மூங்கில், மூங்கிலால் அமைந்த புல்லாங்குழல். இரங்காதார் - மயங்காதார். மால் விடை - மோகம் கொண்ட காளை, மன்னும்மணி - அணியப் பெற்ற மணி, கழுத்தில் அணியப்பெற்ற மணி. புலம்ப - ஒலிக்க. வாடாதார் - நெகிழாதார். பெண்ணைமேல் - பனை மரத்தின்மேல். பின்னும் - ஆணும் பெண்ணும் ஒன்றை யொன்று அலகால் கோத்துக்கொண்டு. அவ் அன்றில் - அந்த அன்றில் பறவை. பெடை - பெண். வாய்சிறுகுரல் - வாயி லிருந்து எழுந்து தவழ்ந்தோடும் அதன் குரல் ஓசை. உன்னி - தன் தலைவன் நினைவாக அதன் ஒலியை ஊன்றிக் கவனித்து உடல் உருகி - உடல் மெழுகென உருகுவதுபோல் சிதைந்து. நையாதார் - நைந்து போகாதார். உம்பர்வாய் - ஆகாயத்தில். துன்னுமதி - பொருந்திய சந்திரன். உகுத்த - உதிர்ந்த பொழிந்த, பெய்த. தூநிலா - பால்நிலா. நீள்நெருப்பு - முடியாத சந்திரனின் ஒளி பொழியும் தீ. தம் உடலம் - தம் உடலும். வேவ - வெந்து போக. தளராதார் - தளர்ந்து போகாதார், காமவேள் - மன்மதன். சிலைவாய் - வில்லி னின்றும். மலர்வாளி - மலர் அம்பு. கோத்து - தொடுத்து. எய்ய - அம்பைச் செலுத்த. பொன் நெடுவீதி - அழகிய பெரிய வீதி. புகாதார் - புறப்படாதார். எவரோ - யார் இருக்கிறார்கள். பூவணை - மலர் படுக்கை. சின்னமலர் குழல் - மகரந்தம் நிறைந்த மலர்களணிந்த கூந்தல். அல்குல் - பெண் உறுப்பு. மெல்முலை - மென்மையான முலைகள். இன்இளவாடை - இனிய மென்மையான வாடைக் காற்று. தடவ - வந்து மெல்ல உடலின்மேல் தடவித் தவழ. துயிலும் - தூங்கும். பொன் அனையார் - பொன் போன்ற பெண்டிர். பின்னும் - மேலும். திருஉறுக - அழகு மேலிட்டு விளங்க உறுதல் - அதிகமாதல்.

வி - ரை :- வடநெறியை வேண்டாதவர்கள், அதாவது நாம் வடநெறியே வேண்டினோம். அத்தகு வடநெறியினை விரும்பாதவர்கள் எப்பேர்ப்பட்டவர்கள் எனின், அவர்கள், தென்னன் பாண்டியனது நாட்டிலுள்ள பொதியமலையில் விளைகின்ற சந்தனத்தின் குழம்பின் தன்மை அறியாதவர்கள்' ஆயர்களின் புல்லாங்குழலின் ஓசை அறியாதவர்கள், பசுவினைப் பின்தொடரும் காளையின் கழுத்தில் கட்டியிருக்கும் மணியின் ஓசைக்கிரங்காதவர்கள், பனைமரத்தின் மேல் அமர்ந்து கொண்டு ஆண் பறவையுடன் தன் அலகைக் கோர்த்துக்கொண்டு அன்றில் பறவை எழுப்பும் ஒலியைக் கேட்டும காதல் வயப்பட்டவர்கள் உள்ளமும் உடலும் கரைந்து நையாதவர்கள், சந்திரன் பொழியும் நெருப்பொளியில் வெந்து தளராதவர்கள், மன்மதன் மலர் அம்புகளைத் தொடுத்து எய்த போதிலும் பெரிய வீதிகளிலே மடலூர்வதற்குப் புறப்படாதவர்கள், தம் மலர் படுக்கையில், மலர் அணிந்த கூந்தலையும், அல்குலையும், மென்முலையையும் இனிய வாடைக் காற்று வந்து தடவ தூங்கும் மகளிர் மென்மேலும் உடல் அழகு மேலிட்டு விளங்கட்டும்.

தென்னன் பொதியில் விளைந்த சந்தனமும் இடையரின் புல்லாங்குழல் ஓசையும், காளை மாடுகள் கழுத்தில் கட்டப்பட்ட மணியின் ஓசையும் பனைமரத்தில் வாழும் அன்றில் பறவைகளின் ஒலியும், பௌர்ணமிச் சந்திரன் ஒளியும், தலைவனைப் பிரிந்தாரை வாட்டுவதாதலின், வடநெறியை வேண்டாதார் இவற்றிற்கு இரங்காதார் என்றனர். சந்தனம் நெருப்பெனச் சுடும். ஆயன் ஓசை காதில் பாய்ந்து சுடும். பசுவைப் பின்தொடரும் காளையின் கழுத்தில் அணிந்துள்ள மணியின் ஓசையைக்கொண்டே அது பசுவைப் புணர்கிறது என்பதைத் தெரிந்துகொள்ள முடியுமாதலின் அந்த ஓசையும் தீயெனக் காதில் பாயும், அன்றில் பறவைகள் காதல் செய்யும்பொழுது எழுப்பும் ஒலி நன்கு புலப்படுமாதலின் அதன் ஒலியும் தீயாய் காதில் பாயும். பௌர்ணமி நிலவு பொழியும் ஒளிக் கதிர்கள் காதலரைச் சுட்டுப் பொசுக்கும். வடநெறியை வேண்டாத

வர்கட்கு இவற்றிற்கு இரங்காதார் என்பதாம். அப்படி இருக்க முடியாது என்றபடி. இவர்களே மன்மதன் மலர் அம்புகளைத் தொடுத்து எய்தும் மடலூர்தலுக்கு பெரிய வீதிகளில் புறப் படாதார், இத்தகு மாதர்கள் தம் மலர் படுக்கையில் மலர் அணிந்த கூந்தலையும், மென்மையான முலையையும் மென்மை யான வாடை வந்து தடவக் கண் துயில்பவர்கள். அவர்கள் அழகு மென்மேலும் வளரட்டும்." இத்தகு மாதர்களின் அழகு வளர்ந்து யாது பயன் என்றபடி,

"தென்னன் பொதியில்" என்றதில் பொதியில் என்றது பொதியமலையைக் குறிப்பதாகும். ஆயன்வேய் என்றது ஆயன்வேய் குழலை உணர்த்துவதாம். இடையர் மாடு மேய்க்கையில் தம் மாட்டு மந்தையை ஒரு கட்டுக்குள் வைத் திருக்கக் குழல் ஊதுவர். மாடுகள் அந்தக் குழல் ஓசைக்குக் கட்டுப்பட்டு இருக்கும். அவ்வாறு ஆயர் ஊதும் குழலின் ஓசை கணவரைப் பிரிந்தார்க்கு இடியெனக் கேட்கும். மால் விடையின் மணி ஓசைபற்றி மேலே சற்று விளக்கினோம். காளையின் கழுத்தில் அமைந்த மணியின் ஓசை அது பசுவைத் தொடரும் பொழுதும், அதனுடன் புணரும் பொழுதும் ஓசை வேறுபட்டு ஒலிக்கும். அத்தகு வேறுபட்ட ஓசை கேட்டு மகளிர் மயங்குவர். ஆதலின், "மன்னும் மணிபுலம்ப வாடா தார்" என்றனர். இங்கு "வாடாதார்" எனும் சொல்லைப் பயன்படுத்துதல் காண்க. பறவைகள் தங்கள் அலகால் ஒன்றையொன்று கவ்விக் கிடக்கும். அப்பொழுது எழும் ஒலி கேட்போரை மயக்கும். "பெண்ணைமேல் பின்னும் அல் அன்றில்" என்றனர்.

"முன்றில் பெண்ணைமேல் முளரிக்கூட் டகத்து
அன்றிலின்குரல் அடரும் என்னையே"

என்று பெரிய திருமொழியில் வருவதும் காண்க.

அதன், "சிறு குரலுக்கு, "உன்னி" என்றது உள் நோக்கம் கண்டு உணர்ந்து என்பதாம். அதன் குரல் ஒலியிலேயே அவை அடையும் இன்பத்தையும், அத்தகு இன்பம் தனக்குக் கிட்டா

மையை உணர்த்தவே "உன்னி" என்றனர். அவ்வாறு நினைக்கும்பொழுது உடல் உருகுவதும் நைந்து போவதும் இயல்பு என்பதால் "உடலுருகி நையாதார்" என்றனர். வானில் மிதக்கும் சந்திரனை "உம்பர்வாய் துன்னுமதி" என்றனர். நிலவு காய்ச்சுவது இரவு முழுதும் நீண்டிருக்குமாதலின் "நிலா நீள் நெருப்பில்" என்றனர். இவையனைத்துக்கும் தப்பித்தாலும் காமன் மலரம்புக்குத் தப்புதல் என்பது இல்லையாதலின், "காமவேள் சிலைவாய் மன்னும் மலர்வாளி கோத்து எய்ய பொன்னெடு வீதி புகாதார்" என்றனர். பெண் ஒருவள் வடநெறியை வேண்டாம் என்று சொன்னால் அது ஏற்பதற்கில்லை என்று உணர்த்தவே இவ்வாறு ஆழ்வார் கூறினார் என்க. காமம் ஆணைவிட அதிகமாகப் பெண்ணைக் காய்ச்சுகிறது என்பதாம்.

"கண்ணீர்கள் முலைக்குவட்டில் துளிசோரச் சோர்வேனை
பெண்ணீர்மை யீடழிக்கும்..."
என்பது நாச்சியார் வாக்கு

இங்கு பெரிய திருமொழியின்,

"காவார் மடல்பெண்ணை அன்றிலரி குரலும்
ஏவாயினூ டியங்கும் எஃகின் கொடிதாலோ!
என்ற பாசுரமும்,

"கனியாரி டிகுரலின் கார்மணியின் நாவாடல்
தினையெனும் நில்லாது தீயிற்கொடி தாலோ'!
என்ற பாசுரமும் நினைவு கொள்க.

"பூவணைமேல்'! என்றது மலர் படுக்கை. மலர் தூவப்பட்ட படுக்கை. மலர்க்குழல் என்றது மலர்களணிந்த கூந்தல். சின்னமலர் என்றது மகரந்தத் துகள்கள் நிறைந்த மலர் என்பதாம். வாடைக்காற்று மலர் குழலையும் அல்குலையும் மென்முலையையும் தடவிச் செல்கின்றது என்றதால் உணர்வற்றிருந்தாள் என்பதுவுமாம். உணர்வற்றவளாதலின் அவள் அழகு வளரும். ஆனால், பயனற்றதென்பதை உணர்த்த "பின்னுந்திரு உறுக" என்றனர். மேலும் வளர்க என்றபடி. அல்குலையும் மென்முலையையும் வாடை தடவிச் சென்றதெனில் அவள் ஆடையின்றி கண்துயின்றாள் எனினுமாம்.

இது அவள் உணர்வற்ற நிலையின் எல்லையைச் சுட்டுவதாய் அமைந்த சொல். உணர்வற்ற ஒரு பெண்ணுக்கு வடநெறி பயனற்றது என்பதுமாம்.

"பொன்னனையார்" என்றது பொன் போன்ற மகளிர் பொன் தீயிலிடப்பட்ட பொழுது மேலும் பொலிவுற்று விளங்கும். அதுபோன்று பெண் காமத்தீயில் மூழ்கி வெளி வரும் பொழுது பொலிவுற்று விளங்குவாள். காம இன்பம் சுவைக்காத பெண் நோயுற்று அழிவாள். காம இன்பம் அழகையூட்டும். அறிவை வளர்க்கும். ஒருவனைப் பேரறிஞனாக்கும். மனத்தெளிவையூட்டும். இங்கு காமம் என்றது உண்மையான காதல் மயக்கம் கொண்ட காமம். அது இதயத்தையும் மனதையும் தடவிக் கொடுக்கிறது. காம இன்பம் நுகர்ந்திட அறிவும் வளர்ச்சி பெறுகிறது. கோபம் பொறாமை பயம் ஆகிய தாழ்குணங்கள் நீங்கித் தெளிவு பெற்று விடுகிறான். காம இன்பத்தை முழுமையாகப் பருகிய கணவனும் மனைவியும் சிறந்த குழந்தைகளைப் பெறுகின்றனர். வியாச முனிவனுடன் முழுமையாக காம இன்பம் அனுபவித்த அம்பிகை அம்பாலிகையின் தோழி அறிவில் சிறந்த விதுரனைப் பெற்றெடுத்ததாள், விதுரநீதி யென்று இன்று அவன் நீதி நெறியைப் போற்றுகிறது. வியாசனுடன் உடல் உறவு மட்டும் கொண்ட அம்பிகையும் அம்பாலிகையும், கண்ணற்ற திருதிராட்டிணனையும், தோல் நோயுற்ற பாண்டுவையும் பெற்றனர். இவை பாரதம் கூறும் நமக்குணர்த்தும் உண்மை. நான்கு வேதங்களைத் தொகுத்த வியாசரும், மச்சகந்தி யென்பாள் பரிமளகந்தியாகப் பொலிவுற்று பராசரைப் புணர்ந்ததினால்தான் என்பதுணர்க. "பொன்னனையார் திருஉறுக" என்று ஆழ்வார் திருவாய் மலர்ந்தது, இங்கு வஞ்சப்புகழ்ச்சி என்பதும் காண்க

**... ... ... ... ... ... ... போர்வேந்தன்**
**தன்னுடைய தாதை பணியா லரசொழிந்து**
**பொன்னகரம் பின்னே புலம்ப வலங்கொண்டு**

மன்னும் வளநாடு கைவிட்டு—மாதிரங்கள்
மின்னுருவில் விண்டேர் திரிந்து வெளிப்பட்டுக்
கன்னிரைந்து தீய்ந்து கழையுடைந்து கால் சுழன்று
பின்னுந் திரைவயிற்றுப் பேயே திரிந்துலவாக்
கொன்னவிலும் வெங்கானத்தூடு—கொடுங்கதிரோன்
துன்னுவெயில் வறுத்த வெம்பரல்மேல் பஞ்சடியால்
மன்ன னிராமன்பின் வைதேவி யென்றுரைக்கும்
அன்ன நடைய லணங்கு நடந்திலளே

அ - ரை :- போர்வேந்தன் - போரிடுவதில் வல்ல அரசன், இராமபிரான். தாதை - தந்தை. பணி - ஆணை. அரசு ஒழிந்து - அரசை நீக்கி. பொன்னகர் - தேவர் உலகு போன்ற அயோத்தி. பின்னே புலம்ப - காடு செல்லும் இராமபிரானைப் பின் தொடர்ந்து அழுது புலம்ப. வலம் கொண்டு - வலிமை மனம் கொண்டு. மன்னும் வளநாடு - வளம் மிகுந்த நாடு. கைவிட்டு - வேண்டாமெனவிட்டு. மாதிரங்கள் - திசைகள். மின் உருவின் - மின்னல் போன்ற. விண்தேர் - கானல். திரிந்து - எங்கும் பரவியிருந்து, பரவிக் கிடந்து. வெளிப்பட்டு - ஒன்றுமில்லா வெளியிடம், பாலை நிலம். கல் நிரைந்து - கற்கள் நிறைந்த. தீய்ந்த கழை - காட்டுத் தீயால் எரிந்து தீய்ந்து வெடித்த மூங்கில்கள். கால் சுழன்று - சுழல் காற்று வீசிக் கொண்டு. பின்னும் - மேலும். திரை வயிறு - மடிந்த வயிறு, கடல் அலை போல் ஒடுங்கிய வயிறு. பேயே திரிந்து உலவா - பேய்கள் திரிந்து உலவும். கொன்னவில் - கொல் நவில், கொலை செய்வதையே சொல்லும், கொலை ஒலி. வெம்கானத்தூடு - கொடிய காட்டினில். துன்னு வெயில் - பொருந்திய வெய்யில். வறுத்த - சூரியனின் வெப்பம் வறுத்தெடுத்த. பரல் - பரல் கற்கள். பஞ்சடி - பஞ்சு போன்ற மென்மையான பாதங்கள். வைதேவி - வைதேகி, சீதாப்பிராட்டி. அணங்கு - புதிய மாது, தெய்வ மகள். நடந்திலளே - நடந்து செல்லவில்லையா.

வி - ரை :- அசுரருடன் போரிட்டு வென்ற இராமபிரான் தன்னுடைய தந்தை தசரதன் பணித்ததனால் அரசை

நீத்து பொன்னகரம் தேவர் உலகு போன்ற அயோத்தி நகரமே புலம்பியழுது பின் தொடர, வலிமை கொண்ட மனத்தினளாய் செழித்த வளமை மிக்க நாட்டை விட்டுத் திசைகளெங்கும் மின்னல் போன்ற கானல் பரவிக் கிடக்க, யாதுமில்லாப் பாலை நிலத்தில் கற்கள் நிறைந்த, காட்டுத் தியால் தீய்ந்து வெடித்த மூங்கில்கள் உடைந்து கிடக்க, சுழல்காற்று வீச கடல் அலை போன்று மடிந்த வயிற்றையுடைய பேய்க் கூட்டங்கள் திரிந்து கொண்டிருக்கும், கொல்லும் தொழிலையே காற்றின் ஒலி பேசும்கொடிய கானகத்து கதிரவனின் கொடிய வெப்பத்தால் பரல் கற்கள் வறுத்தெடுக்கப் பட்டது போன்று கிடக்க அதன்மேல் பஞ்சு போன்ற தன் பாத அடிகளை வைத்து மன்னன் இராமபிரான்பின் அன்ன நடையினையுடைய வைதேகி யென்றழைக்கப்படும் தெய்வ மகள் சீதாப்பிராட்டி நடந்து செல்லவில்லையா?

"போர்வேந்தன்" என்றது இராமபிரானை, வேந்தன் என்ற சொல் இராமபிரானையே குறிக்கும். ஏனெனில் இவன் வேந்தர்க்கும் வேந்து. அதேபோன்று "மன்னன்" என்ற சொல்லும் இராமபிரானையே குறிக்கும். போர்வேந்தன் என அடை கொடுத்துக் கூறியது இராமபிரான் அசுரர்களுடன் போரிட்டு வென்ற செய்தியை உணர்த்த எழுந்த சொல். வேந்தனாயிருந்தும் தன் தாதை சொல் தவறாதவனாதலின், "தன்னுடைய தாதை பணியாலர சொழிந்து" என்றனர், "பொன்னகரம்", என்பது தேவர் உலகுக்கானது. இங்கு அயோத்தியும் அதன் மக்களுக்குமானது. "வலங்கொண்டு" என்ற சொல் வலிமை மனம் கொண்டு எனவே பொருள் கொளல் வேண்டும், பலம் என்ற வடசொல் வலமெனத் திரிந்தது. அதேபோன்று தாத என்ற வடசொல் தாதையென்றானது. மாதிரங்கள் என்றது ஆகாயம் பூமி மற்றும் அதன் திசைகட்கானது. எத்திசையும் என்றபடி. வெண்தேர் என்றது கானல். "திரிந்து" என்றது பரவியிருந்த கானல் என்றபடி. "வெளிப்பட்டு" என்றது கானல் வெளிப்பட்டு பாலையானது. ஒன்றுமில்லா நிலையான்து தீய்ந்த "கழை"யென்றது காட்டுத் தீயினால் வெந்து தீய்ந்து

வெடித்த மூங்கில்கள் சிதறிக் கிடக்க, பாலை நிலத்தில் சுழல் காற்று அடிக்கடி வீசும் என்பதால் "கால் சுழன்று" என்றனர், இங்கு,

"நானிலம் வாய்க்கொண்டு நன்னீர றமென்று
கோதுகொண்ட
வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ் பாலை. . . . ."

என்று நம்மாழ்வார் அருளிய திருவிருத்தப் பாசுரம் கூறும். முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் நால்வகை நிலங்களையும் தன் ஒளிக்கதிர்களால் வாயிற் பெய்து கொண்டு நல்நீர் முற்றிலும் அறும்படி சக்கையென பழத்தை முழுதும் தின்று சக்கையைத் துப்பிய, வெப்பமே தன் பொருளாகக்கொண்ட சூரியன் ருசி பார்த்துத் தின்றுமிழ்ந்த பாலை நிலம்" என்று பாலை நிலத்திற்கு இலக்கணம் வகுத்திருத்தல் காண்க. இத்தகு சிறப்பாகப் பாலை நிலத்தைப்பற்றி வேறு எங்கும் சொல்லக் கேட்டதில்லை.

"திரை வயிறு பேயே உலவா" என்றது கடல் அலை போன்று மடிந்த பெருவயிற்றையுடைய பேய்கள். ஆழ்வார் பெருந்தகை இதனை எப்படி நோக்கியிருக்கிறார் என்பது காண்க. அலையெழும்பொழுது அதன் மத்திய பாகம் வளைந்து மடிந்து ஒட்டிய வயிறுபோல் காணப்படுமாதலின் 'திரைவயிறு" என்றனர். "கொல் நவிலும்" என்றது கொலைத் தொழிலையே பேசும். அந்தக் கானகத்தில் எழும் ஒலியானது கொலையொலியெனக் கேட்டது என்றபடி. "வெயில் வறுத்த வெம்பரல்" என்றது கதிரவனின் வெம்கதிர்கள் அங்கு நிரம்பிக் கிடக்கும் பரல் கற்களை வறுத்தெடுத்த மாதிரி சுடும் என்பதாம். "பஞ்சடி"யென்றது பஞ்சு போன்ற மென்மையான பாதங்கள் என்பதும் செம்பஞ்சுக் குழம்பு பூசப்பட்ட பாதங்கள் என்றபடியுமாம். மன்னன் இராமபிரான் பின் வைதேவி வைதேகி யென்பாள். சீதைக்கு வடமொழியில் வைதேகி என்று பெயர். விதேக நாட்டரசன் சனகன் மகள் என்பதால், "நடந்திலலோ" என்று வினாவை யெழுப்புகிறார், நடந்து

செல்லவில்லையா? வளம் மன்னும் நாடும் கைவிட்டுத் தன் காதலனுக்காக ஆசையின் மிகுதியால் நாணந் தவிர்த்து நாயகன் பின் போகவில்லையா என்று முதலில் சீதாப்பிராட்டி சென்றதைக் கூறுகிறார். இதுவும் மடலூர்தல்தானே என்று கூறாமல் கூறுகிறார். கணவன் நாடு நீத்து காடு செல்கின்றான் என்று தெரிந்ததும் அவள் அரண்மனையில் ஒரு மூலையில் தன் காதலை அடக்கிக்கொண்டு கிடக்கவில்லை, உன் பிரிவினும் சுடுமோ அக்கானகம் என்று கூறி வெளிப்பட்டு விடுகிறாள். வீதி வழியே இராமபிரான் பின் நடந்தேகுகிறாள். இதுவே மங்கையர் மாண்பு என்பதாம்.

பின்னுங் கருநெடுங்கண் செவ்வாய்ப் பிணைநோக்கின்
மின்னனைய நுண் மருங்குல் வேகவதியென்றுரைக்கும்
கன்னிதன் இன்னுயிராங் காதலனைக் காணாது
தன்னுடைய முன்தோன்றல் கொண்டேகத் தான்சென்றங்கு
அன்னவனை நோக்கா தழித்துரப்பி—வாள மருள்
கன்னவில் தோள் காளையைக் கைப்பிடித்து மீண்டும் போய்ப்
பொன்னவிலும் மாகம் புணர்ந்திலளே......

அ - ரை :- பின்னும் - மேலும். கருநெடுங்கண் - கருமையான அகன்று நீண்ட விழிகள். செவ்வாய் - சிவந்த வாய், பவள உதடுகள். பிணை - பெண்மான். பிணைநோக்கின் - மானின் மருண்ட பார்வையையுடைய. மின்னனைய - மின்னல் போன்று மெல்லிய. நுண் - நுண்மை இருப்பதும் இல்லாததும்போல், உள்ளதும் பொய்யோ எனும். மருங்கு - இடை. வேகவதி - வேகவதியெனும் ஒரு பெண். உரைக்கும் - சொல்லப்படும். கன்னி - மணமாகாத பெண். முன்தோன்றல் - தனக்குமுன் பிறந்தவன், அண்ணன். அன்னவனை நோக்காது - அண்ணனைக் கண்டும் காணதவளாய். தான் சென்று - அவளாகவே காதலனிடம் சென்று. வாள் அமருள் - வாட்போரில், போர்க்களத்தில் கல்நவில் தோள்காளை - கல் என்று சொல்லத்தகும் தோள்களையுடைய, அந்தக் காளை

யாம் தன் காதலனை. அழித்து உரப்பி - சொல்லால் சுட்டு அதட்டி கைபிடித்து - அவன் கைகளைத் திருமணத்தில் பற்று வதுபோல் பற்றி. மீண்டும்போய் - போர்க்களம் விட்டுத் தன் னிடத்திற்கு மீண்டும் சென்று. பொன் நவிலும் - பொன் போன்றதெனக் கூறும், ஆகம் - மார்பில் சாய்ந்து. புணர்ந் திலளே - அவனைப் புணர்ந்திடவில்லையா.

வி - ரை :- சீதையின் சரித்திரம் மட்டுமல்ல. கருத்த அகன்ற விழிகளையும் மான் போன்ற மருண்ட பார்வையையு முடைய வேகவதியென்னும் ஒரு கன்னி, தன் காதலனைக் காணவொட்டாமல் தன் அண்ணன் அவளைக் கொண்டேக. அதையறிந்த அவள் தன் அண்ணனைச் சட்டைபண்ணாமல் தானாகப் புறப்பட்டு, அவன் காதலன் ஒரு போர்க்களத்தில் பெரும் போரில் ஈடுபட்டிருப்பது தெரிந்து, அந்தப் போர்க் களம் சென்று அவனைப் பலவாகச் சாடி. கைப்பிடித்திழுத்து வந்து தன் நகரில் அவன் பொன் மார்பில் சாய்ந்து அவனைப் புணரவில்லையோ? என்றபடி.

வேகவதியென்பாள் யாரெனத் தெரியவில்லை. ஆனால் யோகவதியென்பாள் ஞானசுதரிசனன் மனைவி. இவளே வேகவதியெனவும் வழங்கப்படுகிறது. இவளைப்பற்றி மற்று மொரு செய்தி காணப்படுகிறது. இவள் கணவன் அதிதி பூசை செய்யும்படி சொன்ன சொல் தவறாமல் விருந்தாய் வந்த வேதியனாகிய யமனுடன் புணர்ந்திருக்க, கணவன் கண்டுகளித் தனன். இதையறிந்த யமன் அவளைப் புகழ்ந்து இருவருக்கும் யமவாதனையில்லாது பரமபதமீந்து, யோகவதியை, நீ உன் கணவனுக்குப் பெண்ணுருவுடனிருந்து உலகத்தோர் பாபத்தை நீக்க வேகவதியாயிருக்கவென வரம் பெற்ற கற்பரசி. ஆழ்வார் திருவாய் மலர்ந்தருளிய வேகவதியும் இந்தக் கற்புக் கரசியும் ஒருவரா என்பது தெரியவில்லை.

வேகவதிக்குக் கருநெடுங்கண், செவ்வாய், பிணைநோக்கு, மின்னனைய நுண்இடையென அவள் அழகை அடுக்கிக் கொண்டு போதல் சிறப்பு. அவள் தன் காதலனைத் திருமண

மாகா முன்பே புணர்ந்தனள் என்பதால் "கன்னி" என்றனர். தனக்குமுன் தோன்றல் தடுத்தும் கேளாதவளாய்ச் சென்றாள் என்பதனை, "அன்னவனை நோக்காது" என்று உணர்த்தினார். "நோக்காது" என்றதால் அவன் பார்த்தும் இவள் பார்க்காது சென்றாள் என்றபடி. காதலனைக் கட்டாயப் படுத்திப் புணர்ந்தாள் என்பது "அழித்து, உரப்பி" என்பன உணர்த்துவதாம். பெண் தன் காதலனைப் புணர்ந்திட வேண்டும் என மனது வைத்தால் போர்க்களத்திலும் புகுந்திட அஞ்சாள் என்பது இங்கு தெரிவதாகும்.

... ... ... ... ... பூங்கங்கை
முன்னம் புனல் பரக்கும் நன்னாடன் மின்னாடும்
கொன்னவிலும் நீள்வேல் குருக்கள் குலமதலை
தன்னிக ரொன்றில்லாத வென்றித் தனஞ்சயனைப்
பன்னாக ராயன் மடப்பாவை—பாவைதன்
மன்னிய நாணச்சம் மடமென் றிவையகலத்
தன்னுடைய கொங்கை முகநெரியத்—தானவன்றன்
பொன்வரை யாகந் தழீஇக் கொண்டு போய்த் தனது
நன்னகரம் புக்கு நயந்தினிது வாழ்ந்ததுவும்
முன்னுரையிற் கேட்டறிவ தில்லையே...

அ - ரை :- பூங்கங்கை - அழகிய கங்கை நதி. புனல் - நீர். பரக்கும் - அலைந்து திரியும். புனல் முன்னம் பரக்கும் - நீரின் முன்னே அலைந்து திரியும். நல்நாடன் - நல்ல நாட்டுடைத் தலைவன். மின்ஆடும் - மின்னல் போன்று ஒளித்து மிளிரும். கொன்னவிலும் - கொல் நவிலும் கொலைத் தொழிலைக் கூறும், கொலைத் தொழிலை மற்றவர்கட்குக் கற்றுத் தரும். நீள்வேல் - நீண்ட வேல் ஆயுதம். குருக்கள் - குரு குலத்தவர். குரு எனும் அரசன் மரபினர். குலமதலை - குலத்தில் தோன்றியவன். மதலை - குழந்தை. தன்நிகர் - தனக்கு நிகராக. ஒன்றில்லாத வென்றி - ஒருவரும் இல்லாத வெற்றி வீரன். தனஞ்சயன் - அர்ச்சுனன். பன்னாகம் - பாம்பு. ராயன் - அரசன். கௌரவ்யனென்னும் பாம்பரசன். மடப்

பாவை - மடமை மிக்க பெண். மன்னிய - இயற்கையாய் அமைந்த, நாணம், அச்சம், மடம் என்றிவை. அகல - இம் மூன்றும் நீங்கப் பெற்று. கொங்கை - முலை முகநெறிய - முலைக்காம்புகள் நெறிக்கப் பெற்று. நயந்து - விரும்பி பொன்வரை - பொன்மலை, பொதியமலை. ஆகம் - மார்பு. தழீக்கொண்டு - தழுவிக் கொண்டு. போய்புக்கு - சென்று புகுந்து. இனிது வாழ்ந்தது - அவனைப் புணர்ந்தின்புற்று வாழ்ந்ததும். முன்உரையில் - மகாபாரதத்தின் ஆதிபருவத்தில் அறிவது இல்லையே - கேட்டறிந்ததில்லையோ?

வி - ரை :- அழகிய கங்கை நதியின் கரையோரமாகத் திரிந்து கொண்டிருந்த, சிறந்த நாட்டுக்குத் தலைவனும், ஒளி வீசும் கொலைத் தொழில் கற்பிக்கும் நீண்ட வேலையுமுடைய குருவமிசத்துத் தோன்றிய ஒப்பற்ற வீரனான அர்ச்சுனனை கௌரவ்யனென்னும் பாம்பரசன் மகள் உலூபியென்பவள், தன் முலைக்காம்புகள் நெறிக்கப் பெற்றுத் தனது அச்சம், நாணம், மடம் எனும் குணங்களை நீங்கப்பெற்று, அர்ச்சுனன் அழகைக் கண்டு அவளாகவே வந்து, அவன் மலை போன்ற மார்பைத் தழுவி, தன்னுடைய அழகிய நாகலோகம் கொண்டு சென்று அவனைப் புணர்ந்து இன்ப வாழ்வு வாழ்ந்ததை மகா பாரதம் ஆதிபருவத்தில் கூறப்பட்டிருப்பது சொல்லக் கேள் விப்பட்டதில்லையோ? என்பதாம்.

அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை செய்கையில் கங்கையில் இறங்கி நீராடியெழும்பொழுது, அவனைக் கண்டு மோகித்த உலூபியென்னும் நாககன்னிகை அவனைத் தண்ணீருக்குள் இழுத்துச் சென்றாள். அர்ச்சுனன் அவளை நீ யார்? எதற் காக என்னை இங்கு கொணர்ந்தாயெனக் கேட்க. ஐராவத குலத்துதித்த கௌரவ்யனென்னும் பாம்பரசன் மகள் என்றும், உன்னைக் கண்டதும் மன்மதன் மலர் அம்புகட்கு இலக்கா னேன் என்றும், என்னைப் புணர்ந்து மகிழ்விக்க வேண்டுமென அவள் வேண்ட, அர்ச்சுனன் தான் தீர்த்த யாத்திரையில் இருப் பதால் எவ்வாறு புணரமுடியும்? உன் ஆசையை நிறைவேற் றும் ஆவலும் இருக்கிறது. என் விரதமும் கெடாமல் உன்

விருப்பமும் பழுதுபடாமல் இருக்கும்படி காரியம் நிகழவேண்டு மென்று சொல். அப்பெண் அவனைக் கோபித்து, என்னைப் புணராவிடில் என் உயிர் மாய்த்துக் கொள்வேன் என, அர்ச்சுன னும் அவளைப் புணர்ந்து இராவாந் எனும் மகனைப் பெற் றெடுத்தனர். இச்செய்தியை வில்லிப்புத்தூரார் பாரதம், ஆதி பருவம், அர்ச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கம்,

"ஓடுங் கயல்விழி யாரிலு லூபிப் பெயரவளோ
டாடும் புனலிடை நின்றவன நுராகமிகுந்தே
நாடும் பிலவழியே யவள்பின் சென்றுநலததா
னீடுங்கொடி மணமெய்தினன் முகில்போலு நிறத்தான்"

என்று கூறுவது காண்கிறோம்.

கங்கையின் சிறப்பை "பூகங்கை" என விளித்திருத்தல் காண்க. அவன் தீர்த்த யாத்திரையிலிருந்தான் என்பதை "புனல் பரக்கும் நன்னாடன்" என்றனர். "குருக்கள் குல முதலை" என்றது பரதவம்சத்திற் பிறந்த குரு என்னும் அரசன் மரபில் தோன்றியவர்களே பாண்டவரும் துரியோத னாதியரும். "பன்னாகராயன்" என்பது பாம்பரசன் கௌரவ்ய னென்பானைக் குறிப்பதாகும். "பந்நகம்" எனும் வடசொல் பாம்பைக் குறிக்தும். "உரகம்" என்பது மார்பிலே ஊர்ந்து செல்லுதல். "பாவை!" என்பது சித்திரப்பாவைப் பெண்ணைக் குறிப்பது. நாண், மடம், அச்சம், பயிர்ப்பு பெண்டிற்குரிய இயற்கையான குணங்களாம். நாணம் என்பது தகாத காரியங் களில் மனம் ஒடுங்கி நிற்பது. மடம் என்பது எல்லாம் அறிந் தும் அறியாததுபோல் இருத்தல். அச்சமாவது ஒன்றுமில்லா வற்றிற்கும் அச்சமடைதல். பயிர்ப்பு என்பது மற்ற ஆடவர் ஆடை முதலியன பட்டாலும் அருவருப்படைதல். பெண்ணின் இந்நான்கு குண நலன்களை நாற்படையாக, புகழேந்தியார் பெண்மையின் ஆட்சிச் சிறப்புக்கு ஒரு வெண்பாவைத் தன் நளவெண்பாவில் சேர்த்திருக்கிறார்,

"நாற்குணமு நாற்படையா, வைம்புலனு நல்லமைச்சா
ஆர்க்குஞ் சிலம்பே யணிமுரசா—வேற்படையும்
வாளுமே கண்ணா வதனமதிக் குடைகீழ்
ஆளுமே பெண்மை யரசு."

இவ்வெண்பாவின் சிறப்புக் கருதி, "நறுந்தொகை விருந்து இரண்டாம் பந்தி பெண்டிர்க்கழகு" எனும் பகுதியிலும் நைடத உரையிலும் சேர்த்திருத்தல் கண்டு மகிழ்க. "நாணின்ற ஆகாது பெண்மை" என பழமொழிநானூறு கூறியிருத்தலும் காண்க. இத்தகு சிறப்பு மிக்க நாற்படையையும், பெண்மையையும் தள்ளிவிட்டு அர்ச்சுனனுடன் புணர்ந்தாள் என்பதே உண்மை. வடநெறிக்கும் தென்னெறிக்குமுள்ள வேறுபாடு.

... ... ... ... ... சூழ்கடலுள்
பொன்னகரஞ் செற்ற புரந்தரனோ டேரொக்கும்
மன்னவன் வாணன் அவுணர்க்குவாள் வேந்தன்
தன்னுடைய பாவை யுலகத்துத் தன்னொக்குங்
கன்னியரை யில்லாத காட்சியாள்—தன்னுடைய
இன்னுயிர்த் தோழியா லெம்பெருமானீன்றுழாய்
மன்னு மணிவரைத்தோள் மாயவன்—பாவியேன்
என்னை யிதுவிளைத்த ஈரிரண்டு மால்வரைத்தோள்
மன்னவன்றன் காதலனை மாயத்தாற் கொண்டுபோய்க்
கன்னிதன் பால்வைக்க மற்றவனோ டெத்தனையோர்
மன்னிய பேரின்ப மெய்தினாள்.

அ - ரை :- சூழ்கடலுள் - கடலால் சூழப்பட்ட, பொன்னகரம் - பொன்னவன் நகரம், இரண்யன் நகர், தேவர் உலகு போன்ற நகர் எனினுமாம். செற்ற - அழித்தவென்ற. புரந்தரன் - தேவேந்திரன். ஏர் - எழுச்சி. ஒக்கும் - ஒத்த. அவுணர் - அசுரர். வாள்வேந்தன் - வெற்றி வேந்தன். வாணன் - பாணாசுரன். பாவை - பெண், மகள். உலகத்து தன் ஒக்கும் - உலகில் தனக்கு நிகரில்லாத. காட்சியாள் - அழகில் சிறந்தவளாகிய உஷையென்பாள். தோழியால் - தோழியான

சித்திரலேகை. ஈன் துழாய்-அன்றலர்ந்த துழாய் மாலை. ஈன் - அப்பொழுதுயிர்த்த: ஈன்ற. மன்னும் - பொருந்திய. மணி வரை - ரத்தினமலை போன்ற. தோள் - தோள்களையுடைய. மாயவன் - கனவில் கண்ட ஒருவன். பாவியேன் - பாவியான என்னை. இது விளைத்த - இத்துன்பம் விளைவித்த. மால் வாரை தோள் - பெரிய மலை போன்ற தோள், ஈறிரண்டு - நான்கு. மன்னவன்தன் - மன்னவன் தன்னை. மாயத்தால் - தன் மாயாசக்தியால். கன்னி தன்பால் வைக்க - உஷையிடம் சேர்க்க. மற்றவனோடு - அந்த அநிருந்தனோடு. எத்தனை ஓர் மன்னிய பேரின்ப மெய்தினாள் - பலவிதமாகக்கூடி அவ னுடன் இன்பம் அனுபவித்தாள்.

வி - ரை :- கடலால் சூழப்பட்ட இரண்யாசுரன் நகரங் களை அழித்த தேவேந்திரனையொத்த செல்வமுடைய மன்னர் மன்னன் அசுரர்களில் வெற்றி வேந்தன், பாணாசுரன் மகளாய்' உலகில் தனக்கு நிகரான கன்னியரே இல்லாத அழகியான உஷையென்பாள் தன்னுடைய இனிய உயிர்த் தோழி சித்ரலேகையென்பாளைக் கொண்டு, அன்றலர்ந்த திருத்துழாய் மாலையணிந்த ரத்தினமணிகள் போன்ற தோள்களையுடைய மாயவன், பாவியான என்னை இப்பாடுபடுத்துகின்ற பெரும் மலை போன்ற நான்கு தோள்களால் அனுபவிக்கவிடாமல் - அன்புக்குரியவனான அநிருத்தாழ்வானை மாயத்தால் எடுத்துச் சென்று தன்னிடத்தில் சேர்க்க, அந்த அநிருத்தனோடு பலவித மாகப் புணர்ந்து பேரின்பம் அனுபவித்தாள்.

உஷையென்பவள் பலிசக்கரவர்த்தியின் பரம்பரையில் பிறந்த பாணாசுரனின் பெண். ஓர் இரவு யாரோ ஒரு ஆண் மகனுடன் தான் கூடி இன்புற்றதாகக் கனவில் கண்டு, அவ னிடம் மிகுந்த காம உணர்ச்சி மிக்கவளாய், தன் தோழி சித்ரலேகைக்குத் தான் இன்பம் அனுபவித்ததைக் கூற, அவள் பல அரசர்களின் படங்களை வரைந்து காட்ட, அப்படங்களுள் ஒன்று கண்ணபிரானுடைய பேரனும், ப்ரத்யும்நனது மகனாகிய அநிருத்தனென்று கண்டறிந்து அவனை அடைவு

தற்கு வழி கேட்க, அத்தோழி தன் மாயவித்தையால் துவராகைக்குச் சென்று அநிருத்தன் கட்டிலில் தூங்கிக்கொண்டிருக்கக் கண்டு, அவனைக் கட்டிலுடன் தூக்கி வந்து அவள் அந்தப்புரத்தில் சேர்க்க உஷை அநிருத்தனுடன் பலவிதமாகப் புணர்ந்து பேரின்பமெய்தினாள் என்பது இங்கு கூறப்பட்டுள்ளது. உஷையென்பவள் அப்படி இன்பம் அனுபவிக்க தன் காதலன் அந்த மாயாவன் தன்னை இந்நிலைக்குத் தள்ளிவிட்டானே என்று பரகாலநாயகி அங்கலாய்த்துக் கொள்கிறாள். எம்பெருமானை இப்படியாகிலும் அடைந்து இன்புறாமல் இப்படி மடல் ஊர்தல் நிலைக்குத் தன்னைத் தள்ளிவிட்டானே என்றபடி.

உஷையின் தந்தையைச் சிறப்பிக்க "பொன்னகரம் செற்ற புரந்தரனோடு ஒக்கும் மன்னவன்" என்றனர். உஷையின் அழகைக் கூறுமிடத்து, "உலகத்து தன் ஒக்கும் கன்னியரை இல்லாத காட்சியாள்" என்கிறார். அவள் அநிருத்தாழ்வானுடன் இன்பம் அனுபவித்ததை, "எத்தனை ஓர் மன்னிய பேர் இன்பம் எய்தினாள்" என்பது தாம்பத்திய இன்பமனைத்தும் அனுபவித்து இன்புற்றாள் என்பதாம். தான் விரும்பிய காதலனைப் பலாத்காரத்தை உபயோகித்தாகிலும் அவனுடண் புணர்ந்து இன்புறுவதே இவ்வாறு மடலூர்வதிலும் சிறந்தது என்பது ஆழ்வார் திருவுள்ளம் என்பதுமாம். ஆனால், பகவான் சம்பந்தப்பட்டது. ஆதலின் மடலூர்வேன் என்பதைத் தவிர வேறு வழியில்லையென்றபடி.

... ... ... ... ... மற்றிவைதான்
என்னாலே கேட்டீரே ஏழைகா ளென்னுரைக்கேன்
மன்னு மலையரையன் பொற்பாவை—வாணிலா
மின்னு மணிமுறுவல் செவ்வா யுமையென்னும்
அன்ன நடைய வணங்கு நுடங்கிடைசேர்
பொன்னுடம்பு வாடப் புலனைந்தும் நொந்தகலத்
தன்னுடைய கூழைச் சடாபாரந் தான் தரித்தாங்கு
அன்ன வருந்தவத்தி னூடுபோய்—ஆயிரந்தோள்

மன்னு கரதலங்கள் மட்டித்து மாதிரங்கள்
மின்னி யெரிவீச மேலெடுத்த சூழ்கழற் கால்
பொன்னுலக மேழுங் கடந்தும்பர் மேற்சிலும்ப
மன்னு குலவரையும் மாருதமுந் தாரகையும்
தன்னி னுடனே சுழலச் சுழன்றாடும்
கொன்னவிலும் மூவிலைவேற் கூத்தன் பொடியாடி
அன்னவன்றன் பொன்னகலஞ் சென்றாங் கணைந்திலளே
பன்னி யுரைக்குங்காற் பாரதமாம் ...

அ - ரை :- ஏழைகாள் - அறிவில் ஏழைகள், அறிவில்லாதவர்களே. மற்று இவைதான் - மேலும் இவற்றை இது போன்ற உதாரணங்களை. என்னளே - நான் சொல்ல, என்னைக்கொண்டே. கேட்டீரே - கேட்க விரும்புகிறீர்களா, கேட்க வேண்டுமோ, நீங்களாகப் புரிந்து கொள்ளீரோ, தெரிந்துகொள்ள மாட்டீரோ. என உரைக்கேன் - இன்னமும் என்னத்தை நான் சொல்ல இருக்கிறது. சொல்கிறேன் கேளுங்கள் என்றபடி. மன்னு மலையரையன் - நிலைபெற்ற மலை நாட்டரசன் பொற்பாவை, பர்வதராஜனின் ஹிமவானுடைய சிறந்த பெண். அரையன் - அரசன். வாணிலா - வாள்நிலா, ஒளி வீசும் சந்திரன். மின்னு - மின்னல் போன்று பளிச்சிடும், மணிமுறுவல் - முத்துமணிகள் உதிர்ந்தது போன்று புன்னகை. செவ்வாய் - சிவந்த பவள உதடுகள். உமை - உமா, பார்வதி. உமா வடசொல். அன்னநடைய - அன்னம் போன்ற நடையையுடைய. அணங்கு - தெய்வமகள். நுடங்கும் இடை - முலைகளின் பாரம் தாங்கமாட்டாமல் துவளும் இடை. சேர் - சேர்ந்த. பொன்னுடம்பு - பொன் போன்ற அழகிய உடம்பு. தன்னுடைய கூழை - தன் தலைமயிர். சடாபாரம் - சடையாக அமைக்கப்பெற்று. புலன் ஐந்தும் - ஐம்புலன்களும். நொந்து - வருந்தி. அகல - நீங்க. அன்ன அருதவம் - அது போன்ற அரிய தவம். ஊடுபோய் - தவத்தைச் செய்து முடித்து. ஆயிரம்தோள் - சிவபெருமானின் ஆயிரம் தோள்கள். கரதலங்கள் - கைகளை திசையெங்கும். மட்டித்து - பரவச் செய்து. மாதிரங்கள் - திக்குகள் எட்டும்.

மின்னி - மின்னல் ஒளியென். எரிவீச - தீப்பொறி வீச. மேல் எடுத்த - தூக்கிய. கழல்சூழ் கால் - வீரக்கழல் அணிந்த பாதம். பொன் உலகம் ஏழும் - மேல் உலகம் ஏழும். கடந்து - தாண்டி. உம்பர்மேல் - ஆகாயத்தின்மேல். மேன்மேலும் சிலும்ப - பெருகி ஒலிக்க, மயிர்சிலிர்க்க மென்மேலும் ஒலித்து ஒளித்து எழ. குலம்வரை - நிலைத்து நிற்கும் மலைகளின் குலம், மலைகளின் கூட்டம். மாருதம் - காற்று. தாரகை - நட்சத்திரங்கள். தன்னினுடனே சுழல - தன்னுடன் சுழன்றாட. சுழன்று ஆடும் - சுழன்று நர்த்தனம் செய்யும். கொல்நவிலும் - கொலைத்தொழில் செய்யும். மூவிலை வேல் - மூன்று இலைகளையுடைய வேல். கூத்தன் - கூத்தாடும் சிவன். பொடியாடி - சாம்பலில் ஆடி, சாம்பல் உடல் முழுதும் பூசப்பெற்று, நீராடுதல்போல் பொடியாடுதல். பொன் அகலம் - பொன் போன்ற மார்பு. அணைந்திலளே - அணைந்து கொள்ளவில்லையா. பன்னி - விரித்து. உரைக்குங்கால் - சொல்லுமிடத்து. பாரதமாம் - பாரதம் போன்று தொடர் கதையாம்.

வி - ரை :- இது போன்ற உதாரணங்களை என்னைக் கொண்டே கேட்க விழைகிறீர்களே, அறிவிலிகளே, இன்னமும் என்ன சொல்லுவேன், மலையரையன் பெண்ணாய் உமையெனும் பெயருடையவள் அன்னநடை அணங்கு, தன் முடியைத் தானே சடாமுடியாக அமைத்து அணிந்துகொண்டு, துவளும் இடையுடன் பொன் போன்ற அவளின் உடல் வாட, ஐம்புலன்களையும் வருத்தி நீங்கும்படியாக தவமியற்றி என்ன பேறு பெற்றாள். ஆயிரம் தோள்களையுடைய சிவபெருமான் தன் கைகளை திசையெங்கும் பரப்பி திக்குகளெங்கிலும் தீப்பொறி பறக்க, மேலே தூக்கிய வீரக்கழல் அணிந்த பாதமானது, பொன் உலகம் யாவும் கடந்து மென்மேலும் தூக்கிய பாதத்தை உயர உயரத் தூக்கி நிலைத்து நின்ற மலைகளின் கூட்டமும், காற்றும் நட்சத்திரங்களும் தன்னொடுகூட சுழன்று வரத்தான் சுழன்று நர்த்தனமாடும், கொலைத்தொழில் புரியும் மூன்றிலை வேலையுடையவன், கூத்தாடியென்றும்,

சாம்பல் பொடியாடியென்றழைக்கப்படும் சிவபெருமானுடைய பொன் மார்பை அணைந்து இன்பம் துய்க்கவில்லையா. இது போன்று ஒவ்வொன்றையும் உரைக்குமிடத்து பாரதம் போன்று பெருகிக்கொண்டேயிருக்கும்.

"அறிவிலிகளை ஏழைகள்" என்பது தாண்க. அறிவு எனும் செல்வமில்லாதோர், ஒவ்வொன்றையும் நான் சொல்லித்தான் நீங்கள் கேட்க வேண்டுமா என்று கடிந்து கொள்ளுதல்போல் "என்னலே கேட்டீரே ஏழைகாள்" என்றனர். மலையரையன் என்றது ஹிமவான் என்னும் மலையரசன்.

ஒருமுறை தக்கன் ப்ருஹஸ்பதிஸவமென்றொரு யாகம் பண்ணத் தொடங்கினான். அது கேட்டு அவன் மகளாகிய பார்வதி தந்தை செய்யும் யாகம் கண்டு மகிழ்வோமெனச் செல்ல சிவபெருமான் பழைய பகைமையின் காரணமாகத் தடுத்தும் கேளாது தந்தையினது இல்லம் செல்ல, அங்கு தந்தை இவளைக் கண்டுகொள்ளாதது கண்டும், ருத்ரபாகமில்லாமல் வேள்வி நடைபெறுவதையும் கண்டு வருத்தமும் சீற்றமும் கொண்டு, பாவியான தச்சனால் உண்டான உடல் இனி முடிந்து போக என்று தன் யோக பலத்தால் தீயை உண்டாக்கி அதில் தன் உடலை நீத்தாள். பின் மலையரசனாகிய ஹிமவானுக்குப் பெண்ணாகப் பிறந்து, பர்வதபுத்ரீயாதலின் பார்வதி யென்று பெயர் பெற்று அப்பிறப்பிலும் பரமசிவனையே கணவனாகப் பெறவேண்டுமென்று ஆசை கொண்டு கடுந்தவம் புரிந்து அதன்படி கணவனாக அடைந்து மகிழ்ந்தாள் என்பது இங்கு குறிப்பிடப்படுகிறது.

"உமா" எனும் வடசொல் உமையெனத் திரிந்தது. உமை தன் தலைமுடியை சடாமுடியாக்கித் தவமியற்றுகிறாள் என்பதனையே, "தன்னுடைய கூழை சடாபாரம் தான்தரித்து" என்றனர். சடாபாரம் - வடசொல். அவள் தவம் இயற்றிய பொழுது அவளின் ஐம்புலன்களும் துன்பம் தாங்க இயலாது அவளை விட்டுப் பிரிந்து போயின என்பதை "புலன் ஐந்தும் நொந்து அகல" என்றனர். அவள் உயிரற்ற சடம் போலா

னாள் என்பதாம். அத்தகு புலன்கள் அகன்றும் கலங்காது தவத்தை முழுமையாகச் செய்து முடித்தாள் என்பதை "அன்ன அருதவத்தின் ஊடுபோய்" என்றனர்.

சிவபெருமான் திருக்கூத்தை,

"அண்டப் பகுதியி னுண்டைப் பிறக்க
மளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி"யை

மாணிக்கவாசகப் பெருமான் தில்லையில் அருளிய "திருவண் டப் பகுதி"யை இங்கு சித்தரித்திருப்பது மெய்சிலிர்க்க வைக் கிறது. சிவபெருமான் தன் ஆயிரம் தோள்கள் பொருந்திய கைகளை திசையெங்கும் வியாபிக்கச் செய்து, திக்குகள் எட்டும் விண்ணும் மண்ணும் மின்னி தீப்பொறி கிளம்பும்படி மேலே தூக்கிய வீரக்கழல்கள் அணிந்த ஒரு பாதம் பொன் உலகம் ஏழும் கடந்து, மன்னுலகும் வரையும் மாருதமும் தார கையும் தன்னினுடனே சுழல சுழன்று ஆடும் கூத்தன் என்பது சிவ தாண்டவத்தையே நம்க ண்முன் வைத்தது போன்ற களிப்பை ஏற்படுத்திவிடுகிறது. சிவபெருமான் உருவம் செந்தீ உருவ மாதலின் அவன் ஒரு பாதம் தூக்கி ஆடும்பொழுது, "மாதிரங் கள் மின்னி எரிவீச" என்றனர். அந்த ஆட்டத்தைக் கண்டு ஆடாததொன்று மில்லையென்பதனை யுணர்த்தவே, "மன்னு குலவரையும் மாருதமுந் தாரகையும் தன்னினுடனே சுழல" என்றனர். சிவபெருமானுக்கு "கொன்னவிலும் மூவிலைவேற் கூத்தன் பொடியாடி" என அடை கொடுத்துக் கூறியிருத்தலும் காண்க; நாம் நீராடுவது போன்று அவன் சாம்பற் பொடி யாடுபவனாதலின் "பொடியாடி" என்றனர். சிவபெருமான் உருவம் செந்தீயுருவமாதலின் "அன்னவன்றன் பொன்னகலம்" என்றனர்; செந்தீயும் பொன்னும் ஒரே நிறத்தது என்பதால் பொன் போன்று அழகிய மார்பு எனினுமாம். வடநெறி நின்ற மங்கையர் செய்கையை எண்ணற்றவை அவற்றைப் பற்றிப் பேசுவதென்றால் அது பாரதம்போல் தொடரும். என்றபடி

...... ...... ...... பாவியேற்கு
என்னுறு நோய் யானுரைப்பக் கேண்மின் இரும் பொழில்சூழ்
மன்னு மறையோர் திருநறையூர் மாமலை போல்
பொன்னியலு மாடக் கவாடம் கடந்துபுக்கு
என்னுடைய கண்களிப்ப நோக்கினேன்—நோக்குதலும்
மன்னன் திருமார்பும் வாயு மடியிணையும்
பன்னு கரதலமும் கண்களும்—பங்கயத்தின்
பொன்னியல் காடோர் மணிவரைமேல் பூத்ததுபோல்
மின்னி யொளிபடைப்ப வீணாணும் தோள்வளையும்
மன்னிய குண்டலமு மாரமும் நீண்முடியும்
துன்னு வெயில் விரித்த சூளாமணி யிமைப்ப
மன்னு மரகதக் குன்றின் மருங்கேயோர்
இன்னிள வஞ்சிக் கொடியொன்று நின்றதுதான்
அன்னமாய் மானா யணிமயிலா யாங்கிடையே
மின்னா யிளவே யிரண்டா யிணைச் செப்பாய்
முன்னாய தொண்டையாய்க் கெண்டைக் குலமிரண்டாய்
அன்ன திருவுருவம் நின்ற தறியாதே
என்னுடைய நெஞ்சு மறிவு மினவளையும்
பொன்னியலும் மேகலையு மாங்கொழியப் போந்தேற்கு
மன்னு மறிகடலு மார்க்கும்—மதியுகுத்த
இன்னிலா வின்கதிரு மென்றனக்கே வெய்தாகும்
தன்னுடைய தன்மை தவிர்த்தா னென்கொலோ.

அ - ரை :- பாவியேற்கு - பாவியாகிய எனக்கு. என் உறுநோய் - எனக்கு உற்ற நோய். கேண்மின் - கேளுங்கள். இரு - அகன்ற. பொழில்சூழ் - சோலைகளால் சூழப்பெற்ற. மன்னும் - வசிக்கும். மறையோர் - வேதம் ஓதும் அந்தணர். பொன் இயலும் மாடம் - பொன் மயமான அழகிய மாடம், பொன்கள் பதிக்கப்பெற்ற மாடம். கவாடம் - கதவு. கடந்து புக்கு - தாண்டிச்சென்று. அடியினை - இணையடி, இரு பாதங்கள். பன்னு - புகழ்ந்து போற்றப்படும். கரதலம் - கை. உள்ளங்கை, கரதலம் வடசொல். பங்கயம் - தாமரை மலர்,

பொன்னியல்காடு - பொன்மலர் பூத்ததெனும் காடு, தாமரைக் காடு. மணிவரை - மாணிக்க மணிகளாலான மலை. மின்னி ஒளி - மின்னல் மின்னி ஒளிப்பதே போன்று. ஒளிபடைப்ப - ஒளி வீச. வீணாணும் - வீழ்நாணும். வீழ+நாண் விரும் பத்தக்க திருவரை நாணும், தோள்வளை - தோளில் அணிந்த வளைகளும், ஒருவித அணிகலன். குண்டலம் - காதணி ஆரம் - மாலை, முத்தாரம், ஹாரம் என்ற சொல்லின் திரிபு. நீண்முடி - நீண்ட மணிமுடி, நீள்முடி. துன்னு - துலங்கும். மிகுந்த. வெயில் விரித்த - ஒளி வீசும். சூளாமணி - முடியில், பதித்த மணி, மணிமுடி. இமைப்ப - கண் சிமிட்டி ஒளி வீச. மரமதக்குன்று - மரகதமலை. மருங்கே - அருகில். வஞ்சிக் கொடி - வஞ்சிக்கொடி போன்ற. அன்னமாய் - அன்னநடை. மான்ஆய் - மானையொத்த மருண்ட பார்வை. அணியயில் ஆய் - அழகிய தோகை விரித்த மயில்போல் கூந்தல். இடை மின்ஆய் - மின்னல் ஒளிப்பது போன்று பளிச்சிடும் மென்மை யான மெல்லிடை. இளவேயிரண்டாய் - இளம் மூங்கிலை யொத்த இருதோள்கள். இணைச்செப்பாய் - செப்புக் கலசங் கள் போன்ற இருமுலைகள். முன்னாய - முன் தோன்றுவது தான். தொண்டையாய் - ஆதொண்டைப் போன்ற கொவ் வைக் கனியையொத்த. கெண்டைக்குலம் - கெண்டை மீனின் இனம் போன்ற. இரண்டாய் - இரு கண்கள். அன்ன - அத் தகைய. திருவுருவம் - திருஇலக்குமிப் பிராட்டி உருவம். நெஞ்சு - மனம். இனம்வளை - சிறந்த வளையல்கள். பொன் இயலும் - பொன்னால் செய்யப்பட்ட. மேகலை - மேலாபர ணம். ஒழிய - தானாகவே கழன்று விழ. போந்தேற்கு - நீங்கப்பெற்ற எனக்கு. மன்னுமறிகடல் - என்றும் ஓயாது அலைபாயும் கடல். ஆர்க்கும் - ஒலிக்கும். மதிஉகுத்த - சந்திரன் சிந்திய. இன்நிலவின் ஒளி - இனிய நிலா வெளிச்சம், நிலாவின் ஒளிக் கதிர்கள். என்றனக்கே - எனக்கு மாத்திரம். வெய்தாகும் - வெப்பத்தைப் பொழிவதாகும். தன்னுடைய - நிலவினுடைய. தன்மை தவிர - இனிமையான ஒளி நீங்க. தானென்கொலோ - எம்பெருமான்தான் ஏதாகிலும் செய்து விட்டனரோ.

வி - ரை :- பார்வதிதேவி சிவபெருமானைச் சேர்ந்திட தவமியற்றினால் என்பதாலோ பாரதத்தில் மற்ற பெண்களின் வரலாற்றை எடுத்துரைப்பதால் யாது பயன். அவை கிடக் கட்டும். நான் பட்ட பாட்டை நாடறியக் கூறுகிறேன். கேளுங்கள்.

அகன்ற சோலைகள் சூழ்ந்த திருநறையூரில் மலைபோன்ற எம்பிரான் சந்நிதியின் கதவைத் திறந்துகொண்டு என்னுடைய கண்கள் கண்டுகளிக்க நோக்கும்பொழுது, எம்பெருமானுடைய பிராட்டியார் தங்கும் திருமார்பும், புன்னகையும், திருவடிகள் இரண்டும், போற்றிக் கொண்டாடத்தக்க திருக்கைகளும், கண் களும், ரத்ன மணிகள் பொதிந்த மலையின்மேல் பொன்மய மான தாமரைக்காடு பூத்ததேபோல் மின்னி ஒளி வீச, விருப்பத் தைக் கொடுக்கும் திருவரை நாணும், தோள்களில் அணிந்த வளையுந், பொருந்திய குண்டலமும் முத்தாரமும், நீண்ட மணி முடியும், மிகுந்த ஒளியைப் பரப்பும் முடியிற் பதிக்கப்பட்ட இரத்தினங்கள் ஒளிர, மரகதமலை போன்றிருக்கும் எம்பெரு மான் அருகில், ஓர் இளம் இனிய வஞ்சிக்கொடி போன்று அன்னநடையாள், மானின் மருண்ட நோக்கினாள், தோகை மயிலனைய கூந்தலாள், மின்னிடையாள், இளம் மூங்கிலை யொத்த இரு தோளினாள், இரு செப்புக் கலசங்களையொத்த முலையினாள், கொவ்வைக் கனியொத்த வாயிதழ்களையுடை யவள், சிறந்த இரு கெண்டை மீன் போன்ற கண்ணினாள் பிராட்டியார் நிற்கக் காணதவளாய், எனது மனமும் கைவளை யும். மேகலையும் நீங்கப் பெற்று நின்ற எனக்கு, ஓயா அலை யின் ஓசையும் துன்பம் பண்ணா நின்றது. இனிய நிலவின் ஒளி யும் வெப்பமாய்க் கொதிக்கும்படி காரணம்தான் என்னவோ அறியேன்.

ஊரிலுள்ள மங்கையர் தான் விரும்பியபடி கணவனை அடைந்தனர். ஆனால் பாவியாகிய என்க்கு அந்த பாக்கியம் கிட்டவில்லை என்று அங்கலாய்த்துக் கொள்கிறாள். "பாவி யேற்கு என் உறுநோய் யான் உரைப்பக் கேண்மின்" என் வாயாலேயே சொல்லுகிறேன் கேளுங்கள் என்று தன் ஆற்றா

மையை "பாவியேற்கு" என்று வெளிப்படுத்துகிறார் திருநறையூரை "இருபொழில்சூழ் மறையோர் மன்னும்" என்று சிறப்பிக்கார். அங்கு தான் தேடி, நாடி வந்த உருவைக் கண்கள் களிப்ப நோக்குகிறாள். எம்பெருமான் அங்கயவங் களை ஒன்றும் விடாமல் கண்கள் நோட்டம் விடுகின்றன. எடுத்த எடுப்பில் பிராட்டியார் தங்கும் மார்பு. எப்பொழுதும் புன்முறுவல் செய்யும் உதடுகள், வாய் உதடுக்கானது. பக்தர் கள் வைத்த கண் வாங்காது துதிக்கும் இணையடி. அபயமளிக் கும் திருக்கைகள், அருள் ஒளி வீசும் கண்கள், நீலமலை மேல் பொற்றாமரைக்காடு பூத்துக் குலுங்குவது போன்று மின்னி ஒளி வீச, திருவரை நாணும், தோள்களில் அணிந்த வளை நீளும், திருக்குண்டலமும், மார்பில் அணிந்திருந்த முத்தாரமும் கண்ட மணிமுடியும். அந்த முடியில் பதித்த இரத்தினங்கள் ஒளியைக் கக்க, வியக்கத்தக்க மரகதமலையென்னும்படியான எம்பெருமான், எம்பெருமானின் இக்காட்சியை, எம்பெருமா னின் அங்க அழகை,

"எரிமலர் சினைஇய கண்ணை பூவை
விரிமலர் புரையு மேனியை மேனித்
திருஞெமர்ந் தமர்ந்த மார்பினை மார்பிற்
றெரிமணி பிறங்கும் பூணினை மால்வரை
யெரிதிரிந் தன்ன பொன்புனை யுடுக்கையை
சேவலங் கொடியோய்........"

என்று ஓங்கு பரிபாடலின் முதற் பாடல் படம் பிடித்துக் காட்டுகிறது. இதற்கான தெளிவுரை உரையாசிரியனின் ,,இலக்கியத்தில் கடவுள் வாழ்த்து" எனும் நூல் கண்டு தெளிக.

பரகாலநாயகியின் கண்கள், இவையனைத்தையும் கண்டு களித்து ஏக்கத்தின் மிகுதியால் வஞ்சிக்கொடியொன்று அருகில் நிற்பதை முதலில் அவளால் கண்டுகொள்ள முடியவில்லை. எம்பெருமானைக் கண்டுவிட வேண்டுமென்ற தீராக் காதலால், ,,ஓர் இன் இள வஞ்சிக்கொடியொன்று நின்றது" எனக் காண்

கிறாள். அந்த வஞ்சிக்கொடி யார் என்று எடை போட்டுப் பார்க்கிறாள். நடை "அன்னமாய்" நோக்கு, "மானாய்" கூந்தல், "அணிமயிலாய்" இடையே "மின்னாய்" தோள்கள் "இளவேயிரண்டாய்" முலைகள் "இணைச்செப்பாய்" உதடு கள் "தொண்டையாய்" கண்கள் "கெண்டைக்குல மிரண் டாய்" காண்கிறாள். அது வேறு யாருமல்ல. "திருஉருவம்" எனக் கண்டு வெட்கம் மிகுதியால் "நின்றறியாதே" நுழைந்து விட்டேனே இந்நிலையில் நான் என் செய்வேன். எனது "நெஞ்சும், அறிவும் இனம் வளையும் மேகலையும் ஒழிய போந்தேற்கு" ஒலிக்கும் கடலும் துன்பம் துய்ப்பதாகவே உள் ளது. இனிக்கும் நிலவு என்னை மட்டும் சுடுவதேனோ. இது அந்த மாயவன் செயல்தானோ என்ற ஏக்கம்.

இப்பகுதியில், "மன்னு மரகதக் குன்று" என எம்பெருமா னுக்கு முற்றுவமையாகக் கூறியிருத்தல் காண்க. அதேபோன்று பிராட்டியாரை, "இள வஞ்சிக்கொடி"யென முற்றுவமை யாகக் கூறியிருத்தலும் காண்க. காளையரைக் கற்குன்றுக்கும் கன்னியரை இள வஞ்சிக்கொடிக்கும் ஒப்பிட்டுக் கூறுதல் கவி மரபு. "அன்னமாய், மானாய், அணிமயிலாய்" என்று கவி கூறுமிடத்து, நடை, நோக்கு, கூந்தல் மறைக்கப்பட்ட உவமை யாகும்.

'அன்ன திருவுருவம் நின்றறியாதே" என்றது பரகால நாயகியின் காதல் உணர்வை மிகவும் தெளிவுபடக் காட்டு கிறது. எம்பெருமான்மேல் எழுந்த காதல் மயக்கம், காமம் பிராட்டியார் இல்லாத நேரம் பார்த்துப் புகுந்து அவன் மார்பைத் தழுவிடத் துடிக்கும் உள்ளம் வெளிப்படை. மரகதக் குன்றைக் கண்டுகளித்த கண்கள் அருகில் இருந்த வஞ்சிக் கொடியைக் கண்டதும், "நெஞ்சும், அறிவும் இனம் வளையும் மேகலையும்" ஒழிந்து போயிற்று என்பது ஆற்றாமையின் எல்லையை உணர்த்துவதாம். எம்பெருமானைக் கண்குளிரக் கண்டும் அவனைக் கூடாமல் போனதால் ஏற்பட்ட ஏக்கத்தில். "நெஞ்சும் அறிவும், இளம் வளையும், மேகலையும்" ஒழிந்தன எனினுமாம்,

  

தென்னன் பொதியில் செழுஞ்சந்தின் தாதளைந்து
மன்னிவ் வுலகை மனங்களிப்ப வந்தியங்கும்
இன்னிளம் பூந்தென்றலும் வீசுமெரி யெனக்கே
முன்னிய பெண்ணைமேல் முள்முளரிக் கூட்டகத்துப்
பின்னுமவ் வன்றில் பெடைவாய்ச் சிறுகுரலும்
என்னுடைய நெஞ்சுக்கோ ரீர்வாளா மென்செய்கேன்
கன்னவில்தோள் காமன் கருப்புச் சிலைவளையக்
கொன்னவிலும் பூங்கணைகள் கோத்துப் பொதவணைந்து
தன்னுடைய தோள்கழிய வாங்கித்—தமியேன்மேல்
என்னுடைய நெஞ்சே யிலக்காக வெய்கின்றான்
பின்னிதனைக் காப்பீர்தா னில்லையே......

அ - ரை: தென்னன் - தென் திசைக்குத் தலைவன் பாண்டியன். பொதியில் - பொதியமலையில். செழுசந்திரன் - செழித்த சந்தன மரத்தின். தாது அளைந்து - மகரந்தத்தில் விளையாடி. மன் - நிலைபெற்ற, நிலைத்த. இவ்வுலகை - இந்த உலகத்தை, உலகில் உள்ள மக்களுக்கானது. உளம் - மனம். களிப்ப - களிப்படைய. இயங்கும் - உலவும். இன் - இனிய. இளம்பூ தென்றல் - மென்மையான மலர்களில் தவழ்ந்து வந்த தென்றற்காற்று. எரிஎனக்கே - எனக்கு மட்டும் தீயென எரிகிறது. பெண்ணை - பனைமரம், முள்முளரி - முள் போன்ற பகுதியுடைய தாமரை மலரின் தண்டு. கூடு அகத்து - செய்யப்பட்ட வீடாகிய அதன் இல்லத்தில். பின்னும் - வாயால் ஒன்றோடொன்று கோத்துக் கிடக்கும். அன்றில்பெடை - பெண் அன்றில் பறவை. ஓர்ஈர்வாள் - ஈர்க்கும் வாளாகவுள்ளது. அறுக்கும் வாள். என் செய்கேன் - இதினின்றும் தப்பிப் பிழைக்க என்ன செய்வேன். கன்னவில் - கல் நவில், கல் என்று சொல்லத்தக்க. தோள் - தோள்களையுடைய. காமன் - மன்மதன். கருப்புச்சிலை - கரும்பு வில். கொல்நவிலும் - கொலை. பூங்கணை - மலரம்பு. கோத்து - வில்லில் தொடுத்து. பொத அணைந்து - அந்த வில்லை மார்பில் அணைந்து. தோள் கழிய வாங்கி - தோள் வரையில் இழுத்து. நெஞ்சே இலக்காக - என் நெஞ்சின்மேல் தைக்க

தமியேன் - தனித்து விடப்பட்ட நான். எய்கின்றான் - எறிகிறான். பின்னிதனை - இத்துன்பத்தை. இந்த ஆபத்திலிருந்தும். காப்பீர்தான் இல்லையே - என்னைக் காப்பவர்தான் இல்லையே.

வி - ரை : தென் திசைக்குத் தலைவனான பாண்டிய நாட்டின் பொதியமலையினது சந்தன மரங்களின் மகரந்தத் துகள்களில் விளையாடி உலவி வரும் இனிய இளம் மலர் தென்றல், எனக்கு மட்டும் தீயாய் எரிகிறது. முன்னால் இருக்கும் பனைமரத்தில் முள்ளையுடைய தாமரை மலர் தண்டுகளால் அமைந்த அதன் வீடு எனும் வீட்டிலிருந்து கொண்டு, தன் வாயலகால் அதன் பெடையின் வாயில் கோத்துக்கொண்டு எழும் சிறு குரலும், என் நெஞ்சுக்கு ஈர்வாளாக அறுக்கிறது. இத்துன்பத்தினின்றும் விடுபட என் செய்வேன். மலை போன்ற தோள்களையுடையவனான மன்மதன், தனது கரும்பு வில்லை வளைத்து கொலை செய்யவல்ல மலரம்புகளைத் தொடுத்து, அந்த வில்லை மார்பில் அணைய, தன் தோள்கள் வரை இழுத்து எனது நெஞ்சையே குறியாகக்கொண்டு யாரும் துணைக்கின்றி தனித்திருக்கும் என்மீது அம்புகளை விடுகிறான். இப்பொழுது இந்த ஆபத்திலிருந்து தனித்திருக்கும் என்னைக் காப்பவர் யார்?

'தென்னன் பொதியில்'' என்றது தென் திசையிலுள்ள பொதியமலை. தென்னன் பொதியில் சந்தன மரங்களில் நிறைந்து கிடக்கும் சந்தன நறுமணத்தைச் சுமந்துகொண்டு, வருமாதலின் சிறப்புப் பெற்றது. "பெண்ணைமேல் முள் முளரிக் கூட்டத்து" என்று அன்றில் பறவைகள் முளரியின் தண்டுகளைக்கொண்டு கூடு அமைக்கும் என்பது தெரிய வருகிறது. அன்றில் பறவைபற்றி முன்னமே விளக்கப்பட்டுள்ளது.

"பெண்ணைமேல் பின்னுமவ் வன்றில் பெடைவாய்ச் சிறுகுரலுக்கு" என்று முன்பே வந்திருத்தலும் நினைவு கொள்க. "தென்னன் பொதியில் செழுஞ் சந்தனக் குழம்பின்" என்பதும் அதே பகுதியில் காணக் கிடக்கிறது. "என்

செய்கேன்'' என்றது தன் ஆற்றாமையை உணர்த்துவதாகும். பெண்ணாய்ப் பிறந்துவிட்டதால் இத்தனை துன்பம் எனறபடி. காமனுக்கு, ''கல்நவில் தோள்'' என்று சிறப்பிக்கின்றனர். அவன் ''கருப்புச்சிலை'' கொல்நவிலும் பூங்கணை தொடுக்கப் பட்டது. ''தமியேன்'' என்று யாரும் ஆதரவற்ற நிலையைக் கூறுகிறார். பூங்கணைகள்: முல்லை, அசோகம், நீலம், மா, முளரி என்பர். மத்தம், தீரம், சந்தாபம், வசீகரணம், மோகனம் எனும் ஐவகைச் செயல்களையும் ஐங்கணைகளாகச் சொல்வர் சிலர். மன்மதனுக்கு, ''கன்னவில் தோள் காமன்'' என்று அடை கொடுத்துக் கூறியிருத்தல் காண்க. கல்நவில் தோள் மன்னரையும் மாய்க்கும் வன்மை படைத்தவன் என்பதால் மன்மதனுக்கு இங்கு இவ்வாறு சிறப்பித்தனர் போலும். மன்மதன் மலர் அம்பு தொடுத்து விடும்பொழுது, ''வாதவனைந்து தன்னுடைய தோள் கழிய வாங்கி'' என்று கூறியிருத்தலும், ''கன்னவில் தோள் காமன்'' என்பதை உறுதிப் படுத்துவதாம். மன்மதனுக்கு ''அநங்கன்'' என்பதே சிறப்புப் பெயர் என்பதை நினைவு கொள்ளல்வேண்டும். சிவபெருமானின் நெற்றிக் கண்ணால் சுடப்பட்டு சாம்பலானவன் மன்மதன். அவனுக்கு உடம்பு இல்லையாதலின் அநங்கன் என்று பேர் பெற்றனன். வல்லார்க்கும் வல்லவனாதலின், ''கன்னவில் தோள் கழிய வாங்கி'' என்று அருளிச் செய்தார்.

... ... ... ... ... ... ... ...பேதையேன
கன்னவிலும் காட்டகத்தோர் வல்லிக் கடிமலரின்
ஒன்னறு வாசமற் றாரானு மெய்தாமே
மன்னும் வறுநிலத்து வாளாங் குகுத்ததுபோல்
என்னுடைய பெண்மையு மென்நலனு மென்முலையும் 180
மன்னு மலர்மங்கை மைந்தன்—கணபுரத்துப்
பொன்மலைபோல் நின்றவன்றன் பொன்னகலம் தோயாவேல்
எண்ணிவைதான் வாளா வெனக்கே பொறையாகி
முன்னிருந்து முக்கின்று மூவாமைக் காப்பதோர்
மன்னு மருந்தறிவீ ரில்லையே—மால்விடையின்
துன்னு பிடரெருத்துத் தூக்குண்டு வன்தொடரால் 185

கன்னியர் கண்மிளிரக் கட்டுண்டு மாலைவாய்த்
தன்னுடைய நாவொழியா தாடும் தனிமணியின்
இன்னிசை யோசையும் வந்தென் செவிதனக்கே
கொன்னவிலு மெஃகில் கொடிதாய் நெடிதாகும்
என்னிதனைக் காக்குமா சொல்லீர்.........

அ - ரை :- கன்னவிலும் காட்டகத்து - கற்காடு, கல் நவிலும் காடு அகத்து வல்லி - வல்லிக்கொடி. கடிமலர் - அன்றலர்ந்த மலர், புது மலர். கடி - புது. நன்னறுவாசம் - நல்நறுவாசம், நல்ல மணம், மணம் கமழ். நறு - மணம். நறு வாசம் - மிகுந்த மணம். மற்று யாரானும் - மேலும் யாருக்கும். எய்தாமே - சென்றடையாமல், அடைய முடியாமல், பயன்படாமல். மன்னும் - அந்த. வறு நிலம் - பயனற்ற நிலம். வெப்பத்தால் பொரிந்து போன நிலம். வாளா - வீணாக. உகுத்தது - கழித்தது; பெண்மை - பெண்மைத் தன்மை. என் நலம் - என் குணங்களும். மென் நலன் - மென்மை குணங்கள். மலர் மங்கை - மலரினின்றும் பிறந்த பிராட்டியார். மன்னும் மைந்தன் - சேர்ந்த எம்பெருமான். கணபுரம் - திருக்கணபுரம், பொன் மலைபோல்- அழகிய மலை போல். அகலம் - மார்பு, அகன்றதாதலின் மார்புக்கானது. தோயா - மார்புடன் முழுமையாகத் தோய்ந்து பொருந்த, மார்புடன் அழுந்தத் தழுவுவதால் தோய்ந்து போகும் நிலை. ஏல் - ஏற்காவிடில். எம்பெருமான் என்னை தழுவாவிடில். வாளா - பயனற்ற, எம்பெருமான் ஏற்காததால் பயனற்ற. இவை - இவ்வுறுப்புக்கள், என் உடலில் உள்ள இம்முலைகள். என் - என்ன பயனுடைத்து. எனக்கே - சேரவேண்டிய எம்பெருமானுக்குப் போய்ச் சேராமல் என்னிடத்திருந்து கொண்டு. பொறை - சுமை. முன் இருந்து - என் கண் முன். மூக்கின்று - முளைத்துக்கொண்டெழுந்து நின்று பருத்திருந்து. முவாமை - முளைத்தெழுந்த முலைகள் வேணாக மேலும் வளர்ந்து முதுமையடையாமல், வீங்காமல். காப்பது - பாதுகாக்க, தடுக்கவல்ல, மன்னுமருந்து - சிறந்த மருந்து. அறிவீர் -

கண்டறிவீர், இல்லையே - கண்டறியப்படவில்லையே. மால் விடை - மோகம் கொண்ட காளை. துன்னு - பெருத் துயர்ந்த, பிடர் - பிடரி. எருத்து - கழுத்தின் முன்பக்கம். தூக்குண்டு - தூக்கப்பட்டு. வன் - வன்மையான. தொடரால் - நீண்ட கயிற்றால். மாலைவாய் - மாலைப்பொழுதில். நா - நாக்கு, மணியின் நாக்கு. ஒழியா - ஓயாமல். ஆடும் - ஆடி ஒலியெழுப்பிக் கொண்டிருக்கும். தனிமணி - சிறந்த மணி. செவிதனக்கே - காதுக்கு மட்டும். கொன்னவிலும் - கொலை செய்யவல்ல. எஃகில் - எஃகாலான வேலாயுதம். கொடிதாய் - கொடியதாக. நெடிது - நீண்டு நீங்காது நின்றது. என் - என்னவழி, இதனைக் காக்குமா - இதினின்றும் காக்குமாறு, காக்கும் வழி. சொல்லீர் - சொல்லுங்கள், சொல்வீர்களா?

வி - ரை:- கல்மயமான கானகத்தில் ஒரு வல்லிக்கொடியின் மலர்ந்த புது மலரின் நல்ல மணம் யாரையும் சென்றடையாது அந்தப் பாலைநிலத்திலேயே வீணாவதுபோல, பேதையாகிய என்னுடைய பெண்மையும், பெண்மை தரும் நற்குணங்களும், என் முலைகளும், மலர் மங்கை பெரிய பிராட்டியுடன் சேர்ந்த எம்பெருமான், திருக்கணபுரத்திலே அழகிய மலைபோல் நின்ற அப்பெருமானின் அழகிய திருமார்பில் அழுந்திப் புணர்ந்து தோய்வதற்கான உறுப்பாகாவிடில் பயனற்ற இவ்வுறுப்புகள் எதற்கு? சேரவேண்டியவரிடத்தில் சென்றடையாது எனக்கே பாரமாய் முளைத்தெழுந்து வீங்கிப் பருக்கும் பொழுது அப்படி முளைத்த இம்முலைகள் மேலும் வளர்ந்து மூப்படையாமல் தடுக்கவல்ல சிறந்த மருந்து கண்டறிந்தீரில்லை. பசுவின் பின் காமங்கொண்டு திரியும் காளை, பெருத்த பிடரியிலே உள்ள முசுப்பிலே தூக்கப் பெற்று, இளம் கன்னியர் கண்டு களிப்புற, வலிமையான கயிற்றினாலே கட்டப்பட்டு மாலைப்பொழுதுதனில், தன்னுடைய நாவானது ஒழியாது ஆடும் மணியின், இன் இசையும் வந்து என் செவிக்கு மட்டும் கொலை செய்வதில் வல்ல வேலினைக் காட்டிலும் கொடூரமாகி நீண்டு நின்றது. இந்தக் கொடுமையினின்றும் தப்பிப் பிழைக்கும் வழிதான் என்ன? சொல்லுங்கள்.

"கன்னவிலும்" என்ற சொல் இங்கு கற்கள் நிறைந்த என்ற பொருளில் வருவது காண்க. "காட்டு அகத்து ஓர் வல்லிக்கடி மலரின் நன்னறு வாசம்" அந்தக் கற்காட்டில் பயனற்றது. ஆதலின், "ஆரானும் எய்தாமே" என்றனர். எய்துதல் என்பது சென்றடைதல். இச்சொல்லால் ஆழ்வார் திருவுள்ளம் மிகத் தெளிவுபடுத்துகிறது, என் பெண்மையும் சென்றடைய இடத்திற்கு சென்றடையாமல் கற்காட்டு வல்லிக் கொடி மலரின் கடிமணம்போல், "வறுநிலத்து ஆங்குவாளா உகுத்தது" என்கிறார், எம்பெருமானுக்குச் சென்று சேர வேண்டிய "என்னுடைய பெண்மையும்" பெண்மை தரும் "என் நலனும்", "என் முலையும்", "கணபுரத்து பொன்மலை போல் நின்றவன்தன் பொன் அகலம் தோயஏல்" என்று எம்பெருமானைச் சேராவிடில் யாது பயன் என்று தன் உறுப்புகளைக் கண்டு நொந்து கொள்கிறாள்.

நாச்சியார் ஒரு பாசுரத்தில் இதனை பெண்மையின் தன் நிலையை, திருமாலிருஞ்சோலை எம்பெருமானை,

"கோங்கலரும் பொழில் மாலிருஞ்சோலையில்
கொன்றைகள்மேல்
தூங்கு பொன் மாலைகளோடு உடனாய்நின்று
தூங்குகின்றேன்
பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியும்
சாரங்கவில் நாணொலியும் தலைப்பெய்வது எஞ்ஞான்று
கொலோ?"

என்று வேண்டி வழிபடுதல் இங்கு நினைவுகூர நல்கும். திருமாலிருஞ்சோலை மலர்கள், மலர்ந்து உதிர்ந்து மாய்ந்து போவது போல் என்று நாச்சியாரின் ஏக்கமும் இங்கு ஒன்றித்திருத்தல் காண்க.

"வாளா இவைஎன்" எம்பெருமானைச் சென்றணையாத இவ்வுறுக்கள் இருந்தும் என்ன பயத்து. "மூக்கின்று முன் இருந்து எனக்கே பொறைஆகி" என்று அவை முளைத்து கண் முன்னால் புடைத்திருந்து, எனக்கே பாரமாயிற்றே. அவை முளைத்து முழுமையாக வளர்ந்து அவன் மார்பில் பொருந்தா

முன் முதுமையாகாதிருக்க மருந்தொன்றறிவீர் இல்லை என்று மாம். அதாவது முலைகள் முளைத்துவிட்டன. பருத்தும் பெருத்தும் உள்ளன. ஆனால் அவை சேரவேண்டிய இடத்திற்கு இன்னமும் சேரவில்லை. அவை சேரவேண்டிய இடத்திற்குச் சென்று சேராமுன் முதுமையெய்திடாது காத்திட வேண்டும். அதற்காகிலும் மருந்தொன்று காண்பீர் என்ற பொருளிலும் அமைந்துள்ளது காண்க.

இளம் பசுவைப் பின்தொடரும் காளையின் எழில் நடையை; பீடுநடையைக் கண்டுகளித்தவராய் "மால்விடை" என்று ஆழ்வார் திருவாய் மலர்வது காண்க. காளை கழுத்தில் கட்டப்பட்ட மணியுடன் இளம் மாட்டின்மீது மோகம் கொண்டு திரியும். கழுத்தில் அணியப்பட்டுள்ள மணி எழுப்பும் ஒலியால் அந்தக் காளையைக் கன்னியர் கண்குளிரக் கண்டு மகிழ்வர். ஓயாமல் ஆடி ஒலித்துக் கொண்டிருக்கும் ஒலி காதில் பாய்வது "கொல்நவிலும் எஃகில் கொடிது ஆய் நெடிது ஆகும்" என்று கொடிது கொடிது எஃகால் அமைந்த ஆயுதங்களில் கொடிய ஆயுதத்தினும் கொடியாகப் பாயும் அந்த மணி ஓசை. அது நீங்கா ஓசை ஆதலின் "நெடிது. ஆகும்" என்றனர். பாயும் ஆயுதத்தைத் தடுத்து நிறுத்திவிடலாம். அந்த மணி ஓசையை நிறுத்த யாரால் முடியும் அதுவோ காமம் கொண்ட காளை. தன் பெண்ணைத் தொடர்ந்து திரிகிறது. ஆனால் நானோ, "கன்னவிலும் காட்டகத்தோர் வல்லிக்கடி மலரின் நன்னறு வாச"மெனக் கேட்பாரற்றுப் போனேன் என்றபடி

... ... ... ... ... ... .. இதுவிளைத்த
மன்னன் நறுந்துழாய் வாழ்மார்பன் மாமதிகோள்
முன்னம் விடுத்த முகில்வண்ணன் காயாவின்
சின்ன நறும்பூந் திகழ்வண்ணன் வண்ணம்போ
லன்ன கடலை மலையிட் டணைகட்டி 195
மன்ன னிராவணனை மாமண்டு வெஞ்சமத்துப்
பொன் முடிகள் பத்தும் புரளச் சரந்துரந்து
தென்னுலக மேற்றுவித்த சேவகனை—ஆயிரக்கண்

மன்னவன் வானமும் வானவர்தம் பொன்னுலகும்
தன்னுடைய தோள்வலியால் கைக்கொண்ட தானவனைப்
பின்னோ ரரியுருவ மாகி யெரிவிழித்துக்
கொன்னவிலும் வெஞ்சமத்துக் கொல்லாதே—வல்லாளன்
மன்னு மணிக்குஞ்சி பற்றி வரவீர்த்துத்
தன்னுடைய தாள்மேல் கிடாத்தி—அவனுடைய
பொன்னகலம் வள்ளுகிரால் போழ்ந்து புகழ்படைத்த
மின்னிலங்கு மாழிப் படைத்தடக்கை வீரனை.

அ - ரை:- இது விளைத்த - இத்தகு நிலைக்கு என்னை உட்படுத்திய. மன்னன் - எம்பிரான். எனக்குத் தலைவன். நறுந்துழாய் - மணம் கமழ் துளசி. வாழ்மார்பன் - நிலைத் திருக்கும் மார்பையுடையவன். என்றும் அணியப்பெற்ற மார்பையுடையவன். மாமதி - முழுமதி. கோள் - துன்பம், தீமை. விடுத்த - நீக்கிய. முகில்வண்ணன் - கார்மேகவண் ணன், காளமேக வண்ணன். காயா - காயா மலர். நறும்பூ - மணம் வீசும் மலர். திகழ் - திகழும். வண்ணம்போலன்ன கடல் - தன் வண்ணம் போன்ற வர்ணமுடைய கடல். மலை இட்டு - மலையின் கற்களைப் போட்டு. அணைகட்டி - பாலம் அமைத்து, பாதை அமைத்து. மன்னன் இராவணனை - இராவணனான அரக்கர் குல மன்னன். மாமண்டு - யானை குதிரை ஆகிய படைகள் நெருங்கியிருந்து சண்டையிடும். வெம்சமத்து - கொடிய போர்க்களத்தில். சமர் - போர். பொன்முடிகள் - அழகிய மணிமுடிகள். புரள - தரையில் புரண்டோட. சரம்துரந்து - அம்புகளைச் செலுத்தி. தென் னுலகம் - எமன் உலகம். ஏற்றுவித்த - அனுப்பி வைத்த. சேவகன் - மக்கள் நலம் காக்கும் தெய்வமான எம்பெருமான். ஆயிரம் கண் மன்னவன் - இந்திரன். தோள் வலியால் கைகொண்ட தானவன் - வெற்றி கொண்டவன். தானவன் - அசுரன், வித்யாதரன். அரி உருவம் ஆகி - நரசிங்க அவதார மெடுத்து. எரிவிழித்து - சுட்டெரிப்பது போன்று விழித்துப் பார்த்து. கொல்நவிலும் - கொல்லும். வெம்சமத்து - கொடிய போரில். கொல்லாதே - கொல்லாது விடுத்து. வல்லாளன் -

வல்லமை மிக்கவன். மணி மின்னும் குஞ்சி - மணிமகுடம் பதித்த தலைமயிர். குஞ்சி - ஆண் தலைமயிர். வர ஈர்த்து - தலைமயிர் அற்று வரும்படி இழுத்து. தாள்மேல் கிடாத்தி - கால்களின்மேல் போட்டுக்கொண்டு. பொன் அகலம் - அழகிய மார்பு. வள் - கூர்மையான. உகிர் - நகம். போழ்ந்து - பிளந்து. மின் இலங்கும் - மின்போல் ஒளிக்கும். ஆழிபடை தடகை - சக்ராயுதத்தையுடைய கைகள். வீரன் - வீரனாகக் கர்ச்சித்த எம்பெருமான்.

வி - ரை:- இப்படிப்பட்ட துன்பங்களுக்கு என்னை ஆட் படுத்திய, மணம் கமழ் துளசி மாலை வாழும் மார்பையுடை யவன். முன்பொருநாள், முழுமதியின் துன்பத்தைப் போக்கி யவன். கார்மேக வண்ணன், மணம் வீசும் சிறிய கயா மலரின் சிறந்து விளங்கும் நிறத்தையுடையவன், தன் நிறம் போன்ற நிறத்தையுடைய கடலில், மலைகளில் உள்ள கற்களைப் போட்டு இலங்கைக்குப் பாதையமைத்து, யானை, குதிரை முதலியன நெருங்கிப் போர் செய்த கொடும் போர்க்களத்தில் அரக்கர் குல மன்னன் இராவணனின் அழகிய மணிமுடிகள் பத்தும் தரையில் புரளும்படியாக அம்புகளைப் பொழிந்து அவனை எமலோகம் ஏற்றி அனுப்பிய, பக்தர்களிடத்து அன்பு செலுத்தி அவர்கட்கு சேவகனாகவும் இருக்கும் எம்பிரான், ஆயிரம் கண்களையுடைய தேவேந்திரன் உலகும், வானவர் களின் பொன்னாட்டையும், தன் வலிமையால் கைப்பற்றிய இரண்யனை, கொல்லும் போர்க்களத்தில் அவனைக் கொல் லாமல், சிறிது காலம் பொறுத்து, நரசிங்க அவதாரமெடுத்து, நெருப்புப் பொறி பறக்க விழித்துப் பார்த்து, மிகுந்த வலிமை மிக்க அந்த அசுரனுடைய மணிமகுடம் பதித்த தலைமயிரைப் பிடித்திழுத்துத் தன் திருவடிகளின்மேல் சாய்த்துக்கொண்டு, அவன் அழகிய மார்பைத் தன் கூர்மையான நகங்களால் பிளந்து புகழ் பெற்றவனாய், மின்போல் ஒளிரும் சக்கராயுதத் தைத் தடக்கையில் உடைய வீரனாகக் கர்ச்சித்து எழுந்த எம்பெருமானை.

அந்த நாரணன் மார்பிலிருந்து துழாய் மாலை நீங்காத வரம் பெற்றதாதலின் "நறுதுழாய் வாழ் மார்பன்" என்றனர், "மாமதிகோள் முன்னம் விருத்த" என்றது சந்திரனின் துன்பத்தை நீக்கிய என்பதாம். கண்ணன், முகில்வண்ணன், காயாவின் பூதிகழ்வண்ணன். அவன் வண்ணம் போன்றது கடல். ஆகிய இம்மூன்றினையும் ஒன்றிற்கொன்று ஒப்பிட்டுக் காட்டியிருத்தல் காண்க. குரங்கரசன் சுக்கிரீவன் உதவியுடன் இலங்கைக்குப் பாதையமைத்து இலங்கையில் இராவணவதம் இங்கு சில சொற்களால் நிரம்பி வழிகிறது. "மலையிட்டணை கட்டி மன்னன் இராவணனை மாமண்டு வெஞ்சமத்துப் பொன்முடிகள் பத்தும் புரள" அவனை எமலோகத்துக்கு அனுப்பிய செய்தியை, "தென்னுலக மேற்றுவித்த" எனச் சிறப்பிக்கிறார். இராவணனை வழியனுப்பிவிட்டதால் தேவர்களுக்கும், முனிவர்களுக்கும் துன்பம் நீக்கிய சேவகனாகத் திகழ்கிறான் என்பதனால், "சேவகனை" என்றனர். சேவகம் என்பதை வீரத்தைக் குறிக்குமாதலின் "சேவகனை" என்றது வீரனை எனினுமாம். மாமண்டு என்றதால், யானை, குதிரை முதலிய படைகள் ஒன்றித்துப் போரிட்டன என்பதாகத் தெரிகிறது. "மா" என்ற ஓர் எழுத்துச் சொல்லால் யானை, குதிரை இருபடைகளையும் ஒருங்கு சேர்த்துக் கூறினர் என்பதாம். இராமபிரான் செலுத்திய அம்புகள் இராவணன் தலைகள் பத்தையும் துண்டித்தது மட்டுமல்லாமல் அவன் தரித்திருந்த மணிமகுடங்கள் அம்புகள் பாய்ந்த வேகத்தில் புரண்டோடின என்பதை உணர்த்தவே, "புரளச் சரந்துரந்து" என்றனர். இராவணவதம் செய்தபொழுது அவன் மீண்டும் மீண்டும் உயிர் பெற்றதால் அவன் மறுபடியும் உயிர் பெறாதிருக்க அவன் உயிரைத் "தென்னுலகம் ஏற்றுவித்த சேவகன்" என்றனர். நிச்சயப்படுத்தி டிக்கட வாங்கி அனுப்பிவிட்ட ஒரு நிகழ்ச்சியாகக் காண்பிக்கிறார். மறுபடியும் உயிர் பெறுதல் இல்லையென்றபடி.

இராவணனைப் போரில் கொன்ற நாரணன் இரணியனை நரசிங்கவதாரத்தில் போரில் கொல்லாது தன் திருக்

கால்களின்மேல் சாய்த்து, நெஞ்சைப் பிளந்து வெற்றி முழக்க மிட்டெழும் காட்சியை, "கொன்னவிலும் வெஞ்சமத்துக் கொல்லாதே தன்தாள்மேல் கிடாத்தி பொன்னகலம் வள்ளுகிரால் போழ்ந்து" என்று கூறுகிறார். இங்கு எம்பெருமானை, "மின்னிலங்கு மாழிப்படைத் தடக்கை வீரனை" என்கிறார். இரண்யன் வலிமை மிக்கவன். ஆயிரக்கண் மன்னவன் வானமும் வானவர்தம் பொன்னுலகும், தன்னுடைய தோள்வலியால் கைக்கொண்டதானவன்" என்று இரண்யனின் வலிமையும் அவனை வென்றதால் "வீரனை" என்றும் எம்பெருமானைப் போற்றிப் புகழ்கிறார் ஆழ்வார் பெருந்தகை.

"அளந்திட்ட தூணை அவன்தட்ட ஆங்கே
வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்கவுருவாய்
உளந்தொட்டிரணியன் ஒண்மார்வகலம்
பிளந்திட்ட கைகளால் சப்பாணி
பேய்முலையுண்டானே! சப்பாணி"

என்று எம்பெருமானுக்கு பெரியாழ்வார் திருமொழியில் சப்பாணிப் பருவம் காட்டியதும் காண்க.

இரண்யன் ஓர் வரம் பெற்றிருந்தான். தேவர், மனிதர், விலங்கு முதலிய பிராணிகளாலும், ஆயுதங்களாலும். பகலிலும், இரவிலும், பூமியிலும், ஆகாயத்திலும், வீட்டின் அகத்திலும் புறத்திலும் தனக்கு மரணம் இல்லையென வரம் பெற்றிருந்தான். ஆதலின் அவனைப் போர்க்களத்தில் கொல்லாது, வாசற்படியில் தன் மடிமீது வைத்துக்கொண்டு அந்திப் பொழுதில் திருக்கை நகங்களால் பிளந்தருளினார். இவ்வரக்கனைக் கொன்றதால் பிரகலாதாழ்வாரின் துன்பம் தீர்ந்தது.

ஆழ்வார்கள் இராமாவதாரச் சிறப்பை வர்ணிக்கையில் இராவணவதத்தை ஆங்காங்கு நினைவூட்டிச் செல்வது காணலாம்.

காரார் கடலையடைத்திட்டு இலங்கைபுக்கு
ஓராதான் பொன்முடி ஒன்பதோடொன்றையும்
நேரா அவன்தம்பிக்கே நீள ரசிந்த
ஆராவமுதனைப் பாடிப்பற அயோத்தியர்வேந்தனைச்
பாடிப்பற''

என்று பெரியாழ்வாரின் திருமொழியில் பாடிப் பரவசப்படுவதும் நம் நினைவிலோடுகிறது. கம்பநாடனும் ராம நாமத்தை

''மும்மை சால் உலகுக்கெல்லாம் மூல மந்திரத்தை
இராமன் என்னும்
செம்மை சேர் நாமம் தன்னைக் கண்களில் தெரியக்
கண்டான்''

என்று வாலி கண்ட காட்சியை சொல்லி மகிழ்கிறார். ராம அவதாரத்தில் ராமநாமம் சிறப்புப் பெற்றது ஏனெனில் அந்த ராமநாமம் தான் வால்மீகிக்கு ராமாவதாரத்தை எழுத வைத்தது. மறந்து போன அந்த நாமம் ''மரா''வெனப் பிறந்து 'ராம'' எனப் பொழிந்து உலகப் பெருங்காப்பியமாய்த் திகழ வைத்தது. ஆதலினால்தான், ''மும்மைசால் உலகுக்கெல்லாம் மூலமந்திரம்'' ராமநாமம் என்று வாலி தன்னையும் கொல்ல வலிமை மிக்கவன் யாரென அவன் மார்பில் தைத்த அம்பைப் பிடுங்கிக் கண்டபொழுது அந்த நாமம் அவனை களிப்பில் ஆழ்த்தியது.

மின்னிவ் வகலிடத்தை மாமதுநீர் தான் விழுங்கப்
பின்னுமோ ரேனமாய்ப் புக்கு வளை மருப்பின்
கொன்னவிலும் கூர்நுதிமேல் வைத்தெடுத்த கூத்தனை
மன்னும் வடமலையை மத்தாக மாசுணத்தால்
மின்னு மிருசுடரும் விண்ணும் பிறங்கொளியும்
தன்னி னுடனே சுழல மலைதிரித்தாங்கு
இன்னமுதம் வானவரை யூட்டி அவருடைய
மன்னும் துயர்கடிந்த வள்ளலை..... 102

சி—9

அ - ரை: மன்னிவ்வகலி ட த் தை த - மன்னுஇவ் அகல் இடத்தை. எல்லாவற்றையும் தன்னகத்துக்கொண்ட இந்த அகன்ற பூவுலகை. மாமுதுநீர் - பெருங்கடல்; முதுநீர் - கடல். விழுங்க - உலகம் பிரளய நீரால் மூழ்கப்பட. எனம் - பன்றி. ஆய்புக்கு - அவ்வாறு மூழ்கிப்போன நீரினுள் புகுந்து. வளை மருப்பின் - வளைந்த அதன் கொம்பின். கொல் நவிலும் - கொல்லும் தன்மையுடைய. கூர்நுதி - கூர்மையான நுனி. வைத்தெடுத்த - வைத்தெடுத்து வந்த. கூத்தன் - குடக்கூத்தன், குடமாடும் கூத்தன் எம்பெருமான். வடமலை - மந்தாரமலை. மன்னும் - அழுத்தமாக நாட்டி, மத்துஆக - தயிர் கடையப் பயன்படும் மத்துபோல். மாசுணம் - பெரிய பாம்பு, வாசுகியெனும் பாம்பு. மின்னும் - ஒளிக்கும். இருசுடர் - சூரியன் சந்திரன். விண்ணும் பிறங்கொளியும் - ஆகாயமும் மற்றும் பிற ஒளிகளும். தன்னுடன் சுழல - வாசுகியின் உதவியால் பாற்கடலைக்கடைந்தபொழுது இவையனைத்தும் ஒளி வீசிச் சுழல. மலை சுழற்றி - மந்தரமலையைச் சுழற்றி. வானவரை - தேவர்களை அமுதம் - தேவாம்ருதம். ஊட்டி - உண்ண வைத்து. மன்னுதுயர் - நிலைத்திருந்த துயர், நீங்காத துயர். கடிந்த - கடிந்தோட்டிய, போக்கிய, நீக்கிய. வள்ளல் - வள்ளல், கேட்டவர்கட்குக் கேட்டபடி வரும் எம்பிரான் நாரணன்.

வி - ரை;- எல்லாம் நிரம்பப் பெற்ற பரந்த இவ்வுலகினை பிரளயம் வந்து மூழ்கிட, அதன்பின், ஒரு பன்றியின் உருவாய் அந்த நீரினுள் புகுந்து தன் வளைந்த கொம்பினால், கொல்லும் கூர்மையான நுனியின்மீது பூமியை மீட்டு வந்த குடக்கூத்தன் எம்பிரான் நாரணன். அழுத்தமாக நாட்டப்பட்ட மந்தாரமலையை மத்தாகக்கொண்டு, வாசுகியெனும் பெரும் பாம்பைக் கயிறாகச் சுற்றி, மின்னும் இருசுடர்களான கதிரவனும், சந்திரனும், விண்ணும் மற்ற ஒளிக்கும் பொருட்கள் யாவும் சுழலும்படி மந்தாரமலையைச் சுழற்றி பாற்கடலைக் கடைந்து, அந்தத் தேவர்களுடைய நெடுநாளைய துக்கத்தைப் போக்கிய வள்ளல் எம்பிரான்.

''மன்னிவ்வகலிடத்தை மாமது நீர்தான் விழுங்க'' என்றது பாத்மகல்பத்தைப் பற்றிய பிரளய காலத்தை யென்றாலும் இரண்யாட்சன் என்னும் அசுரன் பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துக் கடலினுள் மூழ்கி மறைந்துகொள்ள, தேவர் முனிவர் யாவரும் திருமாலிடம் வந்து வேண்ட திருமால் வராக அவதாரம் எடுத்து கடலினுள் புகுந்து அவ்வசுரனை வென்று பூமியைத் தன் கூர்மையான மூக்கினால் தாங்கி வந்து பழையபடி விரித்தருளினார் என்பதாம். பின்பு பூமாதேவியை மோகித்துப் புணர்ந்து திருமாலுக்கும் பூமிப்பிராட்டிக்கும் பிறந்தவனே நரகாசுரன் என்பதாகக் கதை தொடர்கிறது. பன்றிக்குக் கொம்பு இல்லை. ஆனால் மிகவும் வயதான பன்றிகட்கு பல் நீண்டு கொம்பெனக் காணப்படும். பூமிப் பிராட்டியைப் பன்றியின் மூக்கால் சுமந்து வந்தார் என்றே கொள்ளவேண்டும். பன்றியின் மூக்கும் கொம்பு போன்று வளைந்து கூர்மையாகக் காணப்படும் ஆதலின், ''வளை மருப் பின்'' என்றும், ''கொல் நவிலும் கூர்நுதிமேல்'' என்றும் கூறி னர், முதுநீர் என்றால் கடல் என்பது பொருள். எல்லா உயி ரினங்களும் நீரினின்று தோன்றுமாதவின் ''முதுநீர்'' என்றும் 'மாமுதுநீர்'' என்றும் அடைகொடுத்துச் சிறப்பித்தனர். எம்பெருமானை இங்கு, ''கூத்தனை'' என்று கூறிக் கொண் டாடுகிறார் திருமங்கையார். எம்பெருமான் ஆடிய கூத்தை சிறிய திருமடலில் பெரியதாகப் படம் பிடித்து,

''பாரோர்க ளெல்லாம் மகிழப் பறைகறங்கச்
ஆராரெனச் சொல்லி யாடும்.....''

என்று பாடி கற்றோரைக் களிப்பிலாழ்த்தியது இங்கு நினைவு கூர்க, ஓங்கு பரிபாடலிலும் இதே செய்தியை ஆங்கு கொணர்ந்தோமென்பதை ஈங்கு நினைவு கூர்தல் மேலும் இனிமை சேர்க்கும்.

''குடமாடு கூத்தன் கோவிந்தன் கோமிறை செய்துஎம்மை
உடைமாடு கொண்டான் உங்களுக்கு இனியொன்று
போதுமே''

என்ற நாச்சியார் வாக்கும் இங்கு நினைவு கொள்க.

திருமங்கையார் வராக அவதாரத்தைப்பற்றி இப்பகுதியில் கூறினார் என்பதாகச் சொல்ல இயலாது. இரண்யாட்சன் பூமியைப் பாயாகச் சுருட்டிக் கடலில் மறைத்துக் கொண்டான் என்பதே கதை இதனை,

"புண்ணியந் தெய்வதமுஞ் சேர்பூ லோகத்தைப்
புற்பாய்போற் சுருட்டிக் கொண்டே பாதாளம்
நண்ணிரணி யாட்சனைப்பின் தொடர்ந்தே யேகி
நலமுடனே யாதிவராகத் தேவாகி
மண்ணுலக மனைத்துமிடந் தெடுத்தோர் கோட்டில்
வைத்துவர வவன்மறிக் வதைத்துத் தேவர்
எண்ணவுல கீரேழும்படியப் பண்ணா
யிறைவா நாராயணனே யெம்பிரானே!"

என்றுமொரு தனிப் பாடலும் தெளிவுபடுத்தும் என்றாலும் 'மாமுதுநீர் விழுங்க" என்றதால் இது பாத்மகல்பத்தைப் பற்றிய பிரளயத்தின் இறுதியில் பூமிப்பிராட்டியை மீட்ட செய்தியை ஆழ்வார் திருவுள்ளம் கொண்டது என்பதாம்.

இப்பகுதியில் வரும் அடுத்த செய்தி எம்பெருமான் அசுரர் உதவி கொண்டு பாற்கடலைக் கடைந்து அமுதம் பெற்று தேவர் துன்பத்தைப் போக்கியது. "பாற்கடல்" என்ற சொல் இங்கு இல்லை. "மன்னு வடமலையை மத்தாக" என்றும். "மாசுணத்தால்......மலைதிரித்தாங்கு" என்று வருவதாலும் "இன்னமுதம் வானவரை ஊட்டி" என்பதாலும் பாற்கடலைக் கடைந்து அமுதுபடைத்தருளியதை ஆழ்வார் திருவுள்ளமென்பது தெளிவு, "வானவரை இன்அமுதம் ஊட்டி,.....மன்னும் துயர் கடிந்த" என்பது தேவர்களின் நீண்டகாலத் துயர் தீர்த்தார் எம்பிரான் என்பதாம்.

ஒரு காலத்து விஷ்ணு உலகு சென்று திருமகளைப் புகழ்ந்து பாடி, அவளால் ஒரு மலர்மாலை பரிசாகப் பெற்ற ஒரு வித்தியாதர மகள், மகிழ்ச்சி பொங்க அம்மலர்மாலை

யைத் தன் வீணையில் சூட்டிக்கொண்டு தேவர் உலகு வழியாக வர, துர்வாச முனிவர் எதிர்பட்டு அவளை வணங்க; அம் மங்கை மகிழ்ந்து அம்மலர்மாலையை முனிவனுக்கீந்தாள். அதன் பெருமையையுணர்ந்த முனிவன் அதனைச் சிரமேற் கொண்டு தேவலோகம் வந்தபொழுது ஆங்கு இந்திரன் தன் ஐராவத யானையின் மேல் உல்லாசமாக வந்துகொண்டிருக்கை யில் தான் கொண்டு வந்த மலர்மாலையை இந்திரனுக்குக் கொடுத்தான். இந்திரன் அதனை மாவட்டியினால் வாங்கி அந்த யானையின் பிடரிமேல் வைத்தான். யானை தன் துதிக்கையால் பிடித்திழுத்து கீழெறிந்து காலால் மிதிக்கக் கண்ட முனிவன் சினங்கொண்டு இந்திரனை நோக்கி, செல்வச் செருக்குற்ற உன் செல்வமனைத்தும் கடலில் ஒழிந்துவிடச் சாபமிட்டனர். உடனே தேவர்கள் செல்வம் கடலில் ஒழிய அசுரர் வந்து சண்டையிட்டுத் தேவர்களை வென்றனர். பின்பு இந்திரன் தேவர்களுடன் திருமாலைச் சரணடைந்து தாங்கள் இழந்த செல்வமனைத்தும் பெற்றுத் தர வேண்ட, திருமாலும் அசுரர்களின் துணைகொண்டு மந்தாரமலையை மத்தாக நட்டு வாசுகியென்னும் பாம்பைக் கயிறாகக் கட்டி பாற்கடலைக் கடைந்தபொழுது, அப்பொழுது மத்தாகிய மந்தாரமலை கடலில் அமிழ்ந்து போக திருமால் பெரியதொரு ஆமை வடிவ மெடுத்துக் கடலுக்குள் சென்று தனது முதுகோட்டின்மீது அம்மலையின் அடிப்பாகத்தைத் தாங்கி மலை கடலில் அழுந்தி விடாமற் காத்தனர்.

கடல் கடைந்தபொழுது, அசுரர்கள் வாசுகியின் தலை யைப் பிடித்துக் கொண்டும், தேவர்கள் அதன் வாலைப் பிடித் துக்கொண்டும் இழுத்துப் பிடித்துக் கடைய வேண்டிய வல்லமையில்லாமையால் அதுகண்ட மகாகூர்மமாய் மந்தர மலைக்கு ஆதாரமாக இருந்த திருமால் ஒரு திருமேனி கொண்டு அசுரர் பக்கமும், மற்றுமொரு திருமேனி கொண்டு தேவர் பக்கத்திலுமிருந்து வாசுகியின் வாலையும் தலையை யும் பிடித்திழுத்துக் கடைந்தபொழுது, திருமால் தந்வந்திரி யெனும் தேவ உருக்கொண்டு,அமிருதம் நிரம்பிஓம் கமண்டலத்

தைக் கையிலெடுத்துக்கொண்டு சமுத்திரத்திலிருந்து தோன்றியது கண்ட அசுரர்கள் அம்ருதமிருந்த கும்பத்தைப் பிடுங்கிக் கொள்ள, திருமால் ஒரு பெண் உருக்கொண்டு அசுரர்களை வஞ்சனையால் ஏமாற்றி அமுதத்தைக் கைக்கொண்டு அமரர்கட்கு மட்டும் தந்து தகிழ்ந்தனர் என்பது அறியத்தக்கது.

மந்தாரமலையை மத்தாகக்கொண்டதை, "மன்னும் வடமலையை மத்தாக" என்றனர். தேவர்கட்கு மட்டும் அமுதம் படைக்கப்பட்டது என்பதை, "வானவரை இன்அமுதம் ஊட்டி" என்றனர். "மன்துயர் கடிந்த" என்பது தேவர்கள் செல்வம் யாவுமிழந்து மீண்டும் தேவ அமிர்தம் பெற்றதை மேலே விரித்தது காண்க, "வள்ளலை" என்றது தேவர்கட்கு வேண்டிய செல்வமனைத்தும் திருப்பிக் கொடுத்ததைக் குறிக்கும். எம்பெருமான் கேட்பவர்கட்குக் கேட்டபடி வந்தருளுவானாதலின் "வள்ளல்" என்றனர்.

உதாரணமாக கஜேந்திராழ்வார் தெய்வம் யாதென்று பெயர் குறிப்பிடாது "ஆதிமூலமே" என்று பொதுவாகக் கூப்பிட்டவுடனே விரைந்தோடி வந்து கொடிய முதலையினின்று அதனைக் காத்தனன் எம்பிரான் என்பதை,

"நாயக ராத்திரியுஞ் சிலதேவர்க்கு நாணிலைகொ
றுயரக ராத்திரிமூல மெனாமுனந்துத் திப்பணிப்
பாயக ராத்திரி மேனியம்மான் பைம்பொன் வேங்கடவன்
நீயக ராத்திரி சக்கரத்தாற் கொன்றசீர் கண்டுமே"

என்று திருவேங்கடத்தந்தாதியில் வருவதும் எம்பெருமான் கேட்காமுன்னும் எழுந்தருளித் துன்பம் தீர்ப்பவன் என்பதுவுமாம்.

"நாற்றிசை நடுங்க அஞ்சிறை பறவை
ஏறி, நால்வாய் மும்மதத் திருசெவி
ஒருதனி வேழத் தரந்தையை ஒருநாள்
இருநீர் மடுவுள் தீர்த்தனை....."

என்று திருமங்கையாழ்வார் தன் "திருவெழு கூற்றிருக்கை"யில் போற்றியிருத்தலும் காண்க,

எம்பெருமானின் இப்பெருநிலையை பெருமையை எல்லாமே அவன், அவனே எல்லாம் என்பதனை,

"நின், வெம்மையும் விளக்கமு ஞாயிற்றுள
நின், தண்மையுஞ் சாயலுந் திங்களுள
நின், சுரத்தலும் வண்மையு மாரியுள
நின், புரத்தலு நோன்மையு ஞாலத்துள
நின், நாற்றமு மொண்மையும் பூவையுள
நின், தோற்றமு மகலமு நீரினுள
நின், உருவமு மொலியுமா காயத்துள
நின், வருதலு மொடுக்கமு மருத்தினுள"

என்று விளக்குவது ஓங்கு பரிபாடல் கடுவனிளவெயினனார் பாட்டு. உரையாசிரியரின் "இலக்கியத்தில் கடவுள் வாழ்த்து" எனும் நூலில் காணும் திருமால் பற்றிய பாடல்கள் உரையுடன் கலந்து பருகும்பொழுது தெவிட்டாது தித்திப்பது காணலாம். சுவைத்துப் பாருங்கள்.

... ... ... ... மற்றன்றியும்
தன்னுருவ மாரு மறியாமல் தானங்கோர்
மன்னும் குறளுருவின் மாணியாய்—மாவலிதன்
பொன்னியலும் வேள்விக்கண் புக்கிருந்து போர்வேந்தர்.
மன்னை மணங்கொள்ள வஞ்சித்து நெஞ்சுருக்கி
என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடிமண்
மன்னா தருகென்று வாய்திறப்ப—மற்றவனும்
என்னால் தரப்பட்ட தென்றலுமே அத்துணைக்கண்
மின்னார் மணி முடிபோய் விண்தடவ—மேலெடுத்த
பொன்னார் கனைகழற்கா லேழுலகும் போய்க்கடந்தங்கு
ஒன்னா வசுரர் துளங்கச் செலநீட்டி
மின்னிவ் வகலிடத்தை மாவலியை வஞ்சித்துத்
தன்னுலம் மாக்குவித்த தாளானை.........

அ - ரை:- மற்றன்றியும் - மற்று அன்றியும், மேலும். ஆரும் - யாரும். தன்னுருவமாரும் - தன் உருவத்தை யாரும்,

அறியாமல் - தெரிந்து கொள்ளாமல். மன்னும் - பொருந்திய. குறள் உரு - குள்ள உரு, குள்ளன். மாணி - பிரமசாரி, குறள் உரு கொண்டவன். மாவலி - மகாபலி. பொன் இயலும் வேள்வி - பொன் முதலியன தர்மம் செய்யும் யாகத்திடை. புக்கிருந்து - சென்றிருந்து. மனம் கொள்ள - நம்பும்படியாக. வஞ்சித்து - சூதால் மயக்கி. நெஞ்சு உருக்கி - அவன் மனம் கனிந்து போக. பாதத்தால் - காலடிகளால். அளப்ப - அளந்து கொள்ளும்படி. மூவடிமண் - மூன்றடி நிலம். வாய் திறப்ப - திருவாய் மலர்ந்தருள. தரப்பட்டதென்றலும் - தந்தோமென்று சொன்னவுடன். இத்துணைக்கண் - அந்த நொடிப் பொழுதில். மின்ஆர் மணிமுடி - ஒளிரும் அழகிய மணிகள் பதித்த முடி. விண்தடவ - விண்ணைத் தொடுமள வுக்கு உயர்ந்து நிற்க. மேல் எடுத்த - மேலே தூக்கியருளிய. பொன்ஆர் - பொன்னால் செய்யப்பட்ட. கனைகழல்கால் - ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த பாதம். ஏழ் உலகும் போய் கடந்து - மேல் உலகம் ஏழும் சென்று கடந்து. அங்கு ஒன்னா - அங்கு தங்கியிருந்த. அசுரர் துளங்க - அசுரர்கள் துன்பப்பட, வருந்த, நடுங்க. செலநீட்டி - நீண்டு பரவச் செய்து. மாவலி - மகாபலி. வஞ்சித்து - தந்திரத்தால் வஞ்சித்து. மன்னுஇவ் அகலிடத்தை - அகன்ற இவ்வுலகத்தை தன் உலகம் - தன்னுடைய உலகமாக, ஆக்குவித்த - ஆக்கிக்கொண்ட. தாளானை - பக்தர்களின் கண்கள் எப்பொழுதும் மொய்த்துக் கொண்டிருக்கும் கமலபாதங்களையுடையவனை.

வி - ரை:- மேலும் தனது உருவத்தை யாரும் அறியாத அளவுக்குத் தான் ஒரு குள்ள பிரமச்சாரியாக வேடம் பூண்டு மகாபலி நடத்திக்கொண்டிருந்த பொன்தானம் செய்யும் யாகம் நடக்கும் இடத்திற்கு எழுந்தருளி போர் செய்வதில் வல்லவ னான அந்த மன்னர் மன்னன் மகாபலி நம்பும்படியாக மயக்கி அவன் மனதை உருக்கி யாகம் செய்திட என்கால்அடியால்நானே அளந்துகொள்ளும்படி மூவடி நிலம் வேண்டுமென திருவாய் மலர்ந்து வேண்ட, மாவலியும் அப்படியே மூவடி நிலம் கொடுக் கப்பட்டது என்று சொன்னவுடனேயே ஒளிரும் மணிமகுடம்

வானைத் தொட எழுந்து பொன்னாலான வீரக்கழல் அணிந்த திருவடியொன்றினை உயர்த்தியருளி மேல் உலகு யாவற்றையும் தாண்டி, அந்த யாக பூமியில் உள்ள நமுசி முதலிய பகையசுரர்கள் துன்பமடையும்படி நீண்டு பரந்து வியாபிக்கச் செய்து மகாபலியை வஞ்சித்து பரந்து விரிந்த இப்பூவுலகை தன்னுடைய உலகமாக ஆக்கிக்கொண்ட தேவர்களும் பக்தர்களும் போற்றும் திருவடிகளையுடையவனாய்.

வாமன அவதாரத்தில் திருமால் ஆரும் அறியாத மிகவும் குள்ளமான உருக்கொண்டனர், "ஆரும்" என்ற சொல் சிற்றூர்களில் வழக்கில் உள்ள சொல். ஆதலின், "ஆரும் அறியாமல்" என்றனர். குறள் உருவு என்றது குள்ளமான உருவம். "கூழைக்கருப்பன்" என்ற தெய்வம் எங்கள் குல தெய்வம் என எங்கள் பாட்டி சொல்லக் கேள்விப்பட்டுள்ளேன். அதன் பொருள் அப்பொழுது தெரியாது. எம்பெருமானை வாமனாக வணங்கியிருந்திருக்கின்றனர் எம்மூதாதையர் என்பது தெரிய வருகிறது. ஒவ்வொரு ஆண்டும் அந்தக் கோயிலுக்குச் சென்று பலி கொடுத்து சுவாமி கும்பிட்டு வரும் பழக்கம் இருந்தது. அந்த வாமன் உருக்கொண்ட எம்பெருமானை "மன்னும் குறள் உருவின் மாணி ஆய்" என்றனர் மகாபலி வலிமை மிக்கவன். பொன் இயலும் வேள்வி ஒன்று நடாத்தியிருக்கையில் எம்பிரான் இதுதான் சமயமென நுழைந்து விடுகிறார். மிகவும் குள்ளமான உருக்கொண்டபிரானுக்கு மூன்றடி நிலம் என்பது ஒன்றுமில்லையென்ற நோக்கில் "என்னால் தரப்பட்டது" என்று சொல்லி விடுகிறான். எம்பெருமான் எழுந்தருளிய காட்சியை "மின்ஆர் மணிமுடி போய் விண்தடவ" என்கிறார், வானம் அஞ்சி விடுமோ என்று அதனைத் தடவிக் கொடுத்ததாகக் காண்பிக்கிறார். "எடுத்த கழல்கால்" எழ் உலகு போய் கடந்து, செல நீட்டி, மன்னு இவ்வகலிடத்தை தன்னுலகாக்கிக் கொள்கிறது. தாளானை என்ற தன்னுலகாக்குவித்தாள் என்பதோடு மட்டுமல்லாமல் தேவர்களும் பக்தர்களும் தேடித் திரியும் மலர்

பாதங்கள் என்பதுமாம். கண்ணபிரான் அசோதைப் பிராட்டியிடம் வளர்ந்து வரும் காலத்து அந்த கமலபாதங்களை,

"சீதக்கடல் உள்ளமுதன்ன தேவகி
கோதைக் குழலாள் அசோதைக்குப் போத்தந்த
பேதைக் குழலி பிடித்துச் சுவைத்துண்ணும்
பாதக் கமலங்கள் காணீரே பவளாயீர்! வந்துகாணீரே"

என்று எம்பெருமான்மலர் தாள்களைவந்து காணீரே, காணீரே என்பது திருமொழியில் பெரியாழ்வார். பெரியாழ்வாரின் திருமொழிதரும் கண்ணபிரானின் மழலை இன்பம் சுவைக்கச் சுவைக்கத் தெவிட்டாத தெள்ளமுது. பாலும் சோறும் கலந்தன்ன இப்பாசுரங்களைப் பாடிய பெரியாழ்வார் கண்ணன் தந்த மழலை இன்பத்தை எப்படியெப்படியெல்லாம் சுவைத்திருக்கிறார் என்று எண்ணிப் பார்க்க இயலாத ஒன்று. உதாரணத்திற்கு ஒரு பாசுரத்தைப் பாருங்கள்.

"வட்ட நடுவே வளர்கின்ற மாணிக்க
மொட்டு நுனையில் முளைக்கின்ற முத்தேபோல்
சொட்டுச் சொட்டென்னத் துளிக்கத் துளிக்கஎன்
குட்டன்வந்து என்னைப் புறம்புல்கு வான்.'

விட்டுச்சித்தனாரின் கண்ணன் மழையின்ப உணர்வுகளை வெளிப்படுத்தும் பாசுரங்களைப் பயிலும்போது பெரியாழ்வார் கண்ட இன்பத்தை அனுபவிக்க முடிகிறது. 'குட்டன் வந்து என்னைப் புறம் புலகுவான்' என்றபொழுது கண்ணன் வந்து முதுகில் தவழ்ந்து விளையாடுகிறானோ என்ற உணர்வு முதுகைத் திரும்பிப் பார்க்க வைக்கிறது. கண்ணன் வீட்டில் விளையாடுவது போன்ற உருவெளித் தோற்றம் உள்ளத்தைக் கலங்க வைக்கிறது. அதனால் பாரதியும்,

"கனவிலே சுடுவதென்னே?"

என்று கேட்டு விட்டு,

"தீக்குள் விரலை வைத்தால் நந்தலாலா!—நின்னைத்
தீண்டுமின்பந் தோன்றுதடா நந்தலாலா!

என்றனர் போலும்,

... ... ... ... தாமரைமேல்
மின்னிடையாள் நாயகனை விண்ணகருள் பொன்மலையைப்
பொன்னி மணிகொழிக்கும் பூங்குடந்தைப் போர்விடையைத்
தென்னன் குறுங்குடியுள் செம்பவளக் குன்றினை
மன்னிய தண்சேறை வள்ளலை—மாமலர்மேல்
அன்னம் துயிலு மணிநீர் வயலாலி
என்னுடைய வின்னமுதை யெவ்வுள் பெருமலையைக்
கன்னி மதில்சூழ் கணமங்கைக் கற்பகத்தை
மின்னை யிருசுடரை வெள்ளறையுள் கல்லறைமேல்
பொன்னை மரகதத்தைப் புட்குழியெம் போரேற்றை
மன்னு மரங்கத்தெம் மாமணியை......

அ - ரை:- தாமரைமேல் மின்இடையாள் - தாமரை மலரில் தோன்றியவளும் மின்னல் போன்று ஒளிவீசும் மெல் லிடையாளுமான பிராட்டி. நாயகனை - எம்பெருமானை. விண்ணகர் - திருவிண்ணகரம். பொன்மலை - பொன்மலை யெனத் திகழும். பொன்னிமணி - காவிரி நதி பாயும்பொழுது கொண்டு வந்து குவிக்கும் ர்த்தினமணி, கொழிக்கும் - கொண்டுவந்து கொட்டும். பூகுடந்தை - அழகிய திருக் குடந்தை நகர். போர்விடை - போர் செய்யப் புறப்பட்ட காளை போன்ற. தென்னன் குலுங்குடியுள் - தென் திசையி லுள்ள திருக்குறுங்குடியிலே. செம்பவளக்குன்று - சிவந்த பவளமலை போன்ற. தண்சேறை - குளிர்ந்த திருச்சேறை. மன்னிய - எழுந்தருளிய. மாமலர் - சிறந்த தாமரை மலர். துயிலும் - தூங்கும். அணிநீர் வயல் - அழகிய நீர்வளம் மிக்க வயல். ஆலி - திருவாலியில். இன்அமுதை - இனிய அமுதம் போன்றவன். எவ்வுள் - திருவெவ்வுளூர். பெருமலை - பெரிய மலை போன்றிருப்பவன். கன்னிமதில் - என்றும் இளமை நீங்கா மதில். அப்பொழுதுதான் கட்டப்பட்டதோ வென வியக்கும்படி அமைத்த மதில். கணமங்கை - திருக்கண மங்கையில். கற்பகத்தை - கற்பகமரம் போன்றவனை. மின்னை - மின்போல் ஒளிரும் பெரிய பிராட்டியை யுடையவனாய். இருசுடர் - சூரியன் சந்திரன் எனும்படியான

திருவாழி திருச்சங்குகளையுடைய. வெள்ளறை - திருவெள்ளறை. கல்லறை - கருங்கல்லால் அமையப்பெற்ற சந்நிதானத்தில். பொன்னை - பொன் போன்றவனாய். மரகதத்தை - மரகதம் போன்றவனை. புட்குழி - திருப்புட்குழி. எம்போர் ஏற்றை - எமது போர் செய்வதில் வல்ல ஆண் சிங்கத்தைப் போன்ற எம்பிரான். அரங்கம் - திருவரங்கம். மன்னும் - எழுந்தருளும். எம்மாமணியை - எமக்கு சிறந்த மாணிக்க மணி போன்றவனை.

வி - ரை:- தாமரை மலரில் பிறந்தவளும் மின்னிடையாளுமான பிராட்டிக்கு நாயகன். திருவிண்ணகரில் பொன் மலை போன்றிருப்பவன், பொன்னிநதி மாணிக்க மணிகளைக் கொழிக்கும் அழகிய திருவிடந்தையிலே போர் செய்யும் காளை போன்றவன். தென் திசையில் அகன்ற திருக்குறுங்குடியில் சிவந்த பவழமலை போன்றிருப்பவன் குளிர்ந்த திருச்சேறையில் எழுந்தருளிய வள்ளல். சிறந்த தாமரை மலரில் வதியும் அன்னப் பறவைகள் உறங்கும் அழகிய நீர்வளம் கொண்ட வயல்களையுடைய திருவாலியில் எழுந்தருளிய எனக்கமுதம் போன்றவன். திருவெவ்வூரில் பெரியதொரு மலை போன்றவன். இளமை நீங்காத மதில்கள் சூழ்ந்த திருக்கணமங்கையில் கற்பகமரமெனக் காட்சி தருபவன், மின் போன்ற இடையை யுடைய பெரிய பிராட்டியாரையுடையவனாய், சூரிய சந்திரன் போன்று திருவாழி, திருச்சங்குகளையுடையவன், திருவெள்ளறையில் கருங்கல்லால் ஆன சந்நிதானத்திலே பொன்போல் விளங்குபவன், மரகதப்பச்சை போன்ற வடிவுடையவனாய், திருப்புட்குழியில் எழுந்தருளியிருக்கும் எம் போர் செய்யும் சிங்கம் போன்றவனாய், திருவரங்கத்தில் எழுந்தருளியவனாய், எம்மிடம் உள்ள பெரிய மாணிக்கம் மணி போன்றவனாயிருப்பவன்.

இங்கு சிறப்பான திருத்தலங்கள்பற்றி திருமங்கையார் நமக்கு நினைவு கூர்கிறார்,

திருவெண்ணகரில் ஒப்பிலியப்பன் எழுந்தருளியிருப்பதை, "வண்ணகருள் பொன்மலை" என்றருளினார், உப்பிலியப்பன் பூமிதேவிநாச்சியார். கிழக்கே திருமுக மண்டலம் நின்ற திருக் கோலம். திருமங்கையாழ்வார், பொய்கையாழ்வார், பேயாழ் வார், நம்மாழ்வார் மங்களாசாசனம். இத்தலத்து எம்பெரு மான் திருநாமமான உப்பிலியப்பன் என்பதை ஒப்பிலியப்பன், ஒப்பில்லா அப்பன் என்றும் வழங்குவர். இத்தலத்து எம்பெரு மான் திருவேங்கடமுடையான் போன்ற திருவுருவமுள் ளவராய், அன்பர்களின் அபிமதத்தைப் பூர்த்தி செய்கின்றன ரென்றும், மிருகண்டுமுனிவர் பத்தினியினது விருப்பப்படி உப்பில்லாத பிரசாதங்களையே அமுது செய்கின்றனர், தேவ லோகம் போன்றது எனும் பொருள்பற்றி இத்தலத்திற்கு விண்ணகரம் எனப் பெயர் பெற்றது.

திருக்குடந்தையில் எம்பெருமான் எழுந்தருளியிருப்பதை "பூகுடந்தை போர்விடை" என்று போற்றியருள்கிறார். சாரங்கபாணிப் பெருமாள், ஆராவமுதன்—கோமளவல்லி, வைதிக விமானம். பெரியாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ் வார் மங்களாசாசனம்.

தென்னன் திருக்குறுங்குடியில் சிவந்த பவழமலைபோல் விளங்குபவன் வைஷ்ணவிநம்பி, மலைமேல்நம்பி, நின்ற நம்பி, இருந்தநம்பி, கிடந்தநம்பி, திருப்பாற்கடல்நம்பி குறுங்குடிவல்லி, குறுகியவனானவானது சேத்திரமாதலின் இத் திருத்தலத்திற்கு திருக்குறுங்குடி யென்பதாயிற்று. நம்வாழ் வார் திருவவதாரத்திற்குக் காரணமாயிருந்தவரும் இத்தலத்து நம்பியே. பெரியாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கை யாழ்வார், நம்மாழ்வார் மங்களாசாசனம்.

இச்சேறையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைக் குறிப்பிடுகையில், "தண்சேறை மன்னிய வள்ளலை" என்று உள்ளம் குளிர உவகை கொள்கிறார். இத்தலத்தில் எம்பெரு மான், நாச்சியார், விமானம், தீர்த்தம், நிலம் என்ற ஐந்து

சாரமுள்ள பொருள்கள் அமைந்திருப்பதால் "திருச்சேறை" என்ற திருநாமமாயிற்று. இது வடமொழியில் "பஞ்சாசர சேத்திரம்" என வழங்கப்படுகிறது. இவ்வாருசாரமுள்ள பொருள்களையுடைய இத்திருத்தலத்தில் காவேரி நதி தவஞ் செய்து கங்காநதியைக் காட்டிலும் சிறப்புப் பெற்றனள் என்பர். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருவாலியில் எழுந்தருளும் எம்பெருமானைக் குறிப்பிடும் பொழுது, "மாமலர்மேல் அன்னம் துயிலு மணிநீர வயவாலி" என்று இடத்தையும், "என் அமுதை" என்று எம்பெருமானையும் சிறப்பிக்கிறார். எம்பெருமானைத் திருமகள் ஆலிங்கனஞ் செய்துகொண்ட தலமாதலின் திருவாலியென்றானது. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருவெவ்வுளூரில் பெரியதொரு மலை சாய்ந்ததென, "எவ்வுள் திருமலையே" என்றனர். திருமால் சாலிகோத்திரி மகாமுனிமுன் தோன்றி, "உறைதற்கு உரிய உள்எவ்வுள்?" என்று வினவினதால் இத்தலத்திற்குத் திருவெவ்வுளூரென்று திருநாமமாயிற்றென்பர். வீரராகவப் பெருமாள், கனகவல்லித்தாயார், திருமங்கையாழ்வார், திருமழிசையாழ்வார் மங்களாசாசனம்.

திருக்கண்ணமங்கையில் எழுந்தருளியிருக்கும் எம்பிரானைக் "கன்னி மதில்சூழ் கணமங்கை கற்பகத்தை" என்று போற்றுகிறார். பக்தவத்சலப் பெருமாள், அபிசேகவல்லித் தாயார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருவெள்ளறையில் என்னப்பன் திருவாழி திருச்சங்குகளையுடையவனாய், மின்னல் போன்று விளங்கும் பெரிய பிராட்டியையுடையவனாய் என்பதை, "மின்னை இருசுடரை வெள்ளறையுள்" என்கிறார். வெண்மையான பாறைகளாலான மலையாதலின் வெள்ளறையென்றானது, இது வடமொழியில் ச்வேதாத்ரி எனப்படும். புண்டரீகாட்சன் பங்கயச்செல்வி, பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். உய்யக்கொண்டார் அவதார தலம்.

திருப்புட்குழியில் எழுந்தருளியிருத்தலை, "புட்குழி எம் போர் ஏற்றை" என்றனர். புள்சடாயுவென்னும் பெரிய வுடையார். அவரைக் குழியிலிட்டு அடக்கம் செய்யப்பட்ட இடம் என்று சொல்லுதலால் "புட்குழி" என்று பெயராயிற் றென்பர். இது ஜடாயு தீர்த்தம். விஜயராகவப் பெருமாள் மரகதவல்லி நாச்சியார், திருமங்கையாழ்வார் மங்களா சாசனம்.

திருவரங்கத்து மாமணியை. "அரங்கத்து மன்னும் எம் மாமணியை' என்கிறார். எம்பெருமான் ரதியை அடைந்த இடம் திருவைகுண்டம், திருப்பாற்கடல், சூரியமண்டலம், யோகிகளின் உள்ளக் கமலம் இவையனைத்தினும், இனிய தென்று திருமால் எழுந்தருளியிருக்குமிடமென்பதால் "ரங்கம்' என்று அவ்விமானத்துக்குப் பெயர். இது திருமாலின் திருத் தலங்கள் நூற்றெட்டினுள் தலையாயது. "கோயில்" என்றும், 'பெரிய கோயில்'' என்றும் பெயருடையது. "பூலோக வைகுண்டம்'' என்றும், "போக மண்டபம்'' எனப்படுவதாகிய தலம். திருஅரங்க விமானத்தில் அதிசேடசயனத்தில் பள்ளி கொண்டருளும் திருமால் இட்ச்வாகுசு வமிசத்தார் குலதெய்வ மாகி வணங்கப்பட்டார். மனித உருக்கொண்ட பெருமாளாகிய இராமபிரான் வணங்கியமையால், "பெரிய பெருமாள்'' என்ற திருநாமம். இராவணவதம் முடிந்து விபீடண ஆழவாருக்குக் கொடுக்க இலங்கை செல்லும் வழியில் உபயகாவேரி மத்தியில் பெருமாள் புடைபெயராது நிலை நின்றருளினர். இதுவே திருவரங்கம் எனப்படும். திருமகளார் திருநிருத்தஞ் செய்யு மிடமாயிருந்ததாலும், வைணவ கூத்துப் பயிலுமிடமாயிருந்த தாலும் "திருவரங்கம்'' எனப் பெயர் பெற்றதெனினுமாம்

பெரியாழ்வார், ஆண் டாள், குலசேகராழ்வார், திருமழிசை யாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார் திருமங்கையாழ்வார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் மங்களாசாசனம். பட்டர், வடக் கு த் திருவீதிப்பிள்ளை லோகாசாரியார் முதலிய ஆசாரியார்கள் கள் அவதரித்த திருத்தலம்.

- இப்பகுதியில் திருமங்கையார் எம்பெருமானை பொன் மலை, போர்விடை, செம்பவளக்குன்று, வள்ளல், இன்னமுது, பெருமலை, கற்பகம், மரகதம், பேரேறு, மரகதத்து மாமணி யென்றெல்லாம் போற்றியிருத்தல் காண்க

... ... ... ... வல்லவாழ்ப்
பின்னை மணாளனைப் பேரில் பிறப்பிலியைத்
தொன்னீர்க் கடல்கிடந்த தோளா மணிச்சுடரை
என்மனத்து மாலை யிடவேந்தை யீசனை
மன்னும் கடன்மல்லை மாயவனை—வானவர்தம்
சென்னி மணிச்சுடரைத் தண்கால் திறல்வலியைத்
தன்னைப் பிறரறியாத் தத்துவத்தை முத்தினை
அன்னத்தை மீனை யரியை யருமறையை
முன்னிவ் வுலகுண்ட மூர்த்தியைக்—கோவலூர்
மன்னு மிடைகழியெம் மாயவனைப் பேயலரப்
பின்னும் முலையுண்ட பிள்ளையை—அள்ளல்வாய்
அன்ன மிரைதே ரழுந்தூ ரெழுஞ்சுடரைத்
தென் தில்லைச் சித்திர கூடத்தென் செல்வனை
மின்னி மழைதவழும் வேங்கடத்தெம் வித்தகனை.

அ - ரை:- வல்லவாழ் - திருவல்லவாழியில் எழுந்தருளி யிருக்கும், திருவல்லவாழியில் வாழும். பின்னை மணாளன் - நம்பின்னை மணாளன். பேரில் - திருப்பேரில் பிறப்பிலி - பிறப்பற்றவன், தான்தோன்றி. தொல் நீர்கடல் - தொன்மை யான நீர்க்கடல், என்றுமுள்ள. கிடந்த - பள்ளி கொண்டுள்ள. தோளா - துளையிடாத. மணிசுடர் - சுடர் வீசும் ரத்தின மணி. இடவெந்தை - திருவிடவெந்தை. கடல்மல்லை - திருக் கடல் மல்லை. வானவர் தம் சென்னி மணிசுடர் - தேவர்களின் மகுடத்தில் மின்னும் ஒளியே. தண்கால் - திருத்தண்கால். திறல் வலியை - திறண்ட வலிமை மிக்கவனை, மிகுந்த வலிமை, திறல் - வலிமை. தன்னைப் பிறர் அறியாத் தத்து வத்தை - பிறரால் அறிந்துகொள்ள முடியாத பேருருவை. முத்தினை - முத்துப் போன்றவனை. அன்னத்தை - அம்சா

வதாரம் செய்த. மீனை - மச்சாவதாரம் செய்த. அரிவை நரசிம்மாவதாரம் செய்த. அருமறை - எல்லா வேதங்களையும் உள்ளடக்கியவனாய். முன்னிவ்வுலகுண்ட மூர்த்தி - முன் ஒரு காலத்தில் இவ்வுலகை உண்டு வயிற்றில் அடக்கிய மூர்த்தி. கோவலூர் - திருக்கோவலூர். இடைகழி - உள்ளிடைப் பாதை. மன்னும் - வசிக்கும். பேய் அலற - பேய் உருவில் வந்த அரக்கி அஞ்சி அலற முலையுண்ட பிள்ளை - பேயின் முலைப்பால் உண்ட குழந்தை. அன்னம் - அன்னப் பறவைகள். அள்ளல் - சேறு. அள்ளல்வாய் - சேற்று நிலங்களில். இரைதேர் - இரைதேடும். அழுந்தூர் - திருவெழுந்தூர். எழும்சுடர் - ஒளிரும் சுடர். தென் தில்லை சித்திரக்கூடம் - தென் திசையிலுள்ள தில்லை திருச்சித்திரக்கூடத்தில். மழை - மழை மேகங்கள். மின்னி - மின்னல் ஒளிக்க. தவழும் - தவழ்ந்து திரியும். வேங்கடம் - திருவேங்கட மலை. வித்தகன் - எல்லாம்வல்ல எம் இறைவன்.

வி - ரை:- திருவல்லவாழியில் எழுந்தருளியிருக்கும் நம்பின்னை மணாளனாய், திருப்பேரில் எழுந்தருளி பிறப்பற்றவனாய், தொன்மையான நீர் கடலில் பள்ளிகொண்டவனாய், துளையிடாத ரத்னங்கள் போன்று ஒளி வீசுபவனாய் என் மனத்தில் என்றும் நிறைந்தவனாய், திருவிடவெந்தையில் எழுந்தருளியிருக்கின்ற ஈசனாய், திருக்கடல்மல்லையில் எப்பொழுதும் வாசம் செய்யும், ரத்னமணியெனவே சுடர் வீசுபவனாய், திருத்தண்காவில் எழுந்தருளியிருக்கும் வல்லமைமிக்கவனாய், தன்னைப் பிறர் அறிந்துகொள்ள முடியாத பேருருவாய் முத்துப் போன்றவனை, அன்னம், மீன், அரி அவதாரம் செய்தவனாய், வேதங்களனைத்துமானவனாய், முன்பு இவ்வுலகை முழுமையாக உண்டு வயிற்றில் அடக்கிய இடைகழியில் என்றும் எழுந்தருளியிருக்கும் எங்கள் மாயவன் திருமாலாய், பேயாக வந்த அரக்கி அலறி கதற முலைப்பால் உண்ட பிள்ளையாய், அன்னப்பறவை, சேறு நிறைந்த நீர்வளம் மிக்க நிலங்களில் இரை தேடும் திருவெழுந்தூரில் எழுந்தருளும்

சுடர் விளக்காய், தென் திசையின் தில்லைத் திருச்சித்திரக் கூடத்தில் வாழும் என் செல்வனாய், மழை மேகங்களானவை மின்னிக்கொண்டு தவழ்ந்தோடும் திருவேங்கடமலையில் எழுந் தருளியிருக்கும் எல்லாம் வல்லவனை.

"வல்லவாழ்" என்றது திருவல்லவாழியில் வாழும் என் பதாம். மலைநாட்டுத் திருப்பதிகளில் ஒன்றானது. கோலப் பிரான், செல்வத் திருக்கொழுந்துநாச்சியார். கிழக்கே திருமுக மண்டலும் நின்ற திருக்கோலம். திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் மங்களாசாசனம். இதனை திருவல்லாய் என மலையாளத்தில் கூறுவர். நம்பின்னையை மணம்புரிவதற்குக் கொண்டகோலத்துடன்இவ்வாழ்வாருக்கு அருளினன் போலும்.

"பேரில்" என்றது திருப்பேருரில் என்பதாம் அப்பக்குடத் தான் கமலவல்லித்தாயார் சந்நதி. இந்திர விமானம். புஜங்க சயனம். பெரியாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார் மங்களாசாசனம். சோழநாட்டுத் திருப்பதிகளில் ஒன்று. "பிறப்பிலியை" என்றது அடியார்கள் பற்பல பிறவிகள் எடுத் தும் பிறப்பே இல்லாதவன், என்றுமிருப்பவன் என்றும் அல் லது இனிப் பிறந்து பரிபாலிப்பவன் என்றபடியுமாம். இனி அவதாரம் செய்து காப்பவன் என்றபடி. இதனைப் பேர்இல், பிறப்பு இல் எனவும் பிரித்துக் காண்க. இறைவன் பேரில்லா தவன் என்றபடி. திருப்பேர்நகரில் எழுந்தருளிய பேர் இல்லா தவனாய் பிறப்புமில்லாதவனான எம்பிரான் என்பதாம்.

கடல் என்றும் வற்றுவதில்லையாதலின், "தொன்கடல்" என்றனர். கடலில் நீர்க்கடல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க் கடல் என்றெல்லாம் இருப்பதாக புராணம் கூறும். ஆனால் ஆழ்வார் பெருந்தகை இங்கு திருவுள்ளம் கொண்டது நீர்க் கடல் மட்டுமே. திருமால் பாற்கடலில் பள்ளிகொண்டிருப்பர் என்பதே வழக்கு. என்றாலும் திருமங்கையார், "தென்னீர்க் கடல் கிடந்த" என்றே திருவாய் மலர்தருளினார். எம்பெரு மானை 'தோளா மணிச்சுடர்" என்கிறார். இரத்தினம் துளையிடப்படும்பொழுது அதன் ஒளி வீசும் தன்மை

குறைந்து விடுகிறது என்பதால். மனத்துள் நீங்காது நிறைந் திருந்தான் எம்பெருமான் என்பதனை, "என் மனத்து மாலை" என் மனத்துள் அமர்ந்த திருமாலை என்பதாம். என் மனத் துக்கு மாலையாய் நீங்க இன்பம் தருபவன் எனினுமாம்.

திருவிடந்தையில் எழுந்தருளிய எம்பெருமானை, "இட வெந்தை ஈசனை" என்கிறார் வராகப்பெருமாள் தனது தேவியை இடப்புறத்தில் கொண்டிருத்தலால் திருவிடவெந்தை யெனத் திருநாமமேற்றது. இடவெந்தை என்றது இடப் பக்கம் கொண்ட எந்தை. எந்தையென்பது எம் தந்தை, என் அப்பன் என்பதாம். நித்யகல்யாணர் கோமளவல்லி நாச்சியார் சந்நதி. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் தொண்டை நாட்டுத் திருப்பதிகளில் ஒன்று.

திருக்கடல்மல்லையில் நீங்காது நிலைபெற்ற எந்தையை, "கடல்மல்லை மன்னும் மாயவன்" என்றனர். தலசயனத்துறை வார், நிலமங்கை நாச்சியார் சந்நதி. இது பூதத்தாழ்வார் திரு அவதாரத்தலம். திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார் மங்களா சாசனம். இதுவே மகாபலிபுரம். தொண்டை நாட்டுத் திருப் பதிகளில் ஒன்று.

திருத்தண்காவில் எழுந்தருளும் எம்பெருமானை, "தண் கால் திறல் வலியை" என்று வலிமையூட்டுகிறார். கால் என் றால் காற்று. தண்கால் என்பது குளிர்ந்த காற்று என்று பொருள். திருத்தாங்கல் என்றும் கூறுவர். சீதவாதபுரம் என்றும் கூறுவர். விளக்கொளி, தீபப் பிரகாசர் மரகதவல்லித் தாயார் சந்நதி. வேதாந்தாசாரியார் திருஅவதாரத்தலம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். தொண்டை நாட்டுத் திருப்பதிகளுக்குள் ஒன்று.

இறைவனுக்குப் பேரும் இல்லை பிறப்பும் இல்லை. உருவும் இல்லை என்ற பிறர் அறியா நிலையில் உள்ளவன் என்பதே தத்துவம். இதனையே முன்பு "பேரில் பிறப்பிலி", என்றவர் இங்கு "தன்னை பிறர் அறியா தத்துவத்தை', என்றனர்.

. . . . . . . . . .இளங்குயிலே! என்
தத்துவனை வரக் கூகிற்றி யாகில்
தலையல்லால் கைம்மாறி லேனே.

என்று நாச்சியார் எம்பெருமானைக் கூவியழைக்கும்படி குயிலுக்குக் கூறும்பொழுது, "என் தத்துவனை" என்று திருவாய் மலர்ந்திருத்தலும் இங்கு நினைவு கொள் . நாச்சியார், "என் தத்துவனை" என்றதற்கும், திருமங்கையார், "தத்துவம்" என்பதன் வேறுபாட்டினை நன்குணர்ந்தறிக. அன்னத்தை மீனை அரியை என்றது ஹம்சாவதாரத்தையும் மத்ஸ்யாவதாரத்தையும், நரசிம்ஹாவதாரம் அல்லது ஹயக்ரீ வாவதாரத்தையும் குறிப்பதாம். "அருமறையை" என்றது வேதங்களனைத்தையும் உள்ளடக்கியவனாய், தானே வேதமாய் என்பதாம்.

திருக்கோவலூரில் இடைகழியில் என்றும் எழுந்தருளி யிருக்கும் மாயவனைக் குறிப்பிடும்பொழுது "கோவலூர் இடைகழி மன்னும் மாயவனை" என்றனர். கோபாலன் எனும் ஆயனார் எழுந்தருளிய புண்ணிய பூமியாதலின் திருக் கோவலூரெனும் திருநாமமேற்றது. வடமொழியில் இதுவே கோபாலபுரம். பொய்கையாழ்வார் நடுநாட்டுத் திருப்பதிகளிற் பெண்ணையாற்றங்கரையிலுள்ள திருக்கோவலூரையடைந்து அங்கு மிருகண்டு மகா முனிவரது திருமாளிகையிற் சென்று அதன் இடைகழியிற் சயனித்துக் கொண்டிருக்கையில், பூதத் தாழ்வார் அங்கு வந்து சேர, பொய்கையாழ்வார், இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவ இருக்கலாம்' என்று விண்ணப்பம் செய்ய அப்படியே அவ்விருவரும் இருக்கையில் பேயாழ்வாரும் அவ்விடத்தை அடைய, 'இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்" என்றுகூற, மூவரும் அவ்விடத்தில் நின்றுகொண்டு மகிழ்ந்திருந்தனர். அப் பொழுது பொய்கையாழ்வார் "வையந்தகளியா" என்று தொடங்கி முதல் திருவந்தாதியும், பூதத்தாழ்வார், "அன்பே தகளியா!" என்று இரண்டாம் திருவந்தாதியும், பேயாழ்வார்,

"திருக்கண்டேன்" என்று தொடங்கி மூன்றாந் திருவந்தாதியும் பாடியருளினார். திருமங்கையாழ்வார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார் மங்களாசானம். இடைகழி என்பது தேஹளி என்று வடமொழியில் கூறப்படும்.

"நீயும் திருமகளும் நின்றாயால் குன்றெடுத்துப்
பாயும்பனி மறைத்த பண்பாளா! - வாசற்
கடைகழியா உள்புகாக் காமர் பூங்கோவல்
இடைகழியே பற்றியினி"

என்று வரும் பொய்கையாழ்வாரின் முதல் திருவந்தாதியின் பாசுரத்திலும் "கடைகழி" பயன்படுத்தப்பட்டிருத்தல் காண்க.

பேய் அலற முலையுண்ட பிள்ளையைப் பற்றியும் இங்கு ஆழ்வார் திருவுள்ளம் கொண்டனர். கம்சனால் அனுப்பப் பட்ட பூதனையென்னும் அரக்கி நல்ல அழகிய பெண்ணுருக் கொண்டு. திருவாய்ப்பாடிக்கு வந்து அங்கு தூங்கிக்கொண் டிருந்த குழந்தை கண்ணனை எடுத்து நஞ்சு தீற்றிய தனது முலைப்பால் கொடுத்துக் கொன்றுவிட முயலும் பொழுது, பகவான் அந்த அரக்கியின் முலைகளைக் கைகளால் இறுகப் பற்றி அவள் உயிரோடு நன்றாக உறிஞ்சி அவள் பெரும் இரைச்சலிட்டு அலறி விழுந்து இறந்து போகச் செய்தா ரென்பதாம்.

திருவெழுந்தூருக்கு, "அன்னம் அள்ளல் வாய் இரைதேர் அழுந்தூர்" எனச் சிறப்பிக்கிறார். உபரிசரவசு என்னும் அரசன், தன் தவ வலிமையால் விமானத்துடன் ஆகாயத்தில் உலவும் பொழுது, தேவர்கட்கும், முனிவர்கட்கும் எழுந்த வாக்குவாதத்தில் ஓரவஞ்சனையாகத் தீர்ப்புக் கூறியதால். முனிவர்களால் சாபமிடப்பட்டு பூமியில் விழும்பொழுது தேர் அழுந்தப்பெற்ற இடமானதால் அழுந்தூரானது. தேரழுந்தூர் எனவும் வழங்குவர். ஆமருவியப்பன் செங்கமலவல்லித்தாயார் திருமங்கையாழ்வார் மங்களா சாசனம். "அள்ளல்வாய் அன் னம் இரைதேர்" என்று பிரித்து அன்னப்பறவை தன் குஞ்சு களுக்கு இரைதேடும் அழுந்தூர் எனினுமாம்,

"தென் திசையில் உள்ள திருச்சித்திரகூடத்து செல்வன்" என்று திருச்சித்திரகூடத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பிரானைப் போற்றுகிறார். இராமபிரான் காடு சென்றிருந்த பொழுது அவ்வெம்பெருமான் திருவுள்ளத்திற்கு அமைதி கொடுத்த மலை. விசித்திரமான சித்திரங்களையுடையது. இங்கு உற்சவமூர்த்தி இராமபிரான் வனவாசம் செய்கையில் சித்திரகூடமலையில் வீற்றிருந்தவண்ணம் எழுந்தருளினார். மூலமூர்த்தி சயனத் திருக்கோலமாய்ச் சிவபிரானது நடனத்தைப் பார்த்து இன்புற்றிருக்கிறார், இது தில்லை மரங்கள் நிறைந்த காடாயிருந்ததனால் தில்லைத் திருச்சித்திரகூடமென வழங்கப்படும். இது எம்பெருமான் தேவர்களும் முனிவர்களும் சூழ கொலுவீற்றிருந்த சபை. கோவிந்தராஜன் புண்டரீகவல்லி சந்நதி. குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார் மங்களா சாசனம். சோழநாட்டுத் திருப்பதிகளில் ஒன்று.

வேங்கடத்தை மழை மின்னி தவழும் வேங்கடம் என்றனர். "வேம்" என்ற வடசொல்லுக்குப் பாவம் என்பது பொருள். "கடம்" என்றால் எரித்தல் என்னும் பொருள். பக்தர்களின் பாவத்தை எரித்து விடுமாதலின் வேங்கடமெனப் பெயர் பெற்றது. "வேம்" என்ற சொல்லுக்கு செல்வம் "கடம்" என்றால் அழிவின்மை. அழியாச் செல்வம் நல்கும் எம்பெருமான் என்பதுவுமாம்.

திருவேங்கடத்தானுக்கு "அஞ்சநாத்ரி" என்னும் திருநாமமும் உண்டு என்பதனை.

"ஐயாது வந்தனை நாயேனை யஞ்சன வெற்பவென்றுங்
கையாது வந்தனை நின்னையல்லாற் கண்ணுதன்
முதலோர்
பொய்யாது வந்தனையார் முகங்காட்டினும்
போற்றியுரை
செய்யாது வந்தனை பண்ணாது வாக்குமென்
சென்னியுமே"

திருவேங்கடத்தந்தாதியில் வரும் பாசுரம் உணர்த்துவ, தாதும். "அஞ்சன வெற்பு" என்றது "அஞ்சநாத்ரி" என்பதாம். இப்பாடலில் சைவத்தை வைணவம் ஏற்காத நிலையை உணர்த்தியிருப்பதும் காண்க.

திருவேங்கடத்தான் அலர்மேல்மங்கைத்தாயார், பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகராழ்வார், திருமழிசையாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் மங்களாசாசனம். ஸ்ரீசைலத்தின் மேற்கில் நந்தனபுரம் எனும் ஊரில் புரந்தரனெனும் ஓர் அந்தணன் தன் மனைவி சந்திரலேகையென்பவளுடன் மலர்சோலையில் விளையாடியிருக்கையில் ஒரு கணிகையின் கட்டழகில் மயங்கி அவளுடன் சென்று வாழ்ந்து புலால் உண்டும் குடித்தும், பொருள் யாவையுமிழந்து, பின்பு வழிப்பறி முதலிய பாவங்களைச் செய்து, முடிவில் வறியவனாகிப் பல நோய்கள் பற்ற, பாவம் தொடரப் பித்தன்போல் அலைந்து திரிந்து இத்திருமலையை யடைந்தவுடன் தன் தீவினைகள் யாவும் நீங்கப் பெற்று, முந்தைய அழகு பெற்று, நல்லறிவு பெற்று திருமாலைச் சேவித்து பரமபதமடைந்ததனால் இத்தலத்திற்கு "வேங்கடாசலம்" எனும் பெயர் பெற்றது என்று வடமொழியில் பிரமாண்ட புராணம் கூறும். இது வடநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. தமிழ்நாட்டுக்கு வடக்கு எல்லையாக அமைந்ததும் இத்திருப்பதியே. 'வடவேங்கடம் தென்குமரி" என்று தமிழகத்துக்கு வடக்குத் தெற்கு எல்லையாகக் கூறியிருத்தலையும் காண்க.

மன்னனை மாலிருஞ் சோலை மணாளனைக்
கொன்னவிலு மாழிப் படையானைக் - கோட்டியூர்
அன்ன வுருவி னரியைத் திருமெய்யத்து
இன்னமுது வெள்ளத்தை யிந்தளூ ரந்தணனை
மன்னு மதிட்கச்சி வேளுக்கை யாளரியை
மன்னிய பாடகத்தம் மைந்தனை - வெஃகாவில்
உன்னிய யோகத் துறக்கத்தை ஊரகத்துள்

அன்னவனை யட்ட புயகரத்தெம் மானேற்றை
என்னை மனங்கவர்ந்த வீசனை - வானவர்தம்
முன்னவனை மூழிக் களத்து விளக்கினை
அன்னவனை யாதனூராண் டளக்கு மையனை

அ - ரை:- மன்னனை - மன்னர் மன்னன் இறைவன், எம்பெருமான். மணாளனை - மணவாளப் பிள்ளையை. கொன்னலிலும் - கொல்லும்வல்ல. ஆழிப்படையான் - திருவாழியை ஆயுதமாகவுடையவன். கோட்டியூர் - திருக்கோட்டியூர். அன்னவுருவு - அதுபோன்ற பேரழகு. திருமெய்யத்து - திருமெய்ய மலையில். அமுதவெள்ளம் - அமுதம் வெள்ளப் பெருக்கெடுத்ததே போன்ற. இந்தளூர் - திருவிந்தளூர். அந்தணனை - அந்தணாளனை, கருணாமூர்த்தியை. காஞ்சி - காஞ்சிநகர், வேளுக்கை - வேளுக்கையெனும் இடம். ஆளரி - ஆளழகசிங்கர். பாடகம் - திருப்பாடகம். மைந்தன் - இளம் காளை. வெஃகா - திருவெஃகா. உன்னிய - தியானித்த, யோகத்து உறக்கத்தை - யோக நித்திரை செய்பவனை. ஊரகத்துள் - திருவூரகத்தில். அட்டபுயரகத்து - எட்டு புஜங்கள் கொண்ட கைகள். எம்மான் - எம்பிரான். ஏற்றை - சிங்கம் போன்றவனை. என்னை - எனது. ஈசன் - கடவுள் தெய்வம். வானவர் - தேவர். மூழிக்களத்து - திருமூழிக்களத்து. விளக்கினை - அடியார்க்கு ஒளி விளக்காய்த் திகழ்பவனை. ஆதனூர் - திருவாதனூர். ஆண்டு அளக்கும் ஐயன் - ஆண்டாண்டு காலமாக படியளக்கும் ஈசன். எல்லாக் காலங்களிலும் எப்பொழுதும் சகல செல்வங்களையும் ஈந்து காக்கும் எம்பிரான் என்பதாம்.

வி - ரை:- மன்னாதி மன்னர்கட்கெல்லாம் மன்னனாய், இறைவனாய், திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியிருக்கும் மணவாளப் பிள்ளையாய் பகைவரைக் கொல்லும் வல்லமை மிக்க திருவாழிப்படையுடையவனாய், திருக்கோட்டியூரில் அத்தகு பேரழகுருவின் நரசிம்மமூர்த்தியாய், திருமெய் மலையில், இனிக்கும் அமுதம் வெள்ளமெனப் பெருக்கெடுத்தோடுவது போன்றவனாய், திருவிந்தளூரில் எழுந்த கருணாமூர்த்தி

யாய், மதில்கள் சூழ்ந்த காஞ்சிமா நகரத்தில் வேளுக்கை யெனும் தலத்தில் ஆளழகியசிங்கராய், திருப்பாடகத்தில் நிலைத்து நின்றருளிய எம் இளம் காளையை, திருவெஃகாவில தியானம் செய்து யோக நித்திரை செய்பவனாய், திருவூரகத் தில் அத்தகு அழகனை, எட்டுத் திருக்கைகளையுடைய எம்மான் ஆண் சிங்கம் போன்றவனை, எனது நெஞ்சைக கொள்ளை கொண்ட தலைவனாய், வானவர்கட்கு அரசனாய், திருமூழிக்களத்து அடியார்க்கு ஒளி விளக்கு போன்றவனை' இப்படிப்பட்டவனென்று சொல்லமுடியாதவனாய் திருவாத லூரில், ஆண்டாண்டு காலம் அதாவது எக்காலமும் மக்களுக் குப் படியளக்கும் ஐயன் எம்பெருமான்.

"மன்னன்" இது ஒரு வலிமை மிக்க சொல். மன்னர் மன்னன் என்றாலும் பொருந்தாது. அடியார்கள் உள்ளத்தில் மன்னும் மன்னன் என்றாலும் ஏற்புடையதாகத் தெரிய வில்லை. ஆக்கப்பட்ட பொருள்னைத்தும் அரசுக்குச் சொந்தீ மென்பதுபோல் உலகம் யாவற்றிற்கும் முதன்மையானவன் உலகம் யாவும் அவனானது. அவனே எல்லாம் என்பதனை

அனைத்துலகில் பிறப்பும் நீ;
அனைத்துலகில் இறப்பும் நீ;
அனைத்துலகில் துன்பமும் நீ;
அனைத்துலகில் இன்பமும் நீ;
வானோர்க்குத் தாதையும் நீ;
வந்தோர்க்குந் தந்தையும் நீ;
ஏனோர்க்குத் தலைவனும் நீ
எவ்வுயிர்க்கும் இறைவனும் நீ;
ஊழி நீ; உலகு நீ;
உருவும் நீ; அருவும் நீ;
ஆழி நீ; அமுதம் நீ;
அறமும் நீ; மறமும் நீ;

"இலக்கியத்தில் கடவுள் வாழ்த்து"எனும் எனது நூலில் இப் பாடல் எழுத்தாளப்பட்டுள்ளது. நந்திக்கலம்பகம் தரும் மிகச்

சுவையான பாடல். சுவையின் இனிமை கருதியே இப்பாடல் இங்கும் கொணரப்பட்டது. எம்பெருமானை "மன்னன்" என்றொரு மன்னர் ஏறு, புலவர், ஆழ்வார், கூறியிருக்கிறார் என்றால் அச்சொல்லுள் எல்லாம் அடக்கம் என்பதாம்.

திருமாலிருஞ்சோலை மணாளனை என்று மணவாளப் பிள்ளையாய் எழுந்தருளியிருத்தலை திருவாய்மலர்ந்தருளு கிறார் திருமங்கையார். பாண்டிநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான இங்கு அழகர் மாலலங்காரர் சுந்தரவல்லி நாச்சியார் சந்நதி. பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார். பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார், மங்களாசாசனம், இத்திருத்தலத்தின் இயற்கை வளத்தை பெரியாழ்வார்,

"ஆயிர மாறுகளும் சுனைகள் பலவாயிரமும்
ஆயிரம் பூம்பொழிலுமுடை மாலிருஞ் சோலையதே"

என "திருமொழி" ஒன்று சிறப்பிப்பதும் காண்க.

திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை, "கொன்னவிலு மாழிப் படையானை" என்று போற்றுகிறார். இரண்யாசுரன் மூவுலகையும் ஆட்டிப்படைத்திருந்த காலத்து, தேவர்கள் இந்த அசுரனை எப்படியாவது ஒழித்துக் கட்டிவிட வேண்டுமென ஒரு தனி இடத்தைத் தேடி, இந்த இடம் தேவர்கள் கோஷ்டி ஆலோசிப்பதற்கு ஏற்ற இடமாதல்பற்றி கோஷ்டிபுரம் என வடமொழியில் திருநாமம். ஆழ்வாரவர்கள் அதே சொல்லைத் தமிழில் "கோட்டியூர்" எனத் திரித்துக் கூறினர் என்பதாம். எம்பெருமானார் திருக்கோட்டியூர் நம்பியினிடத்துத் திருமந்திரத்தை உபதேசங்கொண்டருளி விமானத்தின்மீது ஏறியிருந்து திருமந்திரத்தை எல்லோருங் கேட்டு உய்வு பெறுமாறு உரக்க வெளியிட்ட இடம், சௌம்ய நாராயணன் திருமகள் நாச்சியார் சந்நதி. பெரியாழ்வார். திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார் மங்களாசாசனம். பாண்டியநாட்டுத் திருப்பதிகளில் ஒன்று.

"திருமெய்யத்து" என்றது திருமெய்யமலையில் எழுந்தருளிய எம்பிரானை சத்யகிரிநாதனாகக் கண்ட திருத்தலமென்பதுபற்றி சத்யதேவதைகள் திருமாலை நோக்கித் தவம் செய்த தலமானதுபற்றி இத்திருத்தலம் சத்யகிரியானது. அதில் எழுந்தருளும் எம்பிரான் சத்யகிரிநாதன் எனவும் அதனை ஆழ்வார் "திருமெய்யத்து" என்று திருமெய்யமலையை அங்கீகரித்தார். சத்யகிரிநாதன், உய்யவந்தாள் சந்நதி. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம், பாண்டிநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. 'இன் அமுதம் வெள்ளத்தை" என்று போற்றியிருத்தலும் காண்க.

,இந்தளூர் அந்தணனை, என்றது திருவந்தளூரில் எழுந்தருளியிருக்கும் தெய்வம் என்பதாம். சந்திரன் சாபம் நீங்கப் பெற்ற தலமாதலால் இத்திருப் பெயர்பெற்றது. சுகந்தவனம் என்றும் பெயர்படும். அந்தணனை என்றது அந்தணாளன்என்பதாம். அறவழியில் நிற்கும் எம்பிரான் என்றபடி. சுகந்தவனநாதன், மருவினியமைந்தன், சந்திரசாப விமோசனவல்லி. புண்டரீகவல்லி சந்நதி. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

"கச்சி" என்றது திருக்கச்சியை. மன்னுமதில்சூழ் காஞ்சமாநகரை. காஞ்சியென்னும் வடசொல்லின் திரிபு. இதுவே அத்திகிரி. பிரமனால் பூசிக்கப்பட்ட தலம் என்பது பொருள் பூமிப்பிராட்டி அரையில் அணியும் அரைநூல் மாலை தானத்திலுள்ளதுபற்றி இப்பெயர் பெற்றதென்பர். நீண்டகாலம் தவம் செய்து மனத்தூய்மை பெறாத பிரமன் ஆகாயவானி கூறியபடி பூமியில் புண்ணிய தலங்கள் எல்லாவற்றிலும் சிறந்ததும் ஒன்று ஆயிரமாகப் பயன் தருவதுமாகிய சத்தியவிரத தலத்தையடைந்து, யாகசாலையமைத்து அசுவமேத யாகம் செய்து அதனால் நாராயணனை ஆராதிக்க, அந்த யாகத் தீயினின்றும் எழுந்த புண்ணியகோடி விமானத்தில் தேவராஜனாக காட்சியருளினான் என்றும், அந்த வரதராஜசுவாமியைப் பின்பு கஜேந்திராழ்வான் பூசித்து முதலையினின்றும் விடுபட்டான் என்றும், தெய்வத் தச்சரில் ஒருவனான மயனென்பவன் பிரமன் கட்டளைப்படி அங்கு எம்பெருமானுக்குத் திருக்கோயில் கட்டி

னன். இந்திரனது யானையான ஐராவதம் நீண்ட காலம் தவம் செய்து மலை வடிவம் கொண்டு எம்பெருமானைத் தரிசித்தலால் அம்மலைக்கு "ஹஸ்த்தகிரி" என்ற பெயரானது அத்திகிரியெனத் திரிந்தது. கஜேந்திராழ்வான் பூசித்த தலமா தலின் இப்பெயர் பெற்றதெனினுமாம். இங்கு மலையடிவாரத் திலுள்ள அழகியசிங்கப்பெருமானே ஆழ்வாரது மங்களா சாசனம் பெற்றதென்பர். பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

வேளுக்கையென்பது காஞ்சிபுரத்திலுள்ள திருத்தலங் களுள் ஒன்று. வேள் இருக்கை மருவி வேளுக்கையானது, வேள் என்பது ஆசை. எம்பெருமான் ஆசையுடன் தங்கிய இருக்கை. தன் ஆசையினால் தங்குமிடம். ஆளரியை என்றது ஆளழகியசிங்கர் சந்நதி என்பதாம். அழகியசிங்கர், முகுந்த நாயகன் வேளுக்கைவல்லி சந்நதி. பேயாழ்வார், திருமங்கை யாழ்வார் மங்களாசாசனம்.

திருப்பாடகத்தில் எப்பொழுதும் இருப்பவனாமாதலின் 'பாடகத்து மன்னிய எம்மைந்தனை'' என்றனர். பெரிய காஞ்சியிலுள்ள பாண்டவ தூதர் சந்நதி. "பாடு அகம்' பாடகமானது. பெருமை தோன்ற எழுந்தருளியிருக்கும் தலம். கண்ணன் பாண்டவர்களின் தூதனாய் துரியோதனனிடம் சென்றபொழுது துரியோதன், ரகசியமாக கண்ணனைக் கொல்ல, மண்டபத்தில், மிகப் பெரிய நிலவறையொன்றைத் தோண்டுவித்து அதில் மல்லர்களை ஆயுதங்களுடன் உள்ளே இருக்க வைத்து, மூங்கிற் பிளப்புகளால் மேலே மூடி, அதன் மேல் ரத்தினங்கள் பதித்த ஆசனம் ஒன்றை அமைத்து, அதில் கண்ணனை அமரச் சொல்ல, கண்ணபிரான் அதன்மேல் ஏறின வுடன் மூங்கிற் பிளப்புகள் முறிபட்டு உள்ளிறங்கிச் செல்ல உடன் பெரிய விசுவரூபமெடுத்து மல்லர்களைத் தாக்கிக் கொன்றபொழுது கொண்ட திருக்கோலத்திற்கு சேவை சாதிக்குமிடம் பாடகம். பாடு - பெருமை. பாண்டவ தூதர், ருக்மினிதேவி, சத்யபாமை சந்நதி. திருமழிசையாழ்வார்,

திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் மங்களா சாசனம்.

வெஃகாவுல் யோக நித்திரை கொண்டவன் எம்பெருமான். பிரமன் செய்த வேள்வியை அழிக்க வந்த வேகவதி நதியைத் தடுக்கும் பொருட்டு அதற்கு அணையாகக் குறுக்கில் பள்ளி கொண்டருளினனாதலால் அப்பிரானுக்கு வடமொழியில் "வேகாசேது" என்று பெயர். அதுவே தமிழில் "வேகவணை" வேகணையென விகாரப்பட்டு வெஃகாவெனத் திரிந்தது தனி யாகுபெயரால் தலத்தைக் குறித்தது. இது பொய்கையாழ்வார் திருவவதரித்த தலம். நம்மாழ்வார், திருமழிசையாழ்வார். திருமங்கையாழ்வார், பொய்கையாழ்வார், பேயாழ்வார் மங்களாசாசனம்.

ஊரகம் என்பது பெரிய காஞ்சிபுரத்திலுள்ள உலகளந்த பெருமாள் அமுதவல்லிநாச்சியார் சந்நதி. இத்திருத்தலத்தில் திருமால் உரக உருவாய் சேவை சாதிப்பதுபற்றி இத்திருத்தலம் ஊரகமெனும் திருநாமம் பெற்றது உரகம் - பாம்பு வடசொல். திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

"அட்டபுயகரத்து" என்றது இத்தலத்தெம்பெருமானுக்கு எட்டுத் திருக்கைகள் உள்ளதால் அட்டபுஜன் என்ற திருப் பெயர் பெற்றது. அவன் எழுந்தருளியிருக்கும் இடம் க்ரஹம் ஆதலின் அட்டபுயகரமென வழங்கப்பட்டது. அட்டபுய வகரம் என்பதன் மரூஉவென்பாருமுளர். இத்திருத்தலம் நூற்றெட்டு திருப்பதிகளில் ஒன்றானதன்று எனத் தெரிகிறது

எம்பெருமான் உடியார்கள் மனத்தைக் கொள்ளை கொள் பவன். ஆதலின், "என்னை மனம் கவர்ந்த ஈசனை" என்றனர். திருநாரணன் தேவர்கட்கெல்லாம் தேவன் என்பதனால் 'வானவர்தம் முன்னவன்' என்றனர். "மூழிக்களத்து" என்றது திருமூழிக்களத்தில் ஞான ஒளியாய் இருப்பவன் அடியாரின் இருள் நீக்கி ஒளி விளக்காய் வழி நடாத்திச் செல்பவனாதலின் 'விளக்கினை" என்றனர். திருமூழிக்களம் மலைநாட்டுத் திருப்

பதிகளுள் ஒன்று நம்மாழ்வார் போற்றிய திருத்தலம். திருமூழிக்களத்தான் மதுரவேணிநாச்சியார் சந்நதி. திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் மங்களாசாசனம்.

ஆதனூர் என்பது திருவாதனூரைக் குறிப்பது, ஆதன் ஊர் என்று காமதேனுவுக்கு பிரத்யட்ச்சமான தலமாதல்பற்றி இப்பெயர் வந்தது. "ஆ" என்பது பசுவைக் குறிக்கும்.

எம்பெருமான் என்றும் அடியார்க்குப் படியளக்கும் பெருமான். ஆண்டாண்டு காலமாக அள்ளி அள்ளி வழங்கும் வள்ளலாதலின், "ஆண்டு அளக்கும் ஐயனை" என்றனர். 'பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடி நூறாயிரம்' என்று பெரியாழ்வார் எம்பெருமான் என்றென்று மிருந்து அருள்பாலிப்பதை திருப்பல்லாண்டு பாடி பக்தகோடிகளுக்குக் கோடிட்டுக் காட்டுகிறார், "ஐயனை" என்றது எம் தெய்வத்தை, எந்தையை, எம் அருளாளன் ஆண்டவன் என்பதுமாம்.

நென்னலை யின்றினை நாளையை - நீர்மலைமேல்
மன்னு மறைநான்கு மானானைப் புல்லாணித்
தென்னன் தமிழை வடமொழியை நாங்கூரில்
மன்னு மணிமாடக் கோயில் மணாளனை
நன்னீர் தலைச்சங்க நாண்மதியை - நான்வணங்கும்
கண்ணனைக் கண்ண புரத்தானைத் தென்னறையூர்
மன்னு மணிமாடக் கோயில் மணாளனைக்
கன்னவில்தோள் காளையைக் கண்டாங்குக் கைதொழுது
என்னிலைமை யெல்லா மறிவித்தா லெம்பெருமான்
தன்னருளு மாகமும் தாரானேல் - தன்னைநான்
மின்னிடையார் சேரியிலும் வேதியர்கள் வாழ்விடத்தும்
தன்னடியார் முன்பும் தரணி முழுதாளும்
கொன்னவிலும் வேல்வேந்தர் கூட்டத்தும் நாட்டகத்தும்
தன்னிலைமை யெல்லா மறிவிப்பன், . . . . .

அ - ரை:- நென்னலை - நேற்று, இன்றினை - இன்று; நாளையை - நாளைக்கு. நீர்மலை - திருநீர்மலை. மன்னும் -

எழுந்தருளும். மறைநான்குமானானை - வேதங்கள் நான்கு மானவன். புல்லாணி - திருப்புல்லாணி. தென்னன் தமிழ் - பாண்டியநாட்டுத் தமிழ் (தென்னன் பொதியில் என்று முன்னம் வந்தது நினைவு கூர்க.) வடமொழி - சமஸ்கிருதம். நாங்கூர் - திருநாங்கூர். மன்னும் மணாளனை - எழுந்தருளிய மணவாளனாய். கன்னவில்தோள் - கல்போன்று வலிமை மிக்க தோள்கள். காளை - இளம் காளையே போன்ற மிடுக்கு நடையுடையவன். என்றும்நீங்கா இளமையுடையவன். கைதொழுது- சேவித்து. ஆகம் - திருமார்பு. தாரான்ஏல் - தந்தருளானாகில் மின் இடையார் சேரி - மின்னல் போன்று ஒளி வீசும் மெல்லிய இடையையுடைய மகளிர் வாழும் இடம். வேதியர் - வேதம் ஓதும் அந்தணர். தன் அடியார் - எம்பெருமானை வணங்கும பக்த கோடிகள். தரணி - பூவுலகு. கொல் நவிலும் வேல் வேந்தர் - கொல்லும் தொழிலையுடைய வேலாயுதம் கொண்ட மன்னர். நாட்டகத்தும் - நாடு முழுவதும். தன் நிலைமை - எம்பெருமான் எனக்குச் செய்த நிலைமை. அறிவிப்பேன் - பிரச்சாரம் செய்வேன், பறைசாற்றுவேன், எல்லோரிடமும் போய்ச் சொல்லுவேன்.

வி - ரை:- நேற்று, இன்று, நாளை என்னும் முக்காலத்தும் திருநீர்மலைதனில் எழுந்தருளியிருக்கிற வேதம் நான்குமானவனை, திருப்புல்லாணியில் எழுந்தருளியிருக்கிற தென் பாண்டிநாட்டு இனிய தமிழை, வடமொழியை, திருநாங்கூரில், ரத்னமணிகள் பதித்த மாடங்கள் அமைந்த கோயிலில் என்றும் எழுந்தருளியிருக்கும் மணவாளப் பிள்ளையாய், இனிமையான சுவையுள்ள நீர் சூழ்ந்த தலைச்சங்க நாட்டிலுள்ள நாண் மதியப் பெருமாளாய், என்றென்றும் போற்றி வணங்கும் கண்ணனாய், திருநறையூரில் மாணிக்க மணிகள் பதித்த திருமாடங்கள் அமைந்த திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் மணவாளனாய், கல்போன்ற வலிமை மிக்க தோள்களையுடைய என்றும் இளமை நீங்காத காளையே போன்ற எம்பெருமானை. ஆங்காங்கு கண்டு சேவித்து அவன்பால் நான் காமுற்றிருக்கும் எனது நிலையெல்லாம் விண்ணப்பம் செய்துகொண்

டால், எனது விண்ணப்பங்களைக் கேட்ட பின்பாகிலும் எம் பெருமான் தனது திருவருளையும் திருமார்பையும் எனக்கு ஈந்தருளானாகில், அந்த எம்பிரானை அவன் என்னிடம் செய்த சேஷ்டைகளையெல்லாம் அறிந்த நான், மின்னல் போலும் ஒளிரும் மென்மையான இடையையுடைய மகளிர் வாழும் சேரி களிலும், வேதம் ஓதும் அந்தணர் வாழ் இடங்களிலும், அவ னது கோடானகோடி அடியார்கள் முன்னிலையிலும், இவ் வுலகம் முழுதும் ஆளும் கொலைத் தொழிலையே செய்யும் வேற்படையையுடைய வேந்தர்களின் கூட்டத்திலும், மற்றும் நாடெங்கிலும் சென்று அவன் எப்படிப்பட்டவன் என்பதை அறிவிப்பேன்.

"நென்னல்" என்ற சொல் "நென்னலை"யானது. அது போன்றே, "இன்று" எனும் சொல் "இன்றினை".

"நீர்மலை"யென்றது, "திருநீர்மலை". நீர் அரண்போல் சூழப்பெற்ற மலையாதலின் திருநீர்மலையெனப்பட்டது. நீல முகில்வண்ணன், அணிமா மலர்மங்கைத்தாயார், சக்கரவர்த்தித் திருமகன், உலகளந்தபெருமாள், அழகியசிங்கர் இவர்கள் சந்நதி .திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார் மங்களாசாசனம் தொண்டைநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றானது. எம்பிரானே வேதங்கள் நான்குமானவன். ஆதலின், மறைநான்கு மாணானை" என்றனர்.

"மூவே முலகமு முலகினுண் மன்பது
மாயோய் நின்வயிற் பரந்தவை யுரைத்தே
மாயா வாய்மொழி யுரைதர வலந்து
வாய்மொழி யோடை மலர்ந்த
தாமரைப் பூவினுட் பிறந்தோனுந் தானதயு
நீயென மொழியுமா லந்தண த்ருமறை"

என்று பரிபாடலில் (மூன்றாம் பாடல்) "வாய்மொழி ஓடை" நாயகன் வள்ளல் எம்பிரானை கடுவனிளவெயினனார் போற்றி யிருத்தலும் காண்க.

உரையாசிரியரின் "இலக்கியத்தில் கடவுள் வாழ்த்து', எனும் நூலில் கண்டுள்ள இதற்கான விளக்கம் பயில, மேலும் இனிமை சேர்க்கும்.

"புல்லாணி" என்றது "திருப்புல்லாணி" புல்லணை என்பதன் மருஉ. சீதாப்பிராட்டியைக் கவர்ந்து சென்ற இராவணனைக் கொல்லும் பொருட்டு இராமபிரான் வானரசேனையுடன் சென்று தென் கடற்கரையையடைந்து, கடல் கடக்க ஒரு உபாயம் சொல்ல வேண்டுமென்று அக்கடலரசனான வருணனைப் பிரார்த்தித்துத் தருப்பத்திற் படுத்து ஏழுநாளளவும் பிராயோபவேசமாகக் கிடந்த தலமாதலால் இப்பெயர் பெற்றது. "தர்ப்பாசயனம்" என்பதற்கு "புல்லணை" என்பது தமிழ்ச் சொல். கல்யாண ஜகந்நாதன், தெய்வச்சிலையார் கல்யாணவல்லி சந்நதி. இராமபிரான் சமுத்திரராஜனுக்கு வரமளித்த இடம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் தர்ப்பாசயந சேத்ரம் எனப்படும்.

"தென்னன் தமிழை வடமொழியை" என்று எம்பெருமானுக்கு அடைமொழி கொடுத்துக் கூறுகிறார். இது "மறை நான்குமானானை" என்பதே போன்றது. எம்பெருமானே தமிழாய், அதுவும் தென்னன் தமிழாய் வடமொழியாய் ஆனவன் என்பதாம். தென்னன் என்பது பாண்டியநாட்டைக் குறிக்கும். சுந்தரமூர்த்தி தமிழ்நாட்டை அகத்தியருக்குக் கொடுக்க அகத்தியர் அதைப் பாண்டியனுக்குக் கொடுத்தார். அகத்தியர் சூரியனிடமிருந்து தமிழைக் கற்றவர் என்று கூறுவர் இத்தகு காரணங்களால் "தென்னன் தமிழை" என்று தமிழுக்கும் சிறப்பானதொரு அடைகொடுத்துக் கூறினர். "வடமொழியை யென்றது" தமிழ் மட்டுமன்று வடமொழியுமானவன் என்பதாம்.

"நாங்கூரில்" என்றது திருநாங்கூரில் எழுந்தருளியிருக்கும் மணவாளப் பிள்ளையைப்பற்றிய செய்தி. இத்திருத்தலம் நூற்றெட்டில் இடம் பெறவில்லை. அடுத்து தலைச்சங்க

சி—11

நாட்டிலுள்ள நாண்மதிப் பெருமானை. சிறந்த சங்கத்தை யேந்திய நாண்மதியப் பெருமானையுடைய தலமாதலின் ,தலைச்சங்க நாண்மதி'' என்றானது. சங்கம் என்பது எம் பெருமானின் ஆயுதங்களில் ஒன்றான திருச்சங்கு,

திருக்கண்ணபுரத்து எழுந்தருளியிருக்கும் கண்ணனை, ''நான் வணங்கும் கண்ணனை'' என்கிறார் பரகாலநாயகி. இது ,பஞ்சகிருஷ்ண சேத்திரங்களுள் ஒன்று. (மற்றவை, திருக்கண் ணங்குடி, திருக்கண்ணமங்கை, திருக்கண்ணன் கவித்தலம், திருக்கோவலூர் என்பன) இத்தலத்தின் மறுபெயர் கண்வ புரம். சௌரிராஜன், கண்ணபுரநாயகி சந்நதி. பெரியாழ் வார், ஆண்டாள், குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் மங்களாசாசனம். இத்தலத்தில் விமானம் உத்பலாவதகம். இது பற்றியே ''மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்'' என்று நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்தருளினார்.

திருநறையூர் நம்பியை, ''தென் நறையூர்.....மணாளனை'', என்றனர். நம்பி, நம்பிக்கைநாச்சியார் சந்நதி, நாச்சியார் கோயில் எனவே வழங்குவர். நறுமணம் மிக்க தலமென்பது பெயர். வடமொழியில் ''சுகந்தகிரி'' என்னும் திருநாமம் எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடத்துக்குப் பெயர். இதுவே தமிழில் நறையூரானது. இங்கு கன்னியசுங்கமாக நாச்சியாருக் குப் பிராதானியத்தை எம்பெருமான் அளித்ததனால் இத்தலத் திற்கு, ''நாச்சியார் கோயில்'' என்ற ஒரு பெயர் உள்ளது. இத் தலத்தில் எம்பெருமான், மேதாவி முனிவரின் கன்னிகையை பலியென்னும் அசுரன் கவர்ந்து செல்ல அவனைச் சபித்து, அக் கன்னியை அம்முனிவருக்கு அருள் செய்தனரென்றும், திருமங்கையாழ்வார்க்குத் திருவிலச்சினை பிரசாதித்தாரென் பதும் அறிக. இங்கே கருடன் விசேஷம்.

எம்பெருமானின் வலிமையையும் என்றும் நிலைத்த இளமையையும் உணர்த்த ''கல்நவில் தோள் காளையை'' என றனர். கல் போன்ற வலிமை மிக்க தோள்களெனவும் மலை

போன்றுயர்ந்த தோள்களென்றும் பொருள். காளையை யென்றது இளமையையும் ஆண்மையையும் குறிக்கும். திருமங்கை மன்னர் தம்மைப் பரகாலநாயகியாகப் பாவித்து எம்பெருமான் மார்பில் புணர்ந்து இன்புற்றிடத் துடிக்கும் இளம் மங்கையே போன்றவராதலின் "கல்நவில் தோள் காளையை" என்று கூறினர். "அங்கு கண்டு" என்பது ஆங்காங்கு கண்டு என்பதாம், இதுகாறும் சொன்ன இடங்களிலெல்லாம் சென்று கண்டு என்பதாம். கைதொழுது என்பது எம்பெருமானை சேவித்தல், பரகாலநாயகியின் நிலையனைத்தையும் விண்ணப்பம் செய்துகொண்டாள் என்றபடி. இவ்வளவு செய்தும் எம்பெருமான் "தன்னருளுமாகமும் தாரானேல்", என்று ஒரு எச்சரிக்கை விடுகிறாள். தன் அருளையும் மார்பையும் எனக்குத் தந்தருளானாகில், அவன் செய்த மாயம் யாவையும் மின்னல் போன்ற இடையையுடைய இடையர் சேரியில் சொல்லி விடுவேன் என்கிறாள். ஏனெனில் கண்ணன் இடையர் சேரியில் கோபிகளுடன் உல்லாசமாகக் காலம் கழிக்கிறான்; அந்தக் கோபிகளுடன் முதலில் சொன்னால்தான் அவர்கள் இவனை வெறுப்பார்கள். அப்பொழுது தன்னைத் தேடி ஓடோடி வருவான் என்ற அங்கலாய்ப்பு, வேதியர்களிடம் சொன்னாலும் அவர்கள் அவனுக்கு அன்றாடும் வேதம் மந்திரங்கள் ஓதுவதை நிறுத்திக் கொள்வர். அவனை அன்றாடும் துதிக்கும் அடியார்களிடம் சொன்னால் அவர்கள் அந்த எம்பெருமான் எனக்குச் செய்த கொடுமை கண்டு மனமிரங்கி அவனைத் துதி பாடுவதை நிறுத்தி விடுவர். அப்படியும் அவன் என்னைத் தழுவவில்லையெனில் நாடு முழுதும் நாடறியக் கூறிவிடுவேன். அவன் எனக்குச் செய்த செயலைக் கண்டு நகைக்கட்டும் என்பதாம்.

பரகாலநாயகியின் ஆற்றாமை நிலை அடுக்கடுக்காய் மேலோங்கியே சென்றுகொண்டிருக்கிறது. என் மனதைக் கவர்ந்து; நான் எங்கெங்கு தேடினும் எனக்குடன்படாமல் மாயம் செய்யும் அந்த மணாளனை ஊரறிய உலகறியச் செய்ய வேண்டும். அவனை எல்லோரும் கைவிட வேண்டும், அப்

பொழுதுதான் என் நினைவு அவனுக்கு வரும் என்று எண்ணி னள் என்பதாம்.

... ... ... ... ... ...தான்முனநாள்
மின்னிடை யாய்ச்சியர்தம் சேரிக் களவின்கண்
தன்னு படல்திறந்து புக்குத் - தயிர்வெண்ணெய்
தன்வயி றார விழுங்கக் கொழுங்கயல்கண்
மன்னு மடவோர்கள் பற்றியோர் வான்கயிற்றால்
பின்னு முரலோடு கட்டுண்ட பெற்றிமையும்
அன்னதோர் பூதமா யாயர் விழவின்கண்
துன்னு சகடத்தால் புக்க பெருஞ்சோற்றை
முன்னிருந்து முற்றத்தான் துற்றிய தெற்றெனவும்
மன்னர் பெருஞ்சவையுள் வாழ்வேந்தர் தூதனாய்
தன்னை யிகழ்ந்துரைப்பத் தான்முனநாள் சென்றதுவும்
மன்னு பறைகறங்க மங்கையர்தம் கண்களிப்பக்
கொன்னவிலும் கூத்தனாய்ப் பேர்த்தும் குடமாடி
என்னிவ னென்னப் படுகின்ற வீடறவும்

அ - ரை:- முனம்நாள் - முற்காலத்தில். மின்இடை - மின்னல் போன்று ஒளிரும் இடை. மின்னல் போன்ற மென்மையாக நெளிந்தோடும் இடை. ஆய்ச்சியர் - ஆச்சியர், இடைமகளிர், இடைச்சியர். சேரி - சேர்ந்து வாழுமிடம் துன்னுபடல் - நெருக்கமாகக் கட்டப்பட்ட படல். படல் என் பது குடிசைகளுக்கான கதவு. களவின்கண் - திருட்டுத்தன மாக. புக்கு - புகுந்து. வயிறார - வயிறு போதுமென்று சொல்லுமளவும், வயிறு நிரம்ப. கொழுங்கயல்கண் - கொழுத்த கயல் மீன் போன்ற கண்ணினாள். மன்னும் - ஆங்கு தங்கி யிருக்கும். மடவோர்கள் - ஆயர்ப்பாடி மங்கையர். பற்றி - கண்ணனைப்பற்றி. வான்கயிற்றால் - குறுங்கயிற்றால். உர லோடு பின்னும் - உரலுடன் சேர்த்து. கட்டுண்ட பேற்றிமை- கட்டுண்டு கிடந்த பேற்றினை, அன்னது - சொல்லவொண் ணாதது. பூதம்ஆய் - பூத வடிவாய். ஆயர் - இடையர். விழ வின்கண் - விழாவின் பொழுது; இந்திர விழாவின் பொழுது.

துன்னுசகடம் - வண்டி நிறைய. சகடம் - வண்டி. புக்கபெரு சோற்றை - கொண்டு வந்து சேர்த்த பெரும் சோற்றுக் குவியலை. முன்இருந்து - சோற்றின் முன்பமர்ந்து. முற்ற - முழுமையாக. தான் - தானொருவனாகவே. துற்றிய - உட் கொண்ட. தெற்றெனவும் - தெளிவாக, தெளிந்த மணமுடை யனாய். மன்னர் பெருஞ்சவை - மன்னன் துரியோதனனுடைய பெரிய சபை. வாழ்வேந்தர் - பாண்டவர், தூதன் - தூதுவன். இகழ்ந்துரைப்ப - இகழ்ந்து பேச. முனநாள் - முன்பொரு நாள். மன்னுபறை - தோளில் கட்டிய பறை. கறங்க - ஒலிக்க. கண்களிப்ப - கண்கள் களிப்பின் மிகுதியால் நோக்க. கொன் னவிலும் - பெண்களின் மனதை கொன்றொழிக்கும். கூத்த னாய் - கூத்தாடுபவனாய். போர்த்தும் - மேலும். குடமாடி - குடக்கூத்தாடி. என்னிவனெனப்படுகின்ற - இவன் என்ன இப் படியும் கூத்தாடுகின்றானே என்று என்னும்படி, ஈடேறவும் - சீர்கேடென்ன. ஈடு - பெருமை. அறவும் - அற்றுப் போகவும்.

வி - ரை:- முன்னொரு காலத்தில் அதாவது கிருட்டிண அவதாரத்தில், மின்னல் போன்று ஒளிரும் மென்மையான இடையையுடைய ஆயர்குலப் பெண்கள் வாழுமிடத்திலே அவர்கள் குடியிருக்கும் குடிசைகளை மூடியிருந்த நெருக்க மாகக் கட்டப்பட்ட படலைத் திறந்து திருட்டுத்தனமாக குடிசையினுள் புகுந்து ஆங்கு உறியில் வைத்திருந்த தயிரையும் வெண்ணையையும் தனது வயிறு புடைக்க அள்ளி அமுது செய்தது கண்ட, கொழுத்த கயல் மீன்கள் போலும் அகன்று நீண்ட விழிகளையுடைய ஆய மகளிர், கண்ணனைப் பிடித்து, ஒரு குறுங்கயிற்றால் உடலோடு சேர்த்துக் கட்டுண்ட பேற் றினையும், ஆயர்பாடியில் இந்திரனுக்கு விழாச் செய்த பொழுது வண்டி நிறைய கொண்டு வந்த பெருஞ் சோற்றை எண்ண முடியாதவொரு பேருருக்கொண்டு அந்தப் பெருஞ் சோற்றுமலை முன்னிருந்து கொண்டு முழுமையாக உண்டு களித்த தெளிவை என்னவென்று சொல்ல, முன் சொன்ன கிருஷ்ணாவதார காலத்து,பஞ்சபாண்டவ மன்னர்கட்குத் தூத னாய், கண்டார் இகழ்ந்துரைக்க, துரியோதன மன்னர்கள்

அடங்கிய பெரும் சபையில் சென்றருளியதென்ன, மேலும் மங்கையர்கள் கண்டுகளிக்கும்படி தோளில் மாட்டிக் கொண்டிருந்த தப்பட்டை ஒலிக்க, மகளிர் மனதைக் கவர்ந்து அவர்கள் உயிரைக் கவர்வனாய் ஒன்றன்பின் ஒன்றாகக் குடங்களை எடுத்து வீசி ஆடி, என்ன இவன் இப்படியும் கூத்தாடுவானோ என்று பெருமை கெட்டிருப்பதென்ன.

''தான்'' என்பது எம்பெருமானைக் குறிப்பது. ''முனநாள்'' முன்னொருநாள், முன்னொரு காலத்து, தான் கிருஷ்ணாவதாரம் எடுத்திருந்த காலத்தில், ''மின்னிடையாய்ச்சியர்'' என்பது அவர்களின் இடையழகைச் சிறப்பிப்பது. இடையழகு ஆடவர் கண்களைப் பறிக்குமாதலின் மின்னிடையென்றனர். மின்னல் ஒளி போன்று நெளிந்து வளைந்தோடும் மெல்லிடையென்பதாம். சேரி என்பது ஒரு இனத்தவர் சேர்ந்து வாழும் பகுதி. வெண்ணெய் திருடி உண்ணுதல் கண்ண பரமாத்மாவின் லீலைகள் பலவற்றிலொன்று. குடிசையின் படலை சாத்தி வைத்துச் சென்றால் யாரும் உள்ளே நுழைய மாட்டார்கள். அத்தகு கட்டுப்பாடான வாழ்க்கை நெறியுள்ள மக்கள் கூட்டத்தில் சாத்தியிருந்த படலைக் கள்ளன்போல் திறந்து உள்சென்று வெண்ணெயையும், தயிரையும் வயிறு புடைக்க உண்டது கண்ட ஆயமகளிர், எம்பிரானை குறுங்கயிற்றால் ஒரு உரலோடு சேர்த்துக் கட்டுண்ட தன்மையென்னாம். கண்ண பிரான் குறுங்கயிற்றால் கட்டுண்ட காட்சியை மதுரகவியாழ்வார் பாடிய கண்ணன் சிறுத்தாம்பு,

''கண்ணி நுண்சிறுத்தாம் பினால் கட்டுண்ணப்
பண்ணிய பெருமாயன் என்னப்பனில்
நண்ணித்தென் குருகூர் நம்பியென் றக்கால்
அண்ணிக்கும் அமுதூறும் என்னா வுக்கே''

என்ற பாசுரத்தில் தேனமுது சொட்டச் சொட்டத் தித்திக்க வைக்கிறார். மதுரகவியாழ்வார் ''நுண்சிறுதாம்பு'' என்பதும், திருமங்கையார் ''வான் கயிற்றால்'' என்பதும் காண்க. வான்

கயிறு என்றது எதிர்மறையிலக்கணையினால் குறுங்கயிறு என்று பொருள்படும். கண்ணன் வெண்ணெயுண்ட இதே செய்தியை

"தெள்ளிய வாய்ச்சிறியான் நங்கைகாள் உறிமேலைத்
தடாநிறைந்த
வெள்ளிமலை யிருந்தாலொத்த வெண்ணெயை வாரி
விழுங்கிட்டு
கள்வனுறங்கு கின்றான்வந்து காண்மின்கள் கையெல்லாம்
நெய்,வயிறு
பிள்ளைபரமன்று இவ்வேழுலகும் கொள்ளும் பேதையேன்
என்செய் கேனோ?

என்று பெரிய திருமொழியில் பரகாலநாயகியின் முறையீட்டையும் காண்க. "வெள்ளிமலையிருந்தாலொத்த வெண் ணெய்" என்பது கண்ணன் காலத்து செல்வச் செழிப்பை உணர்த்துவதாகும்.

எம்பெருமான் என் நிலையறிந்தும் "தன் அருளும் ஆகமும் தாரான்" என்பதறிந்த திருமங்கை, இவன் முன்னொரு காலத்தில் செய்த சேட்டைகளையெல்லாம் யாவருமறியக் கூறிடும் நோக்கத்துடன் கண்ணன் களவு செய்துண்ட செய்தியைக் கூறுகிறார் பரகாலநாகி. எம்பெருமானை இகழ்ந் துரைத்ததம் தன் பக்கம் ஈர்த்தலை இங்கு காண்கிறோம். இவனை எல்லோரும் போற்றித் துதிக்கின்றனர் என்றாலும் இவன் "கள்ளன்" என்று சாடுவதும் பரகாலநாயகியின் ஆற்றாமையை வெளிப்படுத்துவதாகும் வெண்ணெய் திருடி அகப்பட்டு உரலுடன் கட்டுண்ட "பெற்றிமையும்" என்பது, இது மட்டுமன்று என்பதாகிறது. இவன் கள்ளன் மட்டுமன்று என்று அடுத்து அவன் செய்த இழிசெயல்களை அடுக்கத் தொடங்குகிறார்.

"ஆயர் விழவின் கண்" என்றது ஆயர்பாடியில் இந்திர விழாவெடுத்த பொழுது பல வண்டிகளால் கொண்டு சேர்த்த

பெருஞ் சோற்றை முழுமையாக உண்டானாதலின் இவன் பெரும் பூதம் என்பது தெளிவுபடத் தெரிகிறது என்பதாகும்.

''ஆயிரங் கண்ணுடைய இந்திரனுக்கென்று ஆயர்விழா வெடுப்ப
பாசனநல்லன பண்புகளால் புகப்பெய்த அதனை யெல்லாம்
போயிருந்து அங்கொரு பூதவடிவுகொண்டு உன்மகன் இன்றுநங்காய்
மாயன் அதனையெல்லாம் முற்றவாரி வளைத்துண் டிருந்தான் போலும்'

என்று முறையிடுதலும் திருமங்கையாழ்வாரே. பெரிய திருமொழி பத்தாம்பத்தில் ஏழாம் திருமொழியில் காண்க, ''பெருஞ்சோற்றை முன்னிருந்து முற்றத்தான் தூற்றிய'' என் பதனையும், ''முற்றவாரி வளைத் துண்டிருந்தான்'' என்பத னோடொப்பிட்டுக் காண்க. ''அன்னதோர் பூதமாய்'' என் பதையும், ''ஆங்கொரு பூதவடிவு கொண்டு'' என்பதும் காண்க. ''பெருஞ்சோற்றை முற்றத்தான் துற்றிய தெற் றனவும்'' என்றதால் முழுமையாக உட்கொண்டதால் அவன் பெரும் பூதமென்பது தெளிவானது பட்டுமன்றி என்பதாம். பூதம், சகடம் இவ்விரு சொற்களும் வடசொற்கள். துற்றிய, தூர்வு இரு சொற்களையும் ஒப்பிட்டுக் காண்க.

இந்த மகானுபவன் இதோடு நிற்கவில்லை, முன்னொரு நாள் துரியோதனாதியர் கூடியிருந்த சபையில் தன்னை இழி வாகச் சொல்லும்படியாக பாண்டவர்கட்காக தூது சென் றவன், பாண்டவர்கட்கு இவன் ஏவல் செய்பவன்.

''கோதைவேல் ஐவர்க்காய் மண்ணகலம் கூறிடுவான்
தூதனாய், மன்னவனால் சொல்லுண்டான் காணேடீ!
தூதனாய், மன்னவனால் சொல்லுண்டா னாகிலும்
ஓதநீர் வையகம் முன்னுண்டு உமிழ்ந்தான் சாழலே!'!

என்று பெரிய திருமொழி பதினோராம் பத்து ஐந்தாம் திருமொழியில் வருதலும், "மன்னவனால் சொல்லுண்டான். காணேடீ" என்று வருதலும் காண்க.

அடுத்து இவன் கூத்தாடிப் பயல் என்கின்றாள். "பறை கறங்க" அதற்கேற்ப கூத்தாடுபவன், பறையென்பது தப்பட்டையெனும் ஒரு வட்ட வடிவமான வாத்தியம். தப்பட்டை முழங்க அதற்கேற்ப ஆடுபவன். அவன் சும்மா ஆடினால் போதாதென்று குடங்களை எடுத்து வீசி எறிந்து ஆடுபவன். இவனென்ன பைத்தியக்காரனா இப்படியாடு கிறான் என்று வியக்குமளவுக்கு இவன் செயல் கேவலமானது.

குடமாடுதல் என்பது தலையில் அடுக்குக் குடமிருக்க இரு தோள்களிலும் இரு குடங்களிருக்க இரு கைகளிலும் குடங் களை ஏந்தி ஆகாயத்தில் வீசியெறிந்து ஆடுவதொரு கூத்து.

"வாணன் பேரூர் மறுகிடை நடந்து நீணில மளந்நோ னாடிய குடமும்" எனச் சிலப்பதிகாரத்திலும், "குடவல கோவல காவல" என பரிபாடலிலும் வருதல் காண்க. குடஅல என்பது கூத்தாடுதற்கு எடுத்த குடத்தினையும், பகைவரைக் கொல்லுதற்கு எடுத்த அவப்படையினுமுடையோய் என்ப தாகும்.

குடமெடுத்தாடுதல் இடையர்க்குச் செல்வம் மிகுந்தால் குடமெடுத்தாடி மக்களை மகிழ்விப்பர். கண்ணன் இடையர் சேரியில் வளர்ந்தவனாதலின் கண்ணனும் குடமெடுத்தாடு வதில் வல்லவன். ஆனால் அவன் ஆடும் கூத்த மங்கையரை மயக்க ஆடுவதாகும். இப்படியும் ஒருவன் கூத்தாடுவானோ என்று மங்கையர் கூறுமளவுக்கு இருக்கும். ஆதலின் நம் பரகாலநாயகி, "இவன் ஒரு கூத்தாடிப் பயலே" என்று எல்லோரிடமும் சொல்லி விடுவோம் என்று கூறுகிறார். ஈடறவு - ஈடு அறவு. அதாவது பெருமை நீங்கியது. பெருமை அற்றுப்போனது. இதனை வீடறவும் என வீடு அறவும் என்று, கூத்தினின்றும் நீங்காது வீட்டை முற்றிலும் மறந்த என்ற பொருளிலும் வருவது காண்க,

தென்னிலங்கை யாட்டி யரக்கர் குலப்பாவை
மன்ன னிராவணன்றன் நல்தங்கை - வாளெயிற்றுத்
துன்னு சுடுசினத்துச் சூர்பணகாச் சோர்வெய்திப்
பொன்னிறங் கொண்டு புலர்ந்தெழுந்த காமத்தால்
தன்னை நயந்தாளைத் தான்முனிந்து மூக்கரிந்து
மன்னிய திண்ணெனவும் வாய்த்த மலைபோலும்
தன்னிக ரொன்றில்லாத தாடகையை - மாமுனிக்காத்
தென்னுலக மேற்றுவித்த திண்டிறலும் மற்றிவைதான்
உன்னி யுலவா வுலகறிய வூர்வன்நான்
முன்னி முனைத்தெழுந் தோங்கி யொளிபரந்த
மன்னியபூம் பெண்ணை மடல்.

அ - ரை:- ஆட்டி - பெண். தென் இலங்கையாட்டி - தென் இலங்கைக்கு அரசி. பாவை - பதுமை போன்ற பெண் சூர்ப்பணகை. எயிறு - பற்கள். வாள் எயிறு - ஒளி வீசும் பற்கள். துன்னு - நிலைத்த. சுடு சினம் - கடும் சினம். புலர்ந்து எழுந்த காமம் - மலர்ந்தெழுந்த காமம். இராமபிரானைக் கண்டதால் மலர்ந்த காமம். பொன் நிறம் கொண்டு - தன் நிறம் மாறி வெளுத்துப் போய், காம நோயால் உடல் தளர்ந்து நிறம் மாறி. சோர்வு எய்தி - தளர்ச்சியடைந்து. தன்னை நயந்தாளை - தன்மேல் காமம் கொண்டவளை, விரும்பியவளை. முனிந்து - சினம் கொண்டு. மூக்கு அரிந்து - மூக்கை அறுத்து. மன்னிய - செய்த. திண்ணென - திண்மையான செயல் என்று மனதில் கொண்டு, ஆண்மையெனப் பெருமிதம் கொண்டு. வாய்த்தமலை - பெரிய மலை, தெரிந்த மலை. தன்னிகரொன்றில்லாத - ஒப்பற்ற, தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத. தாடகை - தாடகையென்பவளை. மாமுனி - விசுவாமித்திரமுனி. தென் உலகம் - யம உலகு. ஏற்றுவித்த - அனுப்பி வைத்த. திண்திறல் - திண்மையான வலிமை. மற்று இவைதான் - இப்படிப்பட்டவைகள்தான். இப்படியாகவுள்ள சிறுமையான செயல்கள்தான். உன்னி உலவா - நினைத்துப் பார்க்க முடியாது. உலகு அறிய - உலகத்தார் அறியும்படி. நான் - பரகாலநாயகியாகிய நான்,

முன்னி முளைத்து - முந்திக்கொண்டு, அப்பொழுதுதான் தோன்றி. ஓங்கி ஒளி பரந்த - நீண்டு வளர்ந்து ஒளியைப் பரப்பிக் கொண்டிருக்கும். மன்னிய - சிறந்த. பூபெண்ணை - அழகிய பனை. மடல் ஊர்வன் - மடலேறுவேன்.

வி - ரை:- தென்னிலங்கை மகள் அரக்கர் குலத்துதித்த பாவை போன்றவள். மன்னன் இராவணனின் அன்புக்குப் பாத்திரமான தங்கை, ஒளி வீசும் பற்களையுடையவளும், எதிரிகளைச் சுடும் சினத்தையுடையவள் சூர்ப்பணகையென் பாள். இராமனைக் கண்டதனால் மலர்ந்தெழுந்த காம நோயி னால் தன் நிறம் மாறி வெளுத்துப் போய், சோர்வு அடைந்து தன்மேல் ஆசைப்பட்ட அந்த அரக்கியை, மிகுந்த சீற்றத் துடன் மூக்கையறுத்து மானபங்கம் செய்ததேயே ஒரு பெரும் போர்வீரன் செய்த செயலாக நினைத்துக் கொண்டிருப்ப தென்ன, பெரிய மலை போன்ற உருவமுடைய, தனக்கு ஒப் பாரும் மிக்காரும் இல்லையென்றிருந்த தாடகையை மாமுனி விசுவாமித்திரனுக்காக யமலோகமனுப்பி வைத்ததில் என்ன திறமையிருக்கிறது. பெண்ணை மூக்கறுப்பதிலும் பெண் ணைக் கொல்வதிலும் என்ன வீரம் இருக்கிறது, இவன் என்ன வீரன்? இப்படியாக இவன் செய்த செயல்களை எண்ணியெண் ணிப் பார்க்கில் முடிவேயிராது. அப்படிப்பட்ட இவன் செயல் களனைத்தையும் உலகத்தார் அறிந்து கொள்ளும்படி அவன் எழுந்தருளியிருக்குமிடமெல்லாம் சென்று அறிவித்து விட்டு பரகாலநாயகியாகிய நான்; முன்னம் முளைத்து எழுந்து ஓங்கி ஒளிக் கதிர்கள்போல் விளங்கும் சிறந்த அழகிய பனையோலை கொண்டு மடலூர்வேன். இதனை;

"நாணும் நிறையும் கவர்ந்து என்னை நல்நெஞ்சம் கூவிக்கொண்டு
சேணுயர்வானத் திருக்கும் தேவர்பிரான் தன்னை ஆம்
ஆணைஎன்? தோழீ! உலகுதோறு அலர் தூற்றி
கோணைகள் செய்து குதிரியாய் மடலூர்துமே"

என்று நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழி ஐந்தாம் பத்து மூன்றாம் திருவாய்மொழியும் காண்டு ஒப்பிடுக.

பரகாலநாயகியின் ஆற்றாமை எம்பெருமானின் செயல்களை அம்பலப்படுத்துவதில் நாட்டம் கொண்டு இவன் பெண்களுக்கும் தீங்கிழைத்த படுபாவியென்று உலகறியச் செய்ய வேண்டுமென்று; சூர்ப்பணகையின் மூக்கறிந்ததையும் தாடகை வதத்தையும் இப்பொழுது ஒன்றன்பின் ஒன்றாக எடுத்து விடுகிறாள். இராமகாதையில் சூர்ப்பணகையின் மூக்கறிந்தது பின்னால் நடந்தது, தாடகை வதம் இராம இலக்குமணர் சிறார்களாக இருக்கையில் நடந்த நிகழ்ச்சி. என்றாலும் சூர்ப்பணகையின் மூக்கறுத்ததை முன்னதாகக் கூறிவிட்டு இவன் பெண் ஒருவள் மூக்கை மட்டும் அறுக்கவில்லை, ஒரு பெண்ணைக் கொலையே செய்தான் என்று தன் அங்கலாய்ப்பின் எல்லையைத் தொடுகிறாள்.

சூர்ப்பணகை ஓர் அரக்கி என்பதை முன்னம் கூறாமல், "தென்னிலங்கை ஆட்டி" என்கிறார் தென்னிலங்கைக்கே நடுநாயகியாக விளங்கும் பெண் எனக் காட்டுமுகத்தான் "தென்னிலங்கையாட்டி" என்கிறார். அரக்கர் குல மக்களைப் பொதுவாக அழகற்றவர்களாகவே குறிப்பிடுவது மரபு ஆனால் இங்கு தன்னை, மாயன் மார்புடன் தழுவாததால், அரக்கி. "அரக்கர்குலப் பாவை"யாகி விடுகிறாள். இராவணன் நல்தங்கை. அவள் பற்கள் ஒளிரும் அழகுடையனவாக "வாள் எயிறு" என்கிறார். வாள் என்ற சொல்லுக்கு இங்கு ஒளி என்பதே சரியாகப் பொருந்தும். ஏனெனில் பரகாலநாயகி சூர்ப்பணகையை ஒரு அரக்கியெனக் காணாமல் ஒரு பெண்ணாகவே காண்கிறாள். எதிரிக்கு எதிரி நண்பனாவது இயல்பு. அதேபோன்று பரகாலநாயகிக்கு சூர்ப்பணகை எழில் தோற்றமாகக் காட்சியளிக்கிறாள். இராமபிரானைக் கண்டதும், 'புலர்ந்தெழுந்த காமத்தால் சோர்வெய்திப் பொன்னிறங் கொண்டு" என்று காதல் வயப்பட்ட பெண்களுக்கு ஏற்படும் குண உடல் வேறுபாட்டையே காண்பிக்கிறார். இது சாதாரணமாக எல்லாப் பெண்களுக்கும் ஒரு அழகான ஆடவனைக் கண்டால் எழும் உணர்வு; அதற்குப் போய் இப்படிச் செய்துவிட்டானே. இப்படிச் செய்ததை ஒரு வீரமாகக் கருதிக் கொண்

டிருக்கிறானே! "மன்னிய திண் எனவும்" என்று சுட்டிக் காண் பிப்பது காண்க. "திண் எனவும்" என்பது திண்மையென்று எண்ணிக்கொண்டிருக்கிறானே என்பதாம்.

பஞ்சவாடியில் ஓர் நாள் இராமன் மலைச்சாரலை ஒட்டி ஓடும் ஆற்று நீரின் ஓட்டத்தில் மனதை ஓடவிட்டுக் கொண் டிருக்கிறான். ஆங்கு சூர்ப்பணகை இராமனைக் கண்ணுற் றாள். இந்திரனோ, சிவனோ, மூர்த்தியோ என நொந்து கொண்டாள். இராமன் அழகில் ஈர்க்கப்பட்ட சூர்ப்பணகை பேரெழில் உருவாய் அவன்முன் நின்றாள். சீதையின் எழில் தோற்றம் அவளைக் கவர்ந்தது. இவள் இருக்கும்வரை இவன் இசையானென்பதை உறுதிப்படுத்திக்கொண்டு சீதையைத் தூக்க முயன்றாள். அப்பொழுது இலக்குவன்,

"மூக்கும், காதும் வெம்முரண் முலைக் கண்களும்
முறையால்
போக்கிப் போக்கிய சினத்தொடும் புரிகுழல் விட்டான்"

இலக்குமணன் செய்தவையனைத்தும் எம்பிரான் செய்த தாகவே பொருளாதலின் பரகாலநாயகி இதனை இராமன் செய்ததாகவே வெளிப்படுத்துகிறாள். பெண்மையுணர்வுகள் மற்றொரு பெண்ணுக்குத்தான் முழுமையாகத் தெரியும். ஆணைக் கண்டு பெண் மயங்கி இன்பமனுபவித்திட விரும்பு வதும்; பெண்ணைக் கண்டு ஆண் ஆசைப்பட்டு இன்பமனுப வித்திட விரும்புவதும் இயற்கை. இதற்குப் போய் இப்படிச் செய்தானே. இவனும் தன்னை வீரனென்று எண்ணிக்கொண்டி ருக்கிறானே என்பதாம்.

தயரதன் தன் செல்வங்களுடன் இன்புற்றிருக்கையில், விசுவாமித்திர முனிவன் தோன்றி, தருவவனத்துள் யான் இயற்றும் வேள்விக்கு இடையூரா, தவம் செய்வோர்கள் வெரு வரச் சென்று அடை காம வெகுளி என, நிருதர் இடைவிலக்கா வண்ணம் செருமுகத்துக் காத்தி, என, நின் சிறுவர் நால்வ ரினும் கரியசெம்மல் ஒருவனைத் திந்திடுதி எனத் தயரதனும்

கொடுக்க, கொடுத்த மைந்தனைக்கொண்டு செல்கையில் தடாகையின் செயல் கேட்டு, இவள் பெண் அல்லள் அரக்கி, கொல்லுக என முனிவன் சொன்னதும்,

"சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம் கரியசெம்மல்
அல்லொக்கும் நிறத்தினாள் மேல்விடுதலும், வயிரக்குன்றக்
கல்லொக்கும் நெஞ்சில்தங்காது, அப்புறம்கழன்று, கல்லாப்
புல்லார்க்கு நல்லார்சொன்ன பொருள்என, போயிற்று
அன்றே"

என்று தாடகை வதத்தைக் கம்பர் சித்தரிக்கிறார்.

"வந்தெதிர்ந்த தாடகைதன் உரத்தைக்கீறி
வருகுருதி பொழிதாவன் கணையொன் றேவி
மந்திரம் கொள்மறை முனிவன்வேள்வி காத்து"

என்ற பத்தாம் பெருமாள் திருமொழியும் காண்க.

பரகாலநாயகி முன்பு சொன்ன உதாரணத்தில் எம்பிரான் சூர்ப்பணகையை மானபங்கப் படுத்துகிறான், இங்கு கொலையே செய்து விடுகிறான். ஏதோ ஒரு முனிவன் சொன்னதற்காக இப்படி பெண்ணைக் கொல்லலாமா? 'வாய்த்த மலைபோலும் தன்னிகரில்லாத தாடகை" என்று சிறப்பிக்கிறார். அவளைக் கொன்றதும் ஒரு முனிவனுக்காக, ஒரு பெண்ணைக் கொலை செய்தது "திண்திறல்" என்பது ஓர் வேடிக்கையானது என்று கூறுவதாக அமைந்துள்ளது காண்க. ,'மற்றிவைதான்" என்று இது போன்று பல உள. அவற்றை யெல்லாம் எண்ணி முடிக்க இயலாது. இவையனைத்தும் உலகறியக் கூறிவிட்டு, "முன்னி முளைத்தெழுந் தோங்கி யொளி பரந்த மன்னியபூம் பெண்ணை மடல் ஊர்வன் நான்" என்று தன் கையிலுள்ள கடைசி அத்திரத்தைப் பிரயோகித்து விடுவேன் என்கிறார் பரகாலநாயகி. ஆதலின் ஓடோடி வந்து என்மேல் விழுந்து என் அங்கமெல்லாம் பூரிக்கப் புணர்ந்து விடு என்ற விண்ணப்பதுடன் முடிக்கிறார் என்பதாம்.

கலந்ததிருக் கார்த்திகையில் கார்த்திகை வந்தோன் வாழியே
காசினியிற் குறையலூர்க் காவலோன் வாழியே
நலந்திகழா யிரத்தெண்பத்து நாலுரைத்தான் வாழியே
நாலைந்து மாறைந்தும் நமக்குரைத்தான் வாழியே
இலங்கெழு கூற்றிருக்கையிரு மடலீந்தான் வாழியே
இம்மூன்றிலிரு நூற்றிருபத் தேழீந்தான் வாழியே
வலந்திகழுங் குமுதவல்லி மணவாளன் வாழியே
வாட்கலியன் பரகாலன் மங்கையர்கோன் வாழியே.

## பெரிய திருமடல் மூலமும் உரையும் முற்றும்

## பெரிய திருமடல் முடிவில் இரு தனிப் பாடல்கள்

(கம்பர் பாடியது)

நேரிசை வெண்பா

என்னிலைமை யெல்லா மறிவித்தா லெம்பெருமான்
தன்னருளு மாகமுந் தாரானேல்—பின்னைப்போய்
ஒண்டுறை நீர்வேலை யுலகறிய வூர்வன்நான்
வண்டறையும்பூம் பெண்ணை மடல்.

அ - ரை:- என்னிலைமை - எம்பெருமானை அடைந்து விட வேண்டும் என்கின்ற ஆற்றாமை நிலைமை. அறிவித்தல் - அறிவித்த பின்பு. தன் அருளும் - அவன் திருவுள்ளமும். ஆகமும் - மார்பும். ஒண்டுறை நீர்வேலையுலகு - கடலால் சூழப்பட்ட இவ்வுலகு. பூம்பெண்ணை மடல் - அழகிய பனை மர மட்டை கொண்டு மடலூர்வேன். வண்டறையும் - வண்டுகள் பறை கொட்டி ஒலிப்பது போன்று ஒலிக்கும்.

வி - ரை:- எம்பெருமானைச் சேர்ந்துவிட வேண்டும் எனத் துடிக்கும் என் ஆற்றாமையைப் போய் அறிவித்த பின்பும் அவன் திருவுள்ளமிரங்கித் தன் திருமார்போடு அணைத்துக் கொள்ளாவிடில், கடல் சூழ்ந்த இவ்வுலகிலுள்ள அனைவரும் அறியும்படி அழகிய பனைமட்டையைக் கையிற் கொண்டு மடலூர்வேன். இத்தனியனும் பரகாலநாயகி கூறிய பாவனையில் பாடப்பட்டது காண்க.

இதையடுத்து மற்றுமொரு தனிப் பாடலும் காணப்படுகிறது. இவ்வெண்பா சில நூல்களில் காணப்படவில்லை.

மண்ணிற் பொடிப்பூசி வண்டிறைக்கும் பூச்சூடி
பெண்ணை மடப்பிடித்துப் பின்னே—அண்ணல்
திருநறையூர் நின்றபிரான் தேர்போகும் வீதி
பெருமுறையால் செல்வம் புரிந்து.

"மண்ணிற் பொடிபூசி" என்றது வாசலில் கோலமிட்டு என்பதாம். "வண்டிரைக்கும் பூச்சூடி" என்றது வண்டுகள் மொய்க்கும் அன்றலர்ந்த மலர்களால் தன்னை அலங்கரித்துக் கொண்டு என்பதாம். இத்தனை அழகான பெண்ணை இப்படுபாவி பார்க்காது அவளைச் சேராது காலம் கடத்துகிறானே என்று பார்ப்போர் கூறவேண்டுமென்பதற்காக அலங்கரித்துக் கொள்கிறாள் என்பதாம். பனைமட்டையைப் பிடித்து திருநறையூர்பிரான் தேரில் வலம் வரும் வீதியெங்கும் சென்று அவன் மனத்தை மாற்ற முயலுவேன் என்றபடி. தேர் போகும் வீதியெங்கும் செல்வேன் என்று இங்கு கூறுவதும் நம் பரகாலநாயகி கூறுவதே போன்றதாகும்.

தனிப் பாடல் மூலமும் உரையும் முற்றும்



திருமங்கை மன்னர் திருவாயமுதுதிர்த்த சிறிய திருமடல் பெரிய திருமடல் மூலமும்; கோக்கலை ஜேராஜன் உரையும் முற்றும்.



திருமங்கை மன்னர் திருவடிகளே சரணம்!



இத்திவ்யப்பிரபந்தம் கூறும் சமய நெறியில் திளைத்து திருமங்கையாழ்வார் திருவுள்ளக் கருத்தைப் பாமர மக்களும் கண்டுணர்ந்து எம்பெருமானருள் பெற்று பெருவாழ்வு வாழ வேண்டும் எனும் பெருநோக்குடன் எளியமுறையில் உரையிசைத்து வெளியிட்ட கோக்கலை ஜேராஜன் அவர்கள் அதிவீரராமபாண்டியனாரின், "நைடதம்" எனும் பெருங் காப்பியத்துக்கு உரையெழுதி வெளியிட்டுள்ளார். இந்து மகா சமயத்தில் வழக்கில் உள்ள சொற்களைத் திரட்டி, "இந்து சமயச் சொல் அகராதி" எனும் நூலையும், நம் முன்னோர் எவ்வெவ்வாறு இறைவனை வழிபட்டு மகிழ்ந்தனர் எனக் காண "இலக்கியத்தில் கடவுள் வாழ்த்து" எனும் திறனாய்வு நூலையும், நாம் உண்ணும் உணவுப் பண்டங்களின் நன்மை தீமைகளை மக்களுக்குணர்த்த, "உண்பொருள் குண அகராதி" எனும் நூலையும், ஆயிரத்திற்கும்மேற்பட்ட கனவின்பலன்களை அகரவரிசைப்படுத்தி, "கனவுக் கையகராதி" எனும் நூலையும், மக்களை அறநெறியில் செலுத்தும் அதிவீரராமபாண்டிய னாரின் "வெற்றி வேற்கை"யின் பாடல்களையே தலைப்பாகக் கொண்டு, "நறுந்தொகை விருந்து" எனும் நூலை இரு பந்தி களாகப் படைத்துத் தமிழ்கூறும் நல்லுலகுக்கீந்துள்ளார்.

சேலம் மாவட்டம் திருச்செங்கோடு வட்டம் கோக்கலை யெனும் சிற்றூரில் அமரர்கள் கவி கந்தசாமி ஆசிரியருக்கும் தைலாயம்மாளுக்கும் மூன்றாவது மகவாகப் பிறந்த இவர் சென்னை பல்கலைக் கழகத்து பி.காம் பட்டதாரி. சென்னை இணைப்புப்பெட்டித் தொழிற்சாலையில் சீனியர் அக்கவுன்ட்ஸ் ஆபீசராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற இவரது படைப்புகள் காலத்தால் அழியாதவை.